உ

திருவருள் துணை.

# இறந்தவர்கள், வாழும் நிலையம் பேசும் முறையும்.

---

இந்நூல் ஆசிரியர்:

மதுரை, திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்
291-ஆவது குருமகா சந்நிதானம்
திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

நிறுவிய தலைவர்:

திருவருள் தொண்டர் சபை, குலசேகரன்பட்டினம்.
திருவருள் உயர்நிலைப் பள்ளி, குலசேகரன்பட்டினம்.
திருவருள் தவநெறி மன்றம், மதுரை.
இந்து தர்மப் பிரசார சங்கம், சென்னை.



வெளியிடுவோர்:—

**திருவருள் தவநெறி மன்றம்,**
70, தெற்கு ஆவணிமூல வீதி,
மதுரை.

சார்வரி—ஆனி] (இரண்டாம் பதிப்பு) [1960—July



மதுரை, திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்
291ஆவது குரு மகா சந்நிதானம்
திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

திருவருள் துணை

## பொருளடக்கம்.

உ

திருவருள் துணை.

# இறந்தவர்கள், வாழும் நிலையும், பேசும் முறையும்.

## முன்னுரை

ஒருவன் எந்த ஊருக்குச் செல்லுகின்றதாயிருந்தாலும், அந்த ஊருக்குள்ள நேரான வழியையும், அங்கு எடுத்துச் செல்லவேண்டிய சாமான்கள் என்னென்ன என்பதையும், தெரிந்துகொண்டுதான் பிரயாணம் செய்கிறான். இவ்வுலக வாழ்க்கை முடிந்தவுடன், ஒவ்வொருவரும் சென்று சேரப்போகிற பேரூருக்குள்ள நேரான வழியைப் பற்றியும், அவ்வூருக்கு இங்கிருந்து தயாரித்துக் கொண்டு போகவேண்டிய பொருள் யாது என்பதைப் பற்றியும், சந்தேக விபரீதமின்றித் தெரிந்து கொள்ளவேண்டியது, உலகிலுள்ள அறிவுடைய மக்களின் இன்றியமையாத கடப்பாடாகும்.

அரசனாக இருந்தாலும் ஆண்டியாக இருந்தாலும் பிறப்புள்ள எவருக்கும் இறப்பு உண்டு என்பது யாவரும் அறிந்ததே. குழந்தை உண்டான ஒரு பெண்மணிக்கு வயிற்றிற்குள் இருக்கிற குழந்தையைப் பெற்றெடுப்பது எவ்வளவு மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சியோ, எவ்வளவு இன்றியமையாத நிகழ்ச்சியோ, அதேபோல ஸ்தூல உடம்பைப் பெற்றிருக்கிற நாம் (அதை நாமாகச் சேதம் செய்யாமல்) அதைவிட்டுப் பிரிந்து, பாரம் ஒன்றும் இல்லாத ஆவியுடலோடு மேலுலகம் சென்று, அங்குள்ள வாழ்க்கையில் புகுவதும், மிகவும் மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சியே, மிகவும் இன்றியமையாத நிகழ்ச்சியே என்பதை, எல்லா மதத்தின

ருக்கும், எல்லாத் தேசத்தினருக்கும் அறிவிக்கவே இந்நூல் வெளிவருகின்றது.

"அறிவுடையா ராவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்" என்று திருவள்ளுவர்
கூறுகிறார்.

அதில் அறிவுடையவர்கள் பின்னால் நடக்கக் கூடியவைகளை முன்னரே தெரிந்து, தற்பாதுகாப்புடன் நடந்து கொள்ளுவார்கள்; அறிவில்லாதவர்கள் அப்படி அறிந்து கொள்ள விரும்பமாட்டார்கள் என்கிறார். அப்படி நடந்து கொள்ளாதவர்க் கெல்லாம் வாழ்க்கையிலே நடைபெறுகின்ற சம்பவங்களெல்லாம் பெரிய அதிர்ச்சியையும், தாங்க முடியாத மனக் கலக்கத்தையும் துன்பத்தையும் விளைவிக்கும் என்பதை வலியுறுத்தவே,

"எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்" என்று அருளியிருக்கிறார்.

பொதுவாக மனிதராகப் பிறந்த எவரும் கஷ்டப்பட்டுப் படிப்பதும், உடலை வருத்தி உழைப்பதும், மனதினால் சிந்திப்பதும், தம்முடைய பிற்கால வாழ்க்கை மேம்பாடு உடையதாகவும், யாவராலும் பாராட்டிப் பேசப்படக் கூடியதாகவும் இருக்கவேண்டும் என்ற ஒரே நோக்கத்தையே அடிப்படையாகக் கொண்டவையாகும். அப்படிப்பட்ட நோக்கத்தோடு படிக்கின்றவர்களும், உழைக்கின்றவர்களும், சிந்திக்கின்றவர்களும், அவ்விதம் உழைக்காமலும், படிக்காமலும், சிந்திக்காமலும் இருக்கின்றவர்களைவிட மேல் நிலையில், இவ்வுலகத்தில் வாழ்ந்துவருகிறார்கள் என்பதை யாரும் மறுக்கமுடியாது. படித்தவன் உத்தியோகத்திலிருப்பதும், படியாதவன் உத்தியோகத்திற்கு அருகதையற்றவனாக இருப்பதும் யாவரும் அறிந்ததே.

அதேபோல இறப்பு என்பது எப்பேர்ப்பட்டவர்களுக்கும் எந்தநேரமும் வரக்கூடிய சம்பவம் என்பதை உணர்ந்த அறிவுடைய ஒருவன், இறப்பு என்பது எப்படி நிகழ்கின்றது, இறந்தபின் தூல உடம்பு எரிக்கப்பட்டோ புதைக்கப்பட்டோ அழிந்துவிட, அவ்வுடலை உள்ளேயிருந்து இயக்கிய ஜீவான்மா இவ்வுலகத்தில் செய்த புண்ணிய பாவத்துக்குத்தக்கபடி சுவர்க்கத்திற்கும், நரகத்திற்கும் கொண்டுபோகப்பட்டு, அங்கே உள்ள இன்பதுன்பங்களை அனுபவிக்கிறது என்று நூல்களில் கூறியிருப்பது உண்மையா, பொய்யா? உண்மையாயிருக்குமானால் அப்படி இன்ப துன்பம் அனுபவிப்பதற்கு உடல் வேண்டுமே? இறந்தபின் நமக்கு ஒரு உடல் இருக்கிறதா? அதற்குரிய உடல் இறந்தபின் புதிதாகக் கொடுக்கப்படுகிறதா? அல்லது தூல உடலுக்குள்ளே முன்னமேயே இருந்த உடல் இறந்த பொழுது ஜீவான்மாவோடு செல்லுகின்றதா? தூல உடலின் உள்ளிருந்தே ஜீவான்மாவோடு செல்லுகின்ற உடல் ஒன்று உண்டு என்பது உண்மையானால் நாம் அவ்வுடலைப் பார்க்கமுடியுமா? இறந்தபின் நமக்கு ஓர் உடல் உண்டு என்பதும், தொடர்ந்த வாழ்க்கை உண்டு என்பதும் உண்மையாகில், அந்த வாழ்க்கையை இன்பமுடையதாக ஆக்கிக் கொள்ளுவதற்கு இங்கு நாம் என்ன செய்ய வேண்டும்? என்பனவற்றைச் சந்தேக விபரீதமின்றி முன்னரே தெரிந்து கொண்டாலன்றி, அதற்குத் தகுந்த முயற்சிகளைச் செய்ய மனமும் துணிவும் வருமா?

இவ்வுலகத்தில் நாம் பாடுபடுவதெல்லாம், பொருளை நல்வழியில் சேகரித்து அதனால் வாழ்க்கையை இன்பமாக நடத்திக் கொள்ளலாம் என்ற நோக்கங் கொண்டேயாகும். அதுபோலவே இங்குள்ள பொருளை, பொன்னை, விளைநிலத்தை, உடலை, உடைமைகளை, அதிகாரங்களை இறந்தபின் நாம் செல்லுகின்ற இடத்திற்குக் கொண்டுபோக முடியாதென்பதை உணர்ந்து, அவற்றையெல்லாம் இயன்ற அளவு உலகத்திலுள்ள மக்களுக்கு உபகாரமாகும்படி

பயன்படுத்தி, தான தருமங்களைச் செய்து, ஆண்டவனது அருளையும் அதனுல் விளையும் புண்ணியத்தையும் சேகரித்துக் கொண்டால், அப் புண்ணியம் இறந்தபின்னுள்ள வாழ்க் கையில் நமக்கு மேன்மையான நிலையைத் தருகின்றது என் பதைக் குறித்தே திருவள்ளுவரும்,

''அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
இவ்வுலக மில்லாகி யாங்கு'' என்று அருளியிருக்கிருர்.

நாம் இறந்த பின் எந்த உடலோடு வாழப்போகின் ருேமோ, அந்த உடல் நாம் தூல உடலோடு இருக்கிற காலத்திலேயே பார்க்கக் கூடியதாகவும் அறியக்கூடிய தாகவும் ஆண்டவன் அமைத்திருக்கிருன். இது உல கத்திலுள்ள எல்லா மொழியாளருக்கும், எல்லா மதத் தினர்க்கும் பொதுவான உண்மை. இறப்பைப்பற்றிய பயத்தையும் பீதியையும், மனக் கவலையையும் அறவே ஒழித்துக் கட்ட இந்த ஆவி உலக ஆராய்ச்சி துணை புரிவது போல் உலகத்தில் வேறு எவ்வித ஆராய்ச்சி யும் துணை புரிய முடியாதென்று உறுதியாகச் சொல்ல லாம்.

எத்தனை புத்தகங்களைப் படித்தாலும் பெற முடியாத கடவுள் பக்தியை, இறந்தவர்களில் அருள் உலகத்தில் இருக்கின்ற சுற்றத்தார்களும், நண்பர்களும் நமக்கு உண் டாக்கி விடுகிருர்கள். இறந்த பின்னரும் ஆவி உலகத்தி லுள்ளவர்களுக்கு, இந்நில உலகத்திலுள்ள சுற்றத்தார்களி டத்திலும், நண்பர்களிடத்திலும் உள்ள அன்பும் பிரியமும் அற்று விடுவதில்லை என்பதையும், சுற்றத்தாரும் நண்பர் களும் இங்கே செய்கின்ற காரியங்களை, இறந்தவர்கள் அறிந்து கொண்டிருக்கிருர்கள் என்பதையும், இவ்வுண்மை களை அறிந்துகொள்ளாத நமக்கு, அவற்றை அறிவிக்க, இறந்தவர்கள் மிகவும் ஆத்திரமுள்ளவர்களாகவும், ஆசை யுள்ளவர்களாகவும், அதற்குரிய சந்தர்ப்பம் எப்பொழுது

கிடைக்குமென்று எதிர்பார்த்திருப்பவர்களாகவும் இருக்கிறார்கள் என்பதையும் வலியுறுத்துகிறார்கள்.

ஊனக் கண்களுக்குத் தெரியாத உருவங்களும் (Television) ஊனக் காதுகளுக்குக் கேளாத சப்தங்களாகிய (Radio) வானொலி அறிவிப்புக்களும் பிரசங்கங்களும் பாட்டுகளும் உலகெங்கும் சென்று கொண்டிருக்கிற உண்மைகளை அவற்றிற்குரிய கருவிகள் எவ்விதம் யாரும் மறுக்க முடியாமல், நிரூபித்துக் காட்டுகின்றனவோ, அதேபோல இறந்தவர்கள் ஆவி உடலோடு வாழ்க்கை நடத்துவதும், அவர்களுக்குப் பூலோகத் தொடர்பு விட்டு விடாதிருப்பதும், உணர்ச்சி இருப்பதும், அன்பு இருப்பதும், அறிவு இருப்பதும், பிரியம் இருப்பதும் நம்முடைய ஊனக் கண்களுக்கும் காதுகளுக்கும் அறியமுடியாதிருந்தாலும், ஆவி உலகத்தோடு தொடர்புவைத்துக்கொள்ளக்கூடியவர்களுக்கெல்லாம் இறந்தவர்கள் மறக்கமுடியாதவண்ணம் உணர்த்தி விடுகிறார்கள். எத்தனை புத்தகப் படிப்பும் இவ்விதம் செய்யமுடியாது என்பது அனுபவ உண்மை.

இப்பூவுலகில் பிறந்த ஐந்தாம் நாள் இறந்து போன ஒரு பெண் குழந்தை, பல வருஷங்கள் இவ்வுலகத்தில் மக்கள் தொண்டும் கடவுள் தொண்டும் செய்துவந்த ஒரு பெரியாரைவிட மேலான நிலையில் ஆவி உலகத்தில் வாழ்ந்து, மற்றவர்கள் அறிவிக்கமுடியாத மேலுலக அற்புதங்களை எல்லாம் அறிவித்ததென்றால், குழந்தைகளைப் பறிகொடுத்தவர்களுக்கு அது எவ்வளவு ஆறுதலைக் கொடுக்கக் கூடியதென்று சிந்தித்துப் பாருங்கள்.

எல்லாம் வல்ல ஆண்டவன் நம்மைப் படைத்து, காத்து, அழிக்கின்ற உண்மைகளை எல்லாம் உள்ளவாறு உணர்ந்துகொள்ள, ஆவி உலக ஆராய்ச்சியும் தொடர்பும் பெரிதும் துணைபுரிகின்றன. கண்ணுக்குத் தெரியாத பல அதிகாரிகளைக்கொண்டே, ஆண்டவன் நம்மை ஆண்டு

வருகின்ருன் என்பதையும், கண்ணுக்குத் தெரியாத காரணத் திஞலே நம்மீது கருணையுடைய ஆண்டவனும் அவனுடைய அதிகாரம் பெற்றவர்களும், இல்லை என்று எண்ணுவதும் சொல்லுவதும் நடப்பதும் எவ்வளவு பேதமை என்பதையும் உணரச்செய்கின்றது. நாம் எண்ணுவதையும் பேசுவதையும் செய்வதையும், இறந்துபோன சுற்றத்தாரும் ஆண்டவனும் ஆண்டவனுடைய அதிகாரம் பெற்ற சகலரும் தெரிந்துகொண்டிருக்கிருர்கள் என்ற உண்மை உணர்ச்சியை உண்டுபண்ணுகிறது. அதனுல் நம்மை ஒருவரும் கவனிக்கவில்லை, பார்க்கவில்லை என்ற எண்ணம் மாறுகின்றது. ஒழுக்கம் தலை சிறக்கின்றது. விண்ணவரை ஏவல் கொள்ளலாமென்பதையும், வேருருவர் காணுமல் உலகத்து உலாவலாம் என்பதையும், பகல் இரவு அற்று வாழலாமென்பதையும், மற்ருருவர் சரீரத்திலும் புகுதலாம் என்பதையும், தாயுமானவர் உணர்ந்து பாடியது போல் நம்மையும் உணரும்படி செய்விக்கின்றது.

இறந்தவர்களை நாம் நினைத்தால்தான், அவர்கள் நம் அருகில் வந்து நாம் எதற்காக நினைத்தோம் என்பதைக் கவனித்து, உதவிபுரியக்கூடிய அளவில் உதவிபுரிகிருர்களென்பதை அனுபவமாக அறிவதைக் கொண்டே, ஆண்டவரும் நாம் நினைத்தால்தான் நம் அருகில் வருவார் என்பதும், நம்முடைய மனத்தில் கோயில் கொள்ளுவார் என்பதும், நமக்கு வேண்டிய உதவிகளைப் புரிவார் என்பதும் திண்ணமாக உறுதிப் படுத்தப்படுகின்றன. நாம் கனவில் தொழிற்படுவது ஒரு சரீரம் கொண்டே. அந்தச் சரீரமே ஆவியுடல், சூக்குமசரீரம், யாதனுசரீரம், உள்ளுடல் என்று சொல்லப் பெறுகிறது. அது பாரமில்லாதது; அது நினைத்தவிடங்களுக்குத் தட்டுத்தடையின்றிச் செல்லக் கூடியது; அது தூல உடலை இயக்கக்கூடியது; அது தூல உடலைவிட்டு நீங்கிய பின் ஆவி உலகத்தில் தனித்து இயங்கக்கூடியது.

இறந்தபின் ஆவி உடலில் உள்ள ஒருவன், இப் பூவுலகிலுள்ள வேறொரு சரீரத்தில் புகுந்து, தன்னுடைய கருத்தைப் பூலோகத்தாருக்கு அறிவிக்கமுடிகின்றது என்ற உண்மைகளை யார் யார் தெரிந்து உணர்ந்துகொள்ளுகிறார்களோ, அவர்கள் மட்டுமே, ஒரு நாமம், ஓருருவம், ஒன்றுமில்லாத பரம்பொருள், தான் நினைத்ததொரு வடிவத்தை எடுத்துக்கொள்ள முடியும்; அது பாரமில்லாத அருள் வடிவமாகும்; அது நினைத்த இடங்களுக்குத் தட்டுத்தடையின்றிச் செல்லமுடியும்; இந்த உலகத்தையும், உயிர்களையும், வானத்திலுள்ள கிரகங்களையும் அண்டங்களையும் இயக்கக்கூடியது; அது இவற்றிற்கு அப்பாற்பட்டுத் தனித்தும் இயங்கக்கூடியது; அது பக்குவமுள்ளவருடைய ஒரு தூல உடலில் புகுந்து, அவர் செயல் தம் செயலாக, அவர் சொல், தம் சொல்லாக, அவர் பாட்டுத் தம் பாட்டாகச் செய்யவும், சொல்லவும், பாடவும் முடியும் என்ற அநேக பரம இரகசியங்களை உள்ளவாறு உணரவும் தெளியவும் கூடும். நமக்கே பாரமில்லாத உடல் உண்டு என்பதை உணர்ந்தால் அல்லவா, ஆண்டவனுடைய அருள் உடல்களும், ஆவி உடல்களைவிட மிக மென்மையும் நுண்மையும் உடையவை என்பதை உணரக்கூடும்?

இவற்றையெல்லாம் சந்தேக விபரீதமில்லாமல் தெரிந்துகொள்ளாததாலேயே, உருவ வழிபாட்டைப் பற்றிப் பலரும் பலவிதமாகக் கருதவும், பேசவும் ஏற்பட்டிருக்கின்றது. தன்னையறிந்தால் தலைவனை அறியலாம் என்ற உண்மை இதனாலேயே பிறந்தது இவை சம்பந்தமாக, எம்முடைய சொந்த அனுபவங்களில் சில பிற்பகுதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இறந்தவர்கள் நம்மோடு தொடர்புவைத்துக் கொள்ளவும், பேசவும், முயற்சிக்கின்ற முறைகளைப் பற்றியும், நாம் அவர்களோடு பேசுவதற்கு என்னென்ன செய்யவேண்டும் என்பனவற்றைப் பற்றியும் விளக்கம் இறுதியில் கொடுக்

கப்பட்டிருப்பது ஒரு முக்கிய காரணத்திற்காகவே. பேசு கிற முறைகளை மாத்திரம் அறிந்துகொண்ட அன்பர்கள், இறந்தவர்களோடுபேச ஆரம்பித்து, இறந்தவர்கள் ஊனு டம்பை விட்டு, உள்ளுடம்போடு இருக்கிற மனிதர்களே, என்ற உண்மையை மறந்து, அவர்களைத் தெய்வ மெனக் கருதி, அநேக விஷயங்களைக் கேட்டு ஏமாற்றம் அடைந்து விடுவதுமல்லாமல், ஆவி உலகத் தொடர்பையே பழிக்கவும் ஆரம்பித்துவிடுகிறார்கள். ஆத்திரக்காரருக்குப் புத்தி மட்டு என்பது உண்மையாகிவிடுகின்றது. ஆதலால் இதை ஆராய் கின்ற அன்பர்கள் இறந்தவர்களோடு பேசும் முறைகளைக் கையாளுவதற்கு முன்னதாக, இறந்தவர்கள் வாழும் நிலை யைப் பற்றிச் சந்தேகம் தீரும் வகையில் படித்துத் தெளிந்து கொண்டால், வெற்றிகரமாக ஆவி உலகத்தோடு தொடர்பு வைத்துக்கொள்ள முடியும்; பின்னர் பழிப்புக்கும் ஏமாற் றங்களுக்கும் இடம் ஏற்படாது என்பதை நன்றாய் உணர்ந்துகொள்ளவேண்டும். பேசும் முறைகளின் விளக் கம் இறுதியில் அமைத்துக்கொடுத்திருப்பதற்குக் காரணம் இதுவேயாகும். பொறுமையே வெற்றிக்கு இன்றியமையாத சாதனமாகும்.

இறந்தவர்களுடன் பேசிவந்த காரணத்தால், இறப் பைப்பற்றிய பயமும், திகைப்பும் தீர்ந்துவிட்டன. ஆவி உலகத்திற்கு வேண்டிய அருளை இப்பூவுலகில் பொருளைக் கொண்டும், உடைமைகளைக் கொண்டும், அவ்விரண்டும் இல்லாதவர்கள் தங்கள் தங்கள் உடலைக்கொண்டும், வாயைக்கொண்டும், மனதைக் கொண்டும் சம்பாதிக்கமுடி யும் என்ற எண்ணம் திண்ணப்படலாயிற்று. இவ்வுலகத் தில் நல்ல நிலைமையில் வாழ்வதற்குப் பொருள் எவ்வளவு இன்றியமையாததோ, அதுபோலவே, ஆவி உலகத்தில் நல்ல நிலையிலிருப்பதற்கும், மறுஜென்மம் ஏற்பட்டால் அதில் நல்ல அதிர்ஷ்டசாலியாகப் பிறப்பதற்கும், அருள் இன்றியமையாதது என்ற உண்மை வலுப்பெறலாயிற்று. உறங்கப்போவதற்கு எவ்வளவு நிம்மதியாகப்போவோமோ,

அவ்வளவு நிம்மதியாக மலர்ந்த முகத்தோடு மரணத்தை எதிர்நோக்கும் திண்மை வரலாயிற்று. உலகத்தில் வாழும் பொழுதே புளியம்பழமும் தோடும்போல, தாமரை இலை யில் நிற்கும் தண்ணீர்போல, ஒட்டியும் ஒட்டாமலும், வாழக்கூடிய தன்மையைத்தந்து, பட்டினத்தடிகள் "செத் தாரைப் போலத்திரி" என்று சொன்னதின் உட்கருத்தை உணர்த்தி, அதைச் செயல் முறைக்குக் கொண்டுவரவும்

"யாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற துடிப்பும் "தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு காமுறுவர் கற்றறிந்தார்" என்ற வேட்கையுமே இப்புத் தகத்தை எழுதத்தூண்டிற்று. உண்மையை உணர்ந்து, அதன்படி ஒழுகி, மேன்மையடைய வேண்டுமென்று விரும்புகிற மக்கள் எந்த இனத்தவராயிருந்தாலும், எந்த மதத்தவராயிருந்தாலும் இதில் கூறியிருப்பனவற்றை நன் ருகப் படித்து, சந்தேகங்கள் தோன்றுமாளுல், அந்தப் பகுதியை ஊன்றிக் கவனித்துப் படித்துப்பார்த்து, அதன் மேலும் தெளிவு ஏற்படாவிட்டால், நேரில் வந்தோ அல்லது பதிலுக்குரிய முத்திரை அனுப்பிய கடித மூலமாக எழுதிக் கேட்டோ, விளக்கம் பெற்றுத் தெளிந்துகொள்ளலாம். உலகத்திலுள்ள மக்களின் மரணபயத்தைத் தீர்த்து, உற்ருர் உறவினர் இறந்துவிட்டால் ஏற்படும் மனத்துயரத்தை நீக்கி, கொலை, தற்கொலை, முதலியவற்றைத் தடுத்து. அஞ்சாத நெஞ்சத்தோடும், மனமகிழ்ச்சியோடும், மக்கள் தொண்டும், தேசத் தொண்டும், தெய்வத் தொண்டும் சிறப்புற நடை பெறவும், எந்த நிலையிலும் மனம் கலங்காத உள்ளம் பெற வும், இந்த ஆராய்ச்சி, மக்களைத் தூண்டிவிடுமாளுல், அதுவே நாம் விரும்பும் விருப்பமாகும். எல்லாம் வல்ல எம்பெருமான் திருவருள் புரிவாராக.

உ

திருவருள் துணை

# இறந்தவர்கள், வாழும் நிலை.

## 1. தூல உடலை உயிர் இயக்கும் தன்மை.

இறந்தவர்களுடன் பேசும் உண்மையை, எம்மதத்தவரும் சந்தேக விபரீதமில்லாமல், விளங்கிக் கொள்ளுவதற்கும், ஒப்புக்கொள்ளுவதற்கும் முன்னதாக, இறந்து போன அன்பர்களெல்லாம் எப்படி இருக்கிறார்கள் என்பதை அறிந்துகொள்ளவேண்டியது அத்தியாவசியமாகும்.

இந்த உலகத்திலே நடமாடித்திரிகின்ற தூல உடலை, இறந்தபிற்பாடு சிலர் சுட்டு எரித்துவிடுகிறார்கள். சிலர் பூமியில் புதைத்து, பூமியிலுள்ள சூட்டினாலே நாளடைவில் தகிக்கப்பட்டு, மண்ணோடு மண்ணாய்ச் சேர்ந்து போகும்படி செய்துவிடுகிறார்கள். பாரசீகர்கள் போன்ற அன்பர்கள், மரணத்தின் பின் தூல உடலை அதற்கென்று கட்டப்பட்ட "மட்டப்பா" கட்டிடத்தின் உச்சியில் போட்டு, கழுகு காக்கை போன்ற பல பறவைகளுக்கு உணவாகும்படி செய்துவிடுகிறார்கள். ஆகவே. உலகத்தில் எந்த மதத்தவரும் எந்தத் தேசத்தவரும், இறந்த பின் கிடக்கின்ற தூல உடலைத் திரும்பவும் பாதுகாத்து வைத்திருப்பதில்லை.

நான்குபேர் சேர்ந்து தூக்கப்படவேண்டிய இந்தத் தூல உடலை, உயிர், ஜீவன், ஜீவாத்மா என்று சொல்லப் பெறுகின்ற ஒரு சக்தி, உடலின் உள்ளேயிருந்து பலவிதமாகத் தொழிற்படுத்துகின்றது. ஆனால் அந்த உயிர்ச்சக்தி உடலிலே எங்கே தங்கியிருக்கின்றது, எப்படி ஒவ்வொரு

அவயவத்தையும் தொழிற்படுத்துகின்றது, என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளாமல் இருக்கிறோம்.

**2. ஆவி உடலிலேயே உயிர் கனவு காண்கின்ற உண்மை.**

நாம் விழித்துக்கொண்டிருக்கும்பொழுது, நம்முடைய தூல உடல் செய்கிற காரியங்களை எல்லாம், நாம் தூங்கும் பொழுது, சொப்பன நிலையில் தூல உடலின் சாயலைப் போன்ற இன்னொரு உடல், எல்லாக் காரியங்களையும் செய்வதைக் காண்கின்றோம். சொப்பனத்தில் காணப்படுகின்ற உடலானது தூல உடலிலுள்ள நிறத்தை உடையதாக இருக்கிறது. அதில் உடம்பின் உயரம் தெரிகின்றது. உடம்பின் பருமனும் தெரிகின்றது. தூலஉடலைப்போன்ற தோற்றமும், சாயலும் காணப்படுகிறது. சொப்பனங் காணுகிற உடலில், கண்களால் பார்க்கிறோம்; காதுகளால் கேட்கிறோம்; வாயினால் பேசுகிறோம்; நாக்கினால் ருசி பார்க்கிறோம்; சரீரத்தினால் தொட்டு அனுபவிக்கிற இன்ப துன்பங்களை நுகர்கிறோம். சொப்பனத்திலே தொழிற்படுகிற உடல்கொண்டு பயப்படுகிறோம், சிரிக்கிறோம், அழுகிறோம், பாடுகிறோம், ஆடுகிறோம், பேசுகிறோம், நடமாடுகிறோம், ஓடுகிறோம். இன்னும் தூல உடல் படுக்கையிலேயே கிடக்க, பல்வேறு இடங்களுக்குச் சென்று வருவதாகக் காண்கின்றோம். இந்த விதமாகத் தொழிற்படுகின்ற சொப்பன நிகழ்ச்சிகள் வெறும் மனோபாவமா? அல்லது உண்மையிலேயே தூல உடல் போன்ற இன்னொரு உடல் கொண்டு நடத்தப்பெறுகின்ற நிகழ்ச்சிகளா? என்பதை ஆராய வேண்டும்.

நம்முடைய ஸ்தூல உடல் தொழிற்படும்பொழுது, அதில் ஒரு காரியத்தைப் பற்றி யோசிக்கவும், ஆழ்ந்து சிந்திக்கவும், நம்முடைய மனமும் அறிவும் உதவிபுரிகின்றன. இனி நாம் ஒரு காரியத்தை உடலைக் கொண்டு செய்யும்

பொழுது, நம்முடைய அவயவங்களாகிய கால், கை, வாய், கண், மூக்கு, செவி முதலிய ஒவ்வொன்றும் தத்தம் தொழில்களைச் செய்கின்றன. ஆனால் எந்த உறுப்பு தொழிற் படவேண்டுமானாலும், மனமும் அறிவும் சம்பந்தப்பட்டுத் தான் தீரவேண்டியதாயிருக்கிறது. ஆகவே ஸ்தூல உட லில், மனமும், புத்தியும், சித்தமும், அறிவும், தனியாகத் தொழிற்படவும் காண்கின்றோம். மற்ற அவயவங்களைத் தொழிற்படுத்தும்பொழுது, அவற்றோடு சேர்ந்து அவற் றைத் தொழிற்படுத்தவும் காண்கின்றோம். இதிலிருந்து மனோ நிகழ்ச்சி வேறு, உடல் நிகழ்ச்சி வேறு என்பதை உணரலாம். மனம் தொழிற்படும்பொழுது, பிறர் யாரும் தெரிந்துகொள்ள முடியாது. உடல் தொழிற்படும்பொழுது யாவரும் தெரிந்துகொள்ளமுடியும். மனம் தொழிற்படும் பொழுது, உடலிலுள்ள அவயவங்களின் உதவி மன திற்குத் தேவையில்லை. ஆனால் உடல் தொழிற்படும் பொழுது, மனதினுடைய உதவி தேவைப்படுகின்றது.

இதுபோலவே சொப்பனம் காணும்பொழுதும், மனம் தொழிற்படுவதையும். ஸ்தூல உடல்போன்ற இன் னொரு உடல் தொழிற்படுவதையும். நாம் காண்கின்றோம். உதாரணமாக கனவில் (சொப்பனத்தில்) ஒரு கள்ளன் வருவதாகக் காணும்பொழுது, கண்கள் கள்ளனைப் பார்க் கின்றன; மனம் நாம் அவனை எதிர்ப்பதற்கு என்ன செய்ய வேண்டும், அவன் என்ன செய்கின்றான், என்றெல்லாம் சிந்திக்கின்றது; நம்முடைய அருகிலே வரும்வரை பார்த் திருந்து காலினாலோ, கையினாலோ, அவனை உதைக்கின் றோம். இதில் கண்கள் கள்ளனைப் பார்த்ததும், கையினாலோ காலினாலோ உதைத்ததும், உடல் நிகழ்ச்சி; அவன் என்ன செய்யப் போகின்றான், அதற்கு நாம் என்ன செய்யவேண் டும், என்று தீர்மானிப்பது மனோ நிகழ்ச்சி. ஆகவே. கன வில் தொழிற்படுகின்ற உடலிலும், மனோ நிகழ்ச்சியும், உடல் நிகழ்ச்சியும் இருக்கின்றன என்று உணர்கிறோம். மேல்நாட்டார், சொப்பன நிகழ்ச்சியை, மனோபாவம்

என்று மாத்திரம் சொல்லுகிறார்கள். ஆனால் ஆராய்ந்து பார்த்தால், சொப்பன நிகழ்ச்சியில் ஸ்தூல உடலின் தன்மைபோலவே, மனதின் தொழிற்பாடும், உடலின் தொழிற்பாடும் சேர்ந்து அமைந்திருக்கின்றன என்று நன்றாக அறிந்துகொள்ளலாம்.

அப்படியானால் நமக்கு இரண்டு உடல்கள் இருக்கின்றனவா? என்ற கேள்வி உண்டாகலாம். நமக்கு காரண சரீரம், கஞ்சுக சரீரம், குண சரீரம், சூக்கும சரீரம், ஸ்தூல சரீரம் என்று ஐந்து சரீரங்கள் உண்டு. அவற்றுள் முதல் மூன்றையும் காரண சரீரத்திற்குள் அடக்கி, காரணம், சூக்குமம், ஸ்தூலம் என்று மூன்றாகவும் சொல்லுவதுண்டு. அதில் ஸ்தூல சரீரம் யாரும் பார்க்கக்கூடிய தன்மையில் பாரமுள்ளதாயிருக்கிறது. ஆனால் சூக்குமசரீரம் அவரவர்கள் கனவு காணும்பொழுது பார்க்கக்கூடிய தன்மையில, பாரமில்லாததாகவும், எங்கும் போக்கு வரதது உடையதுபோலவும் இருக்கிறது. கனவு காணுகிற சரீரம்தான், சூக்கும சரீரம் என்று சொல்லப்படுகிறது. நம் முன்னோர்கள், கனவில் தொழிற்படுகின்ற சூக்கும சரீரத்தை ஆவி என்றும், யாதனை சரீரமென்றும், வழங்கி வந்திருக்கிறார்கள். ஆகவே, மேலே சொன்ன ஸ்தூல உடம்பும், சூக்கும உடம்பும், நாம் காணக்கூடிய உடம்புகளாக அமைந்திருக்கின்றன. இவற்றைப்போல், காரண உடம்பு காணக்கூடியதாக அமைக்கப்பெறவில்லை. உயிரை எப்படி நமது கண்களால் பார்க்கமுடியாதோ, அதே போல நம்முடைய ஸ்தூல சூக்கும சரீரங்கள் வருவதற்கு ஆதாரமாக இருக்கக்கூடிய காரண சரீரத்தைப் பார்க்கமுடியாது.

### 3. உயிர் ஆவி உடலை இயக்கி, அதன் மூலமாகவே தூல உடலை இயக்குகின்ற உண்மை.

இனி ஸ்தூல உடல் இயங்குவதால் சூக்கும உடல் இயங்குகின்றதா? அல்லது சூக்கும உடல் இயங்குவதினால் ஸ்தூல உடல் இயக்கப்பெறுகின்றதா? என்பதைப் பற்றி ஆராயவேண்டும். பெரும்பாலோர், ஸ்தூல உடல் இயங்குவதினால்தான் சூக்கும உடல் கனவில் தொழிற்படுகின்றது என்று கருதுகின்றனர். ஆனால் உண்மையில் சூக்கும உடலதான் ஸ்தூல உடலை இயக்குகின்றது. சூக்கும உடல் ஸ்தூல உடலின் துணையின்றி கனவில் தனித்து இயங்கக்கூடியதாயும், ஸ்தூல உடலோடு சேர்ந்து ஸ்தூல உடலை நனவில் (விழிப்பில்) இயக்கக்கூடியதாயும் இருக்கிறது. ஸ்தூல உடலோ தூக்கத்தில் சூக்கும உடலின் துணையின்றி தானே தனித்து இயங்கமுடியாததாகவும் இருக்கிறது. விழிப்பில் சூக்கும உடலின் துணைகொண்டே இயங்குவதாயிருக்கிறது. இவற்றின் உண்மையை சந்தேக விபரீதமின்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால், நாம் உறங்கும்பொழுது ஸ்தூல உடல் உணர்ச்சியற்றுக் கிடக்கின்ற நிலையையும், கனவு கண்டு கொண்டிருக்கிற சூக்கும உடலின் நிலையையும், கனவிற் கண்ட நிகழ்ச்சிகள் ஸ்தூல உடலைப் பாதிக்கின்ற நிலையையும் ஊன்றிக் கவனிக்கவேண்டும்.

நாம் தூங்கும்பொழுது ஸ்தூல உடல் உணர்வற்றுக் கிடக்கின்றது. கண்கள் மூடப்பட்டிருக்கின்றன. காதுகள் திறந்திருந்தாலும் வெளியிலுள்ள சப்தத்தை கிரஹிக்க முடியவில்லை. அதே சமயத்தில் கனவுகாணுகின்ற உடலிலுள்ள கண்களைக் கொண்டு பார்க்கமுடிகின்றது; காதுகளைக்கொண்டு கேட்க முடிகின்றது; மற்றும் எல்லாக் காரியங்களும் செய்யமுடிகின்றது. ஆதலால் கனவுகாணுகின்ற சரீரம் ஸ்தூல சரீரத்தினால் இயக்கப்பெறவில்லை என்பது தெளிவாகின்றது. நாம் கனவிலே ஒருவருடன்

பேசிக்கொண்டிருந்தால், அது ஸ்தூல சரீரத்திலுள்ள வாயையும், பேசும்படியாகச் செய்து பக்கத்தில் தூங்குகிறவர்களை, விழிப்புண்டாகும்படி செய்துவிடுகிறது. விழித்துக்கொண்டு பக்கத்திலிருப்பவர்களுக்குச் சொப்பனத்தில் என்ன பேசுகிறோம் என்பதை நன்றாய்க் கேட்க முடிகின்றது. சொப்பன உடலிலுள்ள கால், ஒருவனை உதைக்கும் பொழுது, ஸ்தூல உடலிலுள்ள காலும் தூக்கப்பட்டு உதைக்கிறது. அதனால் காயங்களும் உண்டாகின்றன. சொப்பன உடலிலுள்ள கையினால் ஒருவனை அடிக்கும் பொழுது, ஸ்தூல உடலிலுள்ள கையும் தூக்கப்பட்டு அடிக்கிறது. சொப்பனத்தில் பயமேற்பட்டால், அதனால் ஏற்படுகிற பதட்டத்தையும், பிதற்றலையும், ஸ்தூல சரீரத்தில் காண்கிறோம். கனவிலே அழுதால் ஸ்தூலக் கண்களில் தண்ணீர்வரப் பார்க்கிறோம். கனவிலே இன்பம் அனுபவித்தால் ஸ்தூல உடலிலே அதனுடைய சின்னங்களைக் காண்கின்றோம். இவைகளிலிருந்து கனவில் தொழிற்படுகின்ற சரீரத்தினுடைய, ஒவ்வொரு உறுப்பும், ஸ்தூல உடலிலுள்ள அந்தந்த உறுப்போடு பிணைக்கப்பட்டிருக்கிறதென்றும், கனவு காணுகின்ற உடலிலுள்ள உறுப்புத் தொழிற்படும்பொழுது, ஸ்தூல உடலிலுள்ள அதே உறுப்பைத் தொழிற்படுத்துகின்றது என்றும் தெரிகின்றது.

இப்படிச் சொல்லும்பொழுது, சொப்பனத்தில் நடந்து செல்கின்றதாகக் காணுங்கால், ஸ்தூல உடல் நடவாமல் படுத்த படுக்கையிலேயே கிடக்கின்றதே என்று கேட்கலாம். முன்னரே விவரித்துக்கூறியதுபோல் கனவு காணும்பொழுது மனோ நிகழ்ச்சியும், உடல் நிகழ்ச்சியும், ஒன்றை ஒன்று விரவி, மனோ நிகழ்ச்சி உடல் நிகழ்ச்சியின்றித் தொழிற்படுவதும், உடல் நிகழ்ச்சி மனோ நிகழ்ச்சியின் உதவிகொண்டு தொழிற்படுவதும் இயல்பு என்பதைச் சிந்தித்தல் வேண்டும். உதாரணமாக ஒருவனை எப்படி உதைக்கவேண்டுமென்று எண்ணும்பொழுது, மனம் மாத்திரம் தொழிற்படுகின்றது; அது செயலுக்கு வரும்

பொழுது காலைத் தூக்கி உதைக்கின்ற செயல் நிகழ்கின்றது; கனவு காணும்பொழுது தொழிற்படுகின்ற உடல், பாரமில்லாத உடலாகையால், ஆத்திரமாகச் செய்கின்ற செயல்கள் மாத்திரம், ஸ்தூல உடலையும் தூக்கிச் செலுத்தக்கூடிய தன்மையில் அமைந்திருக்கிறது. அதனால்தான் சிலர் தூக்கத்திலே எழுந்து நடமாடுகின்ற செயலுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். சாதாரண நிகழ்ச்சிகளெல்லாம் மனதின் தொழிற்பாட்டிலும், சூக்குமசரீரத்தின் தொழிற்பாட்டிலும், விரவி அமைந்து, ஆத்திரமாகச் செய்கின்ற செயல்களெல்லாம், ஸ்தூல உடலையும் சேர்த்துப் பாதிக்கக்கூடியதாயிருக்கின்றன.

சொப்பனத்தில் தொழிற்படுகின்ற சூக்குமசரீரத்தை, யாதனா சரீரமென்றும், ஆவி என்றும் அழைப்பதுண்டு என்று முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். மனதினுடைய துணைகொண்டு சூக்குமசரீரம் தொழிற்படுவதையும், மனதினுடைய துணையையும் சூக்குமசரீரத்தின் துணையையும் கொண்டே, ஸ்தூல சரீரம் இயக்கப்பெறுகின்றது என்பதையும் இதுவரை விளக்கியிருக்கின்றோம். இனி, கனவில் தொழிற்படுகின்ற சூக்குமசரீரத்தின் தன்மையைப் பற்றியும், ஸ்தூல சரீரத்தின் தன்மையைப் பற்றியும் ஆராய்வோம். ஸ்தூல உடலிலுள்ள கண்கள், சூரியனுடைய ஒளி, அல்லது விளக்கினுடைய ஒளி, இவற்றின் துணைகொண்டுதான் பொருள்களைக் காணக்கூடியவைகளாயிருக்கின்றன. அதே கண்கள், எந்த ஒளியிருந்தாலும் இமைகளால் மூடப்பெற்றால், பொருள்களைக் காணமுடியாது. ஆனால் ஆவி உடலிலுள்ள கண்களோ, இமைகள் மூடப்பட்டு இருக்கும்பொழுது, ஒளி ஒன்றுமில்லாமலே, இருட்டிலுங்கூடப் பொருள்களைக் காணக்கூடியவைகளாயிருக்கின்றன. அந்தக் கண்களுக்கு இரவு பகல் என்ற வேற்றுமை கிடையாது.

கனவில் நாம் அயல் இடங்களுக்கெல்லாம் சென்று, ஏதேதோ அநுபவிக்கிறதாகக் காணும் பொழுது, ஸ்தூல உடல் படுத்திருந்தயிடத்திலே தானே கிடக்கின்றது? அப்பொழுது கனவு காண்கின்ற உடல் ஸ்தூல உடலைவிட்டு வெளியே போய்விடுகின்றதா? அல்லது ஸ்தூல உடலுக்குள்ளே தானிருக்கின்றதா? வெளியே போய்விடுகின்றதாக இருந்தால், அதிலுள்ள அவயவ அசைப்புக்குத் தகுந்தபடி, ஸ்தூல உடலிலுள்ள அவயவங்கள், எப்படி அசைய முடியும்? என்ற கேள்வியும், அந்தக் கனவு உடல் ஸ்தூல உடலுக்குள்ளேதானிருந்து தொழிற்படுகின்றது என்றால், கனவின் நிகழ்ச்சிகள் அயல் இடங்களில் நடக்கின்றதாக எப்படிக் காணமுடிகின்றது? என்ற கேள்வியும் பிறக்கலாம். சிலர் கனவு காணுகின்ற உடல் வெளியிடங்களுக்குச் சென்றே தொழிற்படுகின்றது; அதற்கும் ஸ்தூல உடலுக்கும் ஒரு பட்டுநூல் போன்ற தொடர்பு இருப்பதினால், ஸ்தூல உடலிலுள்ள அவயவங்களில் இயக்கம் ஏற்படுகின்றது என்று சொல்லுகிறார்கள்.

நாம் கனவு காணும்பொழுது, அப்படி ஒரு தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை. கண்ணுக்குத் தெரியாமல் அது இருக்கின்றது என்று சொல்வார்களானால் அது இருப்பதை நிரூபிக்க முடியாது. மேலும் அந்த ஒரு சிறு தொடர்பு, கனவு காணுகின்ற ஒவ்வொரு அவயவத்தையும், பிணைத்து இயக்கமுடியாது.

## 4. இறந்தபின்னுள்ள ஆவிஉடலின் தன்மையும் அது பஞ்ச பூதங்களாலும் அழியாதது என்பதும்.

லண்டனில் பேசுகின்ற பேச்சை, எவ்வாறு நாம் நம்முடைய வீடுகளிலிருந்து கொண்டே, நாம் லண்டனுக்குச் செல்லாமலும், அங்கு பேசுகின்றவர் நம்முடைய இடத்துக்கு வராமலும், கேட்கும்படியாக ரேடியோ (Radio) செய்துவிடுகின்றதோ, அதுபோல்,

நம்முடைய கனவுகாணுகின்ற ஆவி உடலுக்கு, தூரத்தையும் நேரத்தையும் வெல்லுகின்ற ஆற்றல் இருக்கின்றது. அது மாத்திரமல்ல; நம்முடைய ஸ்தூல உடலைக் கத்தியால் வெட்டிவிடலாம்; நெருப்பினால் எரித்துவிடலாம்; நீரால் அழியும்படிச் செய்யலாம்; புயற்காற்றினால் வாரிவீசி சிதைத்துவிடலாம்; இடியினால் பொசுக்கிவிடலாம்; கொலைஞர்களாலும் தற்கொலையினாலும் அழிக்கப்படலாம்; அணுக்குண்டினால் பஸ்பமாக்கி விடலாம். ஆனால், கனவிலே தொழிற்படுகின்ற ஆவி உடல், சூக்கும சரீரம், யாதனாசரீரம், உள்ளுடம்பு என்று சொல்லப்படுகின்ற உடலை, மேலே சொன்னபடி கத்தியினால் வெட்டமுடியாது; நெருப்பினால் எரிக்கமுடியாது; நீரினால் அழிக்க முடியாது; காற்றினால் சிதைக்கமுடியாது; இடியினாலும், அணுகுண்டினாலும் அழிக்கமுடியாது; கொலைஞர்களால் கொன்றுவிட முடியாது. அதற்குக் காரணம், நம்முடைய ஸ்தூல உடல் அழிந்துபோகின்ற பெற்றோர்களின் உடலிலிருந்து உண்டாகின்றது. கனவு காணுகின்ற ஆவி உடல், ஆண்டவனால் உண்டாக்கப் பெறறிருக்கிறது. எல்லா மக்களும், எந்தத் தேசத்திலிருந்தாலும் சரி, எந்த மதத்தைச் சார்ந்திருந்தாலும் சரி, என்ன நிறமுடையவர்களானாலும் சரி, பரம்பொருளாகிய ஆண்டவன் 'ஒருவரே அவரவர்களுடைய ஆவிஉடலைத் தோற்றியிருப்பதினால் நம் எல்லோருக்கும் அவர் தந்தையும் தாயும், அல்லது அம்மையும் அப்பனும் ஆகின்றார். அப்படிப்பட்ட ஒரே ஆண்டவனால் நம்முடைய ஆவி உடல்கள் உண்டாக்கப்பெற்றிருப்பதினாலேயே உண்மையில் நாம் எல்லோரும் சகோதர சகோதரிகள் ஆகின்றோம்.

நம்முடைய உள்ளுடம்பாகிய ஆவி உடல், இவ்வுலகிலுள்ள நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களாலும் அழிக்கப்பட முடியாத நிலையில் இருக்கின்றதென்பதை, எப்படி நிரூபிக்க முடியும்? என்று கேட்கலாம்.

## 5. அகால மரணமும் பேய்களின் தன்மையும்.

குண்டுகளினாலோ, துப்பாக்கியினாலோ, இடியினாலோ, நெருப்பினாலோ, இயந்திரங்களினாலோ, புகை வண்டியினாலோ, மோட்டாரினாலோ விபத்து ஏற்பட்டோ, அல்லது தானாக வேண்டுமென்று செய்தோ, அகால மரணம் அல்லது துர்மரணம் அடைந்துவிட்ட ஒரு ஆணானாலும் பெண்ணானாலும், அந்தந்த இடத்திலேயே பேயாகத் திரிகிறார்கள் என்றும், அவர்கள் காலை மாலை சந்திவேளைகளில், சிலருடைய கண்களுக்குக் காணக்கூடியதாக இருப்பதாகவும், அவர்கள் ஆண் உருவத்தோடும் பெண் உருவத்தோடும், அவரவர்கள் இறந்த சமயத்தில், என்னென்ன வடிவுடன் இருந்தார்களோ அந்தந்த வடிவுடன் தோற்றமளிக்கின்றார்கள் என்றும் அறிகின்றோம். பேய்கள் என்ற உடனே, யாரும் பயப்படவேண்டிய அவசியமில்லை. அவர்களும் நம்மைப்போன்ற மனிதர்களே அவர்களுக்கும் நமக்கும் உள்ள வித்தியாசம், நாம் ஸ்தூல உடலோடு இருக்கின்றோம்; அவர்கள் ஸ்தூல உடல் இல்லாமல், ஆவி உடலோடு மாத்திரம் இருக்கிறார்கள் களவு செய்கின்ற ஒரு மனிதனை, நாம் எப்படிக் கள்ளன் என்று அழைக்கின்றோமோ, அது போல, பேய்த்தன்மை பெற்று. அகால மரணத்திற்கு உள்ளாகி, ஸ்தூல உடலைச் சிதைத்துக் கொண்டவர்களை, பேய்கள் என்று சொல்லுகின்றோம். சிலர் பேய்கள் என்பதே கிடையாது, பேய்கள் உண்டு என்பதை எப்படி நிரூபிக்க முடியும்? என்று கேட்கலாம். பேய் பிடித்தவர்களை நேரில் பார்த்தவர்கள் அவ்விதம் கேட்கவே மாட்டார்கள். சிலருக்குப் பேய் பிடித்தல் என்றால் அதன் விபரம் என்ன என்பதே தெரியாது. அகால மரணத்தினால், சிதைந்த ஸ்தூல உடலிலிருந்து, பிரிந்த பேய்களுடைய, ஆவி உடலாகிய கனவு காணுகின்ற உடல், மேல் உலகங்களுக்குக் கொண்டுபோக வேண்டிய காலம் வரும் வரை, இந்த நில உலகிலே தான் அலைந்து திரியவேண்டியதிருக்கின்றது. ஆனதினால் அவர்களுக்கு,

மேல் உலக வாழ்க்கையின் மேன்மை இன்னதென்று தெரிய முடியாது. அவர்களுடைய கண்களுக்கு, ஸ்தூல உடலோடு இருக்கின்ற எல்லா மக்களையும் நன்முகப் பார்க்க முடியும். ஆனுல் நமக்கு சாதாரண வேளைகளில், அவர்கள் ஆவி உடலோடு திரிவதைப் பார்க்கமுடிகிற தில்லை. நாம் உண்டு உடுத்து அலங்கரித்து நடமாடுவதைப் பார்த்துப் பொருமை கொண்ட அந்தப் பேய்கள், தங்களுக்கு வசதியான பெண்களைப் பெரும்பாலும், ஆண்களை ஏகதேசமாகவும், பிடித்துக் கொள்ளுகின்றன. அதிலும் பருவமானவர்களையே பிடிக்கக் காண்கிருேம். எவரைப் பிடித்துக்கொண்டனவோ, அவருடைய ஸ்தூல உடம்பில் அவை புகுந்து தொழிற்படுத்துகின்றன. அச்சமயம் அவை பிடிபட்டவருடைய ஆவி உடலை இயங்கவிடாமல் தடுத்து விடுகின்றன.

## 6. பேய் பிடித்து ஆடுவதின் உண்மை.

தமிழ் பேசும் ஒரு பெண்ணை, தெலுங்கு பேசுகின்ற ஒருவன். பேயாக யிருந்து பிடித்துக் கொண்டால், அந்தப் பெண்ணின் மூலம் தன்னுடைய வரலாறுகளைத் தெலுங்கு பாஷையிலேயே பேசுவதையும், தன்னுடைய சுயமான பெயரைச் சொல்வதையும், அவனுக்கு என்ன என்ன காரியங்கள் பிரியமானவையோ, அவைகளையெல்லாம் கேட்கவும் விரும்பவும் காணலாம். பிறவியிலிருந்தே மது, மச்ச மாமிசம் சாப்பிடாத ஒரு பெண்ணை, மதுவும், மச்சம் மாமிசாதிகளும் சாப்பிட்டு வந்த ஒருவன், பேயாக நின்று பிடித்துக்கொண்டால், அவன் அந்தப் பெண்ணின் மூலம், மதுவையும் மச்ச மாமிசத்தையும் விரும்பிக் கேட்பதும், தான் அந்தப் பெண்ணைவிட்டு நீங்கும்போது, தனக்கு அவற்றையெல்லாம் கொடுத்துத் திருப்தி பண்ணவேண்டுமென்று கட்டாயப்படுத்துவதும், அந்தப் பெண் தூக்க முடியாத பாரத்தைத் தூக்கிக் காட்டுவதுமே, இதற்கு அத்தாக்ஷியாகும். இதை விளங்கிக்கொள்ளாத பெரும்பா

லோர், ஒரு பெண் தன்னுடைய சுயமான பெயரை விட்டு, வேறொரு பெயரைச் சொல்லுவதையும், தன்னுடைய சுய சுபாவத்தை விட்டு, வேறு ஒருவர் சுபாவத்துடன் நடப்பதையும் கண்டு, அதற்குரிய பரிகாரத்தைத் தேடிக் குணப்படுத்திக்கொள்ளாமல், அது மூளைக் கோளாறு என்று தவறுதலாகக் கருதி, பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிடுகிறார்கள். இப்பொழுது பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருக்கக் கூடியவர்களில் பலர், இவ்விதம் பேய்களால் பிடிக்கப் பட்டவர்களாகவே காணப்படுகிறார்கள். அப் பேய்கள் மேல் உலகங்களுக்குப் போக வேண்டிய காலம் வந்த பொழுது, பிடித்துக் கொண்டவர்களை விட்டு விட்டு போய்விடுகின்றன. அப்பொழுது, பைத்தியமும் போய்விட்டதாக நாமும் கருதிக் கொள்ளுகிறோம்.

**7. ஆவி உடலின் அங்க ஈனம் தூல உடலைப் பாதிப்பதும், தூல உடலின் அங்க ஈனம் ஆவி உடலைப் பாதியாதிருப்பதும்.**

**ஸ்தூல உடல் சிதைக்கப்பட்டபொழுதும் தான் சிதைக்கப்படாமல் இருக்கின்ற ஆவி உடல், கனவில் தொழிற்படுகிற உடல்தான் என்பதை எல்லோரும் ஒத்துக்கொள்ளக்கூடிய முறையில் எப்படி நிரூபிக்கலாம்? என்று கேட்கலாம்.** இயந்திரசாலையில் வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒருவனுடைய வலக்கையானது, இயந்திரத்தில் சிக்கி துண்டிக்கப்பட்டுவிட்டால், நாம் மேலே சொன்ன முறைப்படி அவனது ஆவிஉடலிலுள்ள கை துண்டிக்கப்படாமலிருக்க வேண்டும்; சூக்கும சரீரமென்றும் உள்ளுடம்பு என்றும், ஆவிஉடலென்றும் சொல்லப்பெறுவதெல்லாம், கனவுகாணுகின்ற உடலே தான் என்று இருந்தால், அவன் சொப்பனம் காணும் பொழுது அவனது சொப்பன உடம்பில் வலக்கை துண்டிக்கப்படாமல் வேலை செய்யக்கூடியதாக இருக்கவேண்டும்; அந்தப்படியே ஸ்தூல உடம்பிலுள்ள வலக்கை

துண்டிக்கப்பட்டஒருவன், சொப்பனங்காணும்பொழுது, அவனுடைய சொப்பனம் காணுகின்ற உடலிலுள்ள வலக்கை துண்டிக்கப்படாமல், நன்ருகத் தொழிற்படுகிறது என்று சொல்லுகிருன்; அதே விதமாக ஸ்தூலக் கால் துண்டிக்கப்பட்ட ஒருவன், தன்னுடைய கனவு நிகழ்ச்சிகளில், இரண்டு கால்களும் நன்ருகத் தொழிற்படுவதாகவும், விழித்தவுடனே ஸ்தூல உடம்பில் அந்தக்கால் இல்லாமலிருப்பதை அவன் உணர்வதாகவும் சொல்லுகிருன். இந்த உண்மையை அவரவர்களே அப்படிப்பட்டவர்களைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். ஆனுல் பிறவியிலேயே ஒருவன் கையில்லாத முடவனுகப் பிறப்பானுனுல் அவன் கனவு காணும்பொழுதும், ஆவி உடலில் கையில்லாத முடமாயிருக்கிறதாகச் சொல்லுகிருன். அப்படிப்பட்டவன் இறந்த பிற்பாடும், அவன் ஆவி உலகத்தில் கையில்லாத முடவனுகவே வாழ்கின்ருன். அதுபோலவே, பிறவியிலேயே குருடனுகப் பிறந்த ஒருவன், தன்னுடைய கனவு காணுகின்ற உடலிலே கண்ணில்லாதவனுக இருப்பதாகவும், அப்படிப்பட்டவன் இறந்த பிற்பாடு, ஆவி உடலில், கண் இல்லாதவனுகவே இருப்பதாகவும் சொல்லுகிருர்கள். இதுபோலவே, கனவில் தொழிற்படுகின்ற ஆவி உடலிலே எந்த எந்த அவயவம் ஆண்டவனுல் அமைக்கப்பெறவில்லையோ, அந்த அந்த அவயவத்தை, ஸ்தூல உடலில் பெற்ருேர்களால் உண்டாகும்படி செய்யமுடிவதில்லை. ஆனதால், பிறக்கும்பொழுது ஸ்தூல உடலில் காணப்படுகின்ற அங்க ஈனமெல்லாம், ஆவி உடலிலுள்ள அங்க ஈனத்தின் காரணத்தால் உள்ளன என்றும், அவர்கள் இறந்த பிற்பாடும், அந்த அங்க ஈனம் ஆவி உடலில் உண்டு என்பதும் தெரிய வருகிறது. இவற்றிலிருந்து நாம் கனவு காணுகின்ற உடலே ஆவி உடலென்றும் அந்த உடல் தான் ஆண்டவன் நமக்குக் கொடுத்த உடலென்றும் அது இங்குள்ள ஐம்பூதங்களாலும் அழிக்கப்படாத தென்றும் அறிந்துகொள்ளலாம்.

ஆகவே, நம்முடைய ஆவி உடல்களினுடைய ஒவ்வொரு அவயவமும், உலகத்தின் கர்த்தாவாகிய ஒப்பற்ற ஆண்டவனால் சிருஷ்டிக்கப்பட்டு, அந்த அந்த அவயவம் ஸ்தூல உடலில் பரிணமித்து இருக்கின்றது. ஆதலால், ஸ்தூல உடலிலுள்ள ஒவ்வொரு அவயவமும் ஆண்டவனால் கொடுக்கப்பட்டதே என்பதை ஒவ்வொருவரும் உய்த்து உணர்ந்துகொள்ளலாம்.

8. **இறந்தபின் ஆவி உடல் அழியாதிருந்து அருள் பகுதியிலும் இருள் பகுதியிலும் விதித்த காலம் வரை இன்ப துன்பம் அனுபவிப்பதற்குப் பிரமாணங்கள்.**

நாம் இறந்த பிற்பாடு நமக்கு ஒரு உடம்பு உண்டு; அதில் எல்லா அவயவங்களும் உண்டு; வளர்ச்சி உண்டு; வாழ்க்கை உண்டு; இன்ப துன்பம் உண்டு; என்பதற்கு உலகத்தில் எல்லோராலும் போற்றப்படுகிற திருக்குறளில் ஏதாவது ஆதாரம் இருக்கின்றதா? என்று கேட்கலாம். நாம் இறந்த பிற்பாடு இந்த உலகத்தில் உள்ள வாழ்க்கையைப்போன்று, நாம் இறந்தபின் செல்லப்போகின்ற உலகத்திலும் வாழ்க்கை உண்டு என்பதை நிரூபிக்கவே, திருவள்ளுவர்,

> ''அருளிலார்க்கு அவ்வுலக மில்லை பொருளிலார்க்கு
> இவ்வுலக மில்லா கியாங்கு''

என்று அருளியிருக்கிறார். இவ்வுலகத்தில் பொருளில்லாதவர்களுக்கு, சிறந்த வாழ்க்கை எப்படி அமைகிறதில்லையோ, அதுபோலவே, அருளைத் தேடிக்கொள்ளாதவர்களுக்கு, மரணத்தின் பின் நாம் வசிக்கப்போகின்ற அந்த உலகத்தில், சிறப்புடன் வாழமுடியாது என்று வற்புறுத்திக் கூறுகின்றார். நம்முடைய சேவைகளின் பிரதிபலனை, மக்களிடத்தில் கூலி பெற்றுக்கொள்வது,

அழியக்கூடிய பொருளாகும். நம்முடைய சேவைகளுக்கு மக்களிடத்தில் கூலி பெற்றுக்கொள்ளாமல், ஆண்டவ னிடத்தில் பெற்றுக்கொள்கின்ற கூலியே, நிலையுள்ள அழி யாத அருளாகும்; மேலும் அருளைத் தேடவேண்டுமென்ற கருத்துக்கொண்டு. அருள் ஈட்டத்தில் ஈடுபட்ட உள்ள முடையவர்கள், இறந்த பிற்பாடு செல்லுகின்ற உலகத்தில், துன்பம் தரக்கூடியதும் இருளால் மூடப்பட்டதுமான பகுதிகளுக்குச் செல்லவேண்டியதில்லை என்பதை வலியுறுத்தவே:-

> "அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை இருள்சேர்ந்த
> இன்னா உலகம் புகல்"

என்று அருளியிருக்கிறார். இவற்றிலிருந்து, இறந்த பிற்பாடு நமக்கு ஒரு வாழ்க்கை உண்டென்றும், அதற் குரிய உலகம் உண்டென்றும், அதில் இருள் பகுதியும், அருள் பகுதி என்கிற ஒளிப்பகுதியும் உண்டென்றும், அருள் சம்பாதித்தவர்கள், அருள் பகுதியில் சிறப்பாக இருப்பார்களென்றும், அதனைச் சம்பாதிக்காதவர்கள், இருள் பகுதியில் துன்புறுவார்களென்றும் புலனாகிற தல்லவா?

இனி, இறந்த பிற்பாடு நமக்கு ஒரு உடம்பு உண்டு, அதில் அவயவங்கள் உண்டு, வளர்ச்சி உண்டு, வாழ்க்கை உண்டு என்பதை நிரூபிப்பதற்கே:-

> "குடம்பை தனித்தொழியப் புள்பறந்தற்றே
> உடம்போடு உயிரிடை நட்பு"

என்று அருளியிருக்கிறார். இதில் குடம்பை என்பது கூடா, முட்டையா என்பதைப் பற்றி, உரையாசிரியர்கள் தர்க்கமிட்டுக்கொண்டு இருக்கிறார்களே யொழிய, வெளி யேறிச் செல்லுகின்ற உயிருக்கு, புள் என்ற பறவைக்கு

இருப்பதுபோன்று, ஒரு உடலிருக்கின்றதா? அதில் பறவைக்கு இருக்கின்றதைப்போன்று, அவயவங்களிருக்கின்றனவா? பறவைக்கு வளர்ச்சி யிருப்பதைப்போன்று, அவ்வுடலுக்கு (ஆவி உடலுக்கு) வளர்ச்சி உண்டா? வாழ்க்கை உண்டா? என்பன பற்றி சிந்திக்கப்பெறவில்லை. குடம்பை என்பது கூடு என்பதையே குறிக்குமென்று சொல்லுகிறவர்கள், புள் என்பதைச் சாதாரண ஒரு பறவை என்று கருதி, அது முட்டையினின்றும் வெளி வந்த உடனே பறக்கமுடியாதென்றும், கூட்டிலிருந்து தான் பறவைகள் பறந்து செல்லமுடியுமென்றும் சொல்லி, முட்டை என்பது பொருத்தமில்லை என்று தர்க்கம் செய்கிறார்கள்.

ஆனால் குடம்பை என்பது முட்டையையே குறிக்கும் என்று கூறுகிறவர்கள், கூடு என்று சொல்வது பொருந்தாது; கருவிலேயே, பறவை, முட்டையோடும், ஆவி உடல், ஸ்தூல உடலோடும், உற்பத்தியாகின்றவை; கூடு அவ்வாறுள்ளதல்ல; மேலும் கூட்டைவிட்டுப் பறந்து செல்கின்ற பறவை, திரும்ப அந்தக் கூட்டிலேயே வந்து வசிக்க முடியும்; அவ்விதமாக, உடலைப் பிரிந்த ஆவி, திரும்பவும் தான் முன்பு இருந்த உடலில் வந்து வசிப்ப தில்லை; அதனால் அந்த உதாரணம் பொருந்தாது; மேலும் புள் என்பது சாதாரணப் பறவை அல்ல; சம்புள் என்ற ஒரு வகை பக்ஷி; ஆகாயத்திலேயே சஞ்சரித்துக்கொண்டு அங்கே போடப்படுகின்ற முட்டை, பூமி வந்து சேருவ தற்கு முன்னதாகப் பொரிக்கப்பட்டு. அதிலிருந்து வெளிக் கிளம்புகிற குஞ்சு, உடனே பறந்து செல்லுகின்ற தன்மை யுடையது; ஆனதினால், முட்டை என்று சொல்வதே குடம்பைக்குச் சரியான பொருளாகும் என்று சொல்லுகிறார்கள்.

நமக்கு, பிரயோஜனமில்லாத முட்டையின் ஓட்டைப் பற்றியும், பறவையின் கூட்டைப் பற்றியும் கவலையில்லை.

உடம்பிலிருந்து பிரிகின்ற உயிருக்கு, புள் என்ற பறவையை உபமானமாகச் சொன்னது ஏன்? என்பது தான் முக்கியமானது. பறவை பறந்துசென்ற பிற்பாடு, முட்டையைப்பற்றி எப்படி யாருக்கும் நினைவும் கவலையும் கிடையாதோ, அதுபோல ஆவி பிரிந்த பிற்பாடு, நம்முடைய ஊனுடம்பைப் பற்றியும் யாருக்கும் எந்த நினைவும் கவலையும் கிடையாது. முட்டையின் ஓட்டைப்போல், நாற்றமில்லாத பொருளாக, நம்முடைய சடலம் இல்லாமல், நாற்றமுள்ளதாக யிருப்பதால், அதை பூமிக்குள் புதைத்தோ, தீயினால் எரித்தோ ஒழித்துவிட்டுத்தான், பிற காரியங்கள் பார்க்கிறோம். முட்டையை விட்டு வெளியேறின குஞ்சுக்கு, எப்படி ஒரு உடலும், அதில் அவயவங்களும், அந்த உடலுக்கு வளர்ச்சியும் வாழ்க்கையும் இருக்கின்றதோ, அது போலவே நம்முடைய உயிர் சகல அவயவங்களும் கொண்ட, கனவு காணுகின்ற ஆவி உடலோடு, மேலுலகத்திற்குச் சென்று வாழ்கின்றது. அந்த ஆவி உடல் பாரமில்லாததும், மனோவேகத்தைப் போன்ற வேகத்தில், எங்கும் செல்லக்கூடியதாகவும் இருப்பதினால், அது சம்புள் என்ற பறவை பறப்பதற்கு உவமையாகின்றது. இந்தத் திருக்குறளுக்கு உண்மையான பொருள், இன்னதுதான் என்பதை நிர்ணயிக்க வேண்டுமென்றால், உயிருக்கும் உடலுக்கும் உண்டான சம்பந்தத்தைப்பற்றி, நம்முடைய சாஸ்திரங்கள் என்ன சொல்லுகின்றன என்பதை ஆராயவேண்டும்.

நமக்கு, வெளியே தெரிகின்ற ஸ்தூல சரீரத்திற்கு உள்ளே, கனவில் தெரிகின்ற சூக்கும உடல் இருக்கிறதென்றும், அதற்குள்ளே குண சரீரம் இருக்கிறதென்றும், அதற்குள்ளே கஞ்சுக சரீரம் இருக்கிறதென்றும், அதற்குள்ளே காரண சரீரம் இருக்கிறதென்றும், அதற்குள்ளே தான் நம்முடைய ஜீவான்மா இருக்கிறதென்றும் முன்னமேயே சொல்லியிருக்கிறோம். இதை விளக்கியே,

"பூதஞ சரீரம்போஞல் புரியட்ட ரூபந்தானே
யாதஞ சரீரமாகி யின்பத்துன்பங்களெல்லாம்
நாதஞர்ஆணையுய்க்க நரகெர்டு சுவர்க்கந் துய்த்துத்
தீதிலா அணுவா யோநி சேர்ந்திடுஞ்சீவ னெல்லாம்"
(சிவஞானசித்தியார், சுபக்கம் 126).

இதனுடைய பொருள்; ஜீவான்மாக்களெல்லாம் ஸ்தூல உடம்பு நீங்கியவிடத்து, யாதஞ சரீரமான ஆவி உடலோடு, ஆண்டவனுடைய ஆணைப்பிரகாரம், அருள் பகுதியாகிய சொர்க்கத்திற்கோ, இருள் பகுதியாகிய நரகத்திற்கோ சென்று, இன்ப துன்பங்களை அனுபவித்து முடிந்தவுடன், அங்கு அந்த யாதஞ சரீரத்தை விட்டு நீங்கி, அதற்குள்ளே இருக்கக்கூடிய அணுப்பிரமாணமுள்ள குண, கஞ்சுக, காரண சரீரத்தோடு, மீளவும் பூமியிலுள்ள கருவைச் சார்ந்து, பிறக்கிறது என்பதாகும். (குண, கஞ்சுக, காரண சரீரம் என்ற மூன்றையும் சேர்த்தே, புரிஅட்டக ரூபமென்று சொல்லப் பெற்றிருக்கிறது.)

ஸ்தூல உடலை விட்டு உயிர் எவ்விதமாகப் பிரிகிறது என்பதையும், எங்கே செல்லுகின்றது என்பதையும், சில உபமானங்களைக் கொண்டும், வட மொழியிலும் தென் மொழியிலும் மிகவும் தேர்ச்சிபெற்று, சகலாகம பண்டிதர் என்று பெயர் பெற்ற, அருணந்தி சிவாசாரியார், கீழே கண்டவாறு விளக்கம் கூறுகிருர்.

"பன்னகம் அண்டசங்கள் பரகாயந்தன்னிற் பாய்வோர்
துன்னு தோல்முட்டையாக்கை துறந்துசெல்வதுவே போல
உன்னிய உயிர்கள்தூல உடல்விட்டு வானினூடும்
மன்னிடு நனவுமாறிக் கனவினை மருவுமாபோல்"

இதனுடைய பொருளாவது;— பாம்பு தோலைக் கழற்றி விட்டு எப்படி வெளியே சென்று, உடலோடு வாழ்ந்தும்

வளர்ந்தும் வருகின்றதோ அதுபோலவும், பறவைகள் முட்டையைவிட்டு வெளியேறி, எப்படி ஒரு உடலுடன் வாழ்ந்தும் வளர்ந்தும் வருகின்றனவோ அதுபோலவும், கூடுவிட்டுக் கூடுபாய்கின்றவர்கள், தன்னுடைய ஸ்தூல உடலை விட்டுவிட்டு. உள்ளுடம்போடு இன்னொரு சரீரத்தில் பிரவேசித்து, எப்படி வாழ்ந்தும் வளர்ந்தும் வருகின்றார்களோ, அதுபோலவும், நாமும் ஸ்தூல உடலை விட்ட பின், வானுலகத்தில் சென்று வாழப்போகின்றோம் என்பதும், அங்கே நாம் வாழ்கின்ற வாழ்க்கையானது, நாம் நனவு நிலையை விட்டு கனவிலே தொழிற்படுகின்ற நிலையை ஒக்கும், என்பதேயாகும்.

பாம்பானது சட்டையோடு யிருந்த பொழுது. அதன் சட்டையை, பாம்பின் வேறானதாகக் கருதாமலும் வேறான பெயர் சொல்லாமலும், பாம்பென்றே எப்படி அழைக்கப்படுகிறதோ, அதுபோலவே, நம்முடைய உள்ளுடலுக்கு இட்ட பெயரையே, அது தங்கியிருந்த ஸ்தூல உடலுக்கும் சேர்த்து வழங்கப் பெறுகிறதென்றும், பாம்பு தானிருந்த சட்டையைக் கழற்றிவிட்டு வெளியேறின பிறகு, அந்தச் சட்டையை பாம்பென்று எப்படிச் சொல்லுவதில்லையோ, அது போலவே, நம்முடைய ஆவி உடல் வெளியேறின பிறகு, இங்கு கிடக்கின்ற, சவமாகிய கட்டைக்கு, நம்முடைய பெயர் சொல்லி அழைப்பதில்லை. இவைகளிலிருந்து, நாம் இறந்தபிற்பாடு, யாதனு சரீரம், சூக்கும சரீரம், ஆவியுடல், உள்ளுடம்பு என்று பலவிதமாகச் சொல்லப்பெறுகின்ற, கனவில் தொழிற்படுகின்ற உடலோடு, நாம் வானுலகத்திற்குச் செல்லுகின்றோம் என்பதும், இங்கே நாம் செய்கின்ற நல்வினை தீவினைகளுக்கு ஏற்ற, அருள் பகுதி, இருள் பகுதி முதலிய இடங்களுக்குச் சென்று, இன்ப துன்பம் அனுபவிக்க வேண்டும் என்பதும், உணர்ந்துகொள்ளலாம்.

## 9. தூய்மையான உள்ளம் படைத்தவர்களின் கனவில் பின்னால் நடக்கப்போவன அறிவிக்கப்படும் உண்மை.

இனி, கனவில் நடக்கின்ற செயல்களெல்லாம், பகலில் எண்ணுகின்ற எண்ணங்களும் விருப்பங்களும், மனோ பாவனையால், பூர்த்தியானதாகக் கருதப்படுகின்றனவே தவிர, உண்மையில், ஒரு உடல்கொண்டு அனுபவிக்கப் படுவதில்லை என்று, சிலர்கூறுவதைச் சீர்தூக்கி ஆராய்ந்து, உண்மை இன்னதென்று தெரிய வேண்டியது, அறிவுடை யோர்களின் கடனாகும். நம்முடைய எண்ணங்களும் விருப் பங்களும், உள்ளுடம்பாகிய ஆவி உடலிலேயே நிகழ் கின்றன. ஆதலால் அதே எண்ணங்களும் விருப்பங்களும், கனவு காணுகின்ற நிலையிலும் இருப்பது இயல்பே. ஆனால் பகலிலே நடவாத விஷயங்களும் எண்ணாத எண்ணங் களும், தன் அனுபவத்திற்கும் நினைவிற்கும் அப்பாற்பட்ட தோற்றங்களும், கனவிலே தோற்றுவதுண்டு. அவற்றுள் (1) பின்னால் நடக்கக்கூடிய காரியங்களை, முன்னாலேயே அறிவிக்கப்படுகின்ற நிலையும், அறிவிக்கப்பெற்றவை, பின் னாலே அதன்படி நிகழ்வது; (2) ஒரு காரியத்தைக் குறித் துக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும்பொழுது, அதற்குக் கனவிலே இன்னது செய்கவென்று அறிவிக்கப்பெறுவது. (3) இறந்தவர்கள் தங்களுடைய விருப்பங்களைக் கனவிலே வந்து தெரிவிப்பது. ஆக இம் மூன்றும் விழித்திருக்கும் பொழுது எண்ணமுடியாதனவாகும். சில மனிதர்களைப் புதிதாக நாம் சந்திக்கும்பொழுது, அவர்களை அதற்குமுன் எங்கேயோ சந்தித்ததாகத் தோன்றும். அப்படித் தோன்று வதற்குக் காரணம், அவர்களை நாம் கனவில் முன்னரே கண்டிருப்பதே. வீட்டில் நடக்கப் போகின்ற சில நல்ல காரியங்களும், சில தீய காரியங்களும், முன்னதாகவே கன வில் அறிவிக்கப்பட்டு, பின்னாலே அதன்படி நிகழ்வதும் இதற்குச் சான்றாகும். கனவில் அநுபவியாத எந்தக் காரிய மும், நனவில் நடைபெறுவதில்லை என்பதை வலியுறுத்

தியே, புராணங்களும் இதிகாசங்களும் ஆங்காங்கே விளக்கிக் கூறுகின்றன.

இராமயாணத்தில், இராவணனுக்கு வரப்போகின்ற கேட்டையும், இலங்கையின் அழிவையும், இராம லெக்ஷுமணர், சீதாபிராட்டியாரை சிறைமீட்டுவதையும், இலங்கையில் விபீஷணன் அரசாள்வானென்பதையும், சீதாபிராட்டியாருக்கு, அசோக வனத்தில் காவலாக இருந்த திரிசடை என்பவள், தான் கண்ட கனவினால் அறிந்து, முன்னதாக அறிவித்ததும், பின்னால் அதன்படியே நிகழ்ந்ததும், இதற்குப் போதிய சான்றாகும். மேலும், திருநாவுக்கரசு நாயனாருடைய தமக்கையாரான திலகவதியாருக்கு, தன்னுடைய தம்பி சமண சமயத்தில் சேர்ந்து இருந்த காரணத்தினால், ஏற்பட்ட மனவருத்தத்தைத் தீர்ப்பதற்காக, ஆண்டவன் அந்த அம்மையாருடைய கனவில் தோன்றி, திருநாவுக்கரசு நாயனாருக்குச் சூலைநோய் கொடுத்து ஆட்கொள்ளப்போவதாக முன்னரே அறிவித்து, பின்னர் அவ்வண்ணமே நடைபெற்றதும், இன்னும் பல புராணங்களில் கனவில் அறிவுறுத்திய நிகழ்ச்சிகளும், கண்ணகி பின்னால் வரக்கூடிய தீங்குகளை முன்னரேயே கனவில் கண்டதும், பிறவும் சான்றுகளாகும்.

இந்துக்கள் கையாளுகின்ற புராணங்களும், இதிகாசங்களும், இந்துக்கள் மாத்திரமே ஒப்புக்கொள்ளக்கூடியவைகளாகும் என்றும், பின்னால் நடக்கக்கூடிய காரியங்கள் கனவில் முன்னால் அறிவிக்கப்படுகின்ற உண்மை, உலகத்திலுள்ள எல்லா மதத்தினரும், மறுக்க முடியாத வண்ணம் ஒப்புக்கொள்ளக்கூடியதாக இருக்குமேயானால், அவ்வித அநுபவம் பிறமதத்தர்களுக்கும் உண்டாயிருக்கவேண்டுமென்றும், கேட்கக் கூடும். இன்றைய உலக நிலையில் பழமையான இந்து சமயத்தைத் தவிர, உயிரோடு இருக்கக் கூடிய சமயங்கள் பௌத்தமதமும், கிறிஸ்தவமதமும், முகம்மதியமதமும் ஆகும். இவற்றை ஒவ்வொன்றாகப்

பரிசீலனை செய்து, பின்னால் நடக்கப்போகின்ற நிகழ்ச்சிகள் முன்னாலே கனவில் அறிவிக்கப்பட்டனவா? என்பதைப் பற்றியும், கனவிலே கண்ட விஷயங்களை, அம்மதத்தினர் உண்மையான ஆண்டவன் அறிவிப்பு என்று சிரமேற் கொண்டு, அதன்படி நடந்துவெற்றிபெற்றார்களா? என்பதைப் பற்றியும் ஆராய்வோமாக!

## 10. பௌத்தமத ஸ்தாபகருக்கு அவ்வித முன்னறிவிப்பு.

2500 ஆண்டுகளுக்கு முன் தோன்றிய, பௌத்த மதத்தின் ஸ்தாபகராகிய புத்தர் பெருமானைப்பற்றி முதலில் ஆராய்வோம். அவர்களுடைய சாத்திரப்படி, புத்தர் இவ்வுலக அரசாட்சியையும் இல்லற வாழ்க்கையையும் துறந்து, உண்மையை நாடி, வெளியே புறப்படுவதற்கு முன்னதாக, ஒருநாள் இரவு, தன்னுடைய அரண்மனையின் தோட்டத்திலுள்ள ஒரு நவ்வல் மரத்தடியில் உட்கார்ந்திருந்தார்; அப்பொழுது உலகத்திலே நிகழ்கின்ற பிறப்பையும் இறப்பையும், மக்கள் படுகின்ற துன்பத்தையும் மனக்கவலையையும் பற்றிச் சிந்தித்த வண்ணமாக அயர்ந்துவிட்டார்; அப்பொழுது அவருடைய கனவிலே, ஒரு உயரமான பெருந்தன்மையுள்ள தோற்றமுடைய, அமைதியான உள்ளங்கொண்ட ஒருவர், அவருக்குக் காட்சியளித்தார்; அவருடன் புத்தர்பெருமான் சம்பாஷணை செய்து, தன்னுடைய சந்தேகங்களையெல்லாம் கேட்டுத் தெளிந்துகொண்டார்; அப்படிக் காட்சிகொடுத்துப் பேசியவர், ஆவி உடலோடு ஆவி உலகத்தில் வசிக்கின்ற ஒருவர்; ஆனதினால் அவர் புத்தரைப் பார்த்து, "சித்தார்த்தரே!(புத்தர்பெருமான் அரசகுமாரனாயிருந்தபொழுதுஉள்ளபெயர்) உம்முடையகாரியம் நடைபெறுவதற்கு, நீர் வெளியே போகவேண்டும்; நீர் ஒரு போதி சத்வராகி, புத்தர் பதவியைப் பெறப் போகின்றீர்; உலகத்துக்கெல்லாம் ஞான ஒளியைக் கொடுப்பதற்கு விதிக்கப்பட்டிருக்கிறீர்; விடாமுயற்சி செய்தால் நீர் பெற வேண்டியதைப் பெற்றுவிடுவீர்; உண்மையாகப் பாடுபட்

டால் நீர் கட்டாயம் வெற்றி பெறுவீர்; உமக்கு வழிகாட்டு வதற்கு, மேல் உலகங்களில் பெரிய அறிவாளிகள் தயாராக யிருக்கின்றார்கள்: நீரே புத்தராகப் போகின்றீர்; நீரே உலகத்திற்கு அறிவுச் சுடராகப் போகின்றீர்" என்று சொல்லி, அந்த உருவம் மறைந்துவிட்டது. இந்த நிகழ்ச் சியே, அரசகுமாரனாயிருந்த சித்தார்த்தருடைய வாழ்க்கை யிலே, ஒரு புரட்சிகரமான வைராக்கியத்தை உண்டாக் கிற்று. உடனே அவர், நான் கட்டாயமாக ஒரு புத்தராகப் போகின்றேன் என்ற தீர்மானத்தோடு, தன்னுடைய படுக்கை அறைக்குச் சென்று, அங்கே படுத்திருந்த அழகிய யௌவன மனைவியையும், அருமையான இளங் குழந்தை யையும், கடைசிப் பார்வையாகப் பார்த்துவிட்டு, அவர் களையெல்லாம் துறந்து, உலக இன்பங்களையெல்லாம் மறந்து, தன்னுடைய இராஜதானியைவிட்டு, இரவிலேயே உண்மையை நாடி வெளியேறிவிட்டார். சித்தார்த்தர் என்ற பெயருடனே, அரசகுமாரனாகயிருந்த, அறிவிற் சிறந்த மேதாவியாகிய புத்தர்பெருமானே, தான் கண்ட காட்சியை உண்மை என்று கருதி, அதில் சொன்னபடியே நடந்து, வெற்றி பெற்று, சுமார் ஐம்பதுகோடி மக்களுக்கு மதகுருவாக விளங்கி வருகிறார் என்றால், கனவில் காண் பவை எல்லாம், பகலிலே உண்டான எண்ணங்களும் விருப்பங்களும், இரவில் மனதில் பிரதிபலிக்கின்ற தோற் றங்கள், என்று அலட்சியமாகக் கருதுவது, எவ்வளவு பேதமை என்று அவரவரே உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

## 11. கிறிஸ்தவமத ஸ்தாபகர் சம்பந்தமான முன் அறிவிப்பு.

இப்பொழுது அதற்கு அடுத்ததாக வந்த, கிறிஸ்தவ மத ஸ்தாபகராகிய இயேசுநாதரைப் பற்றிச் சிந்திப்போ

மாக. பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும், பல விதமான கனவுகளையும், கனவில் கண்ட தோற்றங்களையும், அவர்கள் சொன்ன விஷயங்களையும், பலரும் உண்மை என்று கருதி அதன்படி நடந்து வந்திருப்பதற்கு, பலவித விருத்தாந்தங்கள் இருக்கின்றன. அந்த நிகழ்ச்சிகளை எல்லாம், அப்பொழுது வாழ்ந்து வந்தவர்கள், உண்மை யென்று கருதி அதன்படி நடவாதிருந்திருந்தால், இயேசுநாதர் உயிரோடு வாழ்ந்திருந்திருக்க முடியாது. அவரைப் பின்பற்றிய கிறிஸ்து மதமும், உற்பத்தியாயிருக்க முடியாது. "பைபிள்" என்று சொல்லப் பெறுகின்ற, கிறிஸ்துவ வேதப்புத்தகத்திலிருந்து கொடுக்கப்பெறுகின்ற, கீழ்க்கண்ட நிகழ்ச்சிகள், அந்த உண்மையை வலியுறுத்தப் போதிய சான்றாக அமைகின்றன:-

(1) கன்னியாக இருந்த மேரி அம்மாளை, ஜோசப் என்பவர் கல்யாணம் செய்து கொள்ளுவதற்கு மறுத்ததற்குக் காரணம், அந்த மேரிஅம்மையார் கன்னியாக இருந்தபொழுதே கருப்பமாக இருந்ததே. அவ்விதம் மறுத்த ஜோசப்பினுடைய கனவில், தேவதூதர் என்று அழைக்கப்பெறுகின்ற ஒருவர் வந்து, "டேவிடினுடைய மகனாகிய ஜோசபே! கன்னிமேரி அம்மையாரை நீ மணந்து ஏற்றுக்கொள்ளப் பயப்பட வேண்டாம்; அவள் கருக்கொண்டிருப்பது தேவ தூதரின் செயலாலே. அவள் ஒரு மகனைப் பெற்றெடுப்பாள்; அந்த மகனுக்கு (Jesus) இயேசு என்ற திருநாமத்தை நீ சூட்டவேண்டும்; அவர் மக்களையெல்லாம் பாவங்களிலிருந்து விலக்குவார்." என்று அறிவித்ததை ஒப்புக்கொண்டே, ஜோசப் கன்னிமேரி அம்மையை மணந்து கொண்டார். அவருக்கு கனவில் அறிவித்தபடியே, கன்னிமேரி அம்மைக்கு உரிய காலத்தில் ஓர் ஆண் மகவு பிறந்தது. அதற்கு (Jesus) இயேசு என்ற பெயரும் கொடுக்கப்பட்டது. அரசகுமாரனாகயிருந்த சித்தார்த்தருக்கு புத்தர் என்ற திருநாமம் எப்படிக் கனவில் வழங்கப் பெற்றதோ, அது

போலவே இயேசு என்ற திருநாமமும், கனவில் அறிவிக்கப் பட்ட பெயரே என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

(2) இயேசுநாதர் பெதல்ஹெம் (Bethlehem) என்ற ஊரில் பிறந்திருப்பதை அறிந்த, (Herod) ஹெரெட் என்ற ஜூடே நாட்டு அரசன், ஜெரூசலத்தில் வாழ்ந்து வந்தான். அவன், வரும் பொருள் உரைக்கும் வல்லுனர்களாகிய மேதாவிகள் சிலரை அனுப்பி, இயேசுநாதர் எந்த வீட்டில் பிறந்திருக்கிறாரென்று கண்டுபிடித்து வரும்படியாக, ஏற்பாடு செய்திருந்தான். அவ்விதமே அவர்களும் அந்த ஊரை அடைந்து, இயேசுநாதர் பிறந்திருக்கிற வீட்டைக் கண்டுபிடித்தார்கள். ஆனால், அங்கு அந்த மேதாவிகளை, அரசனிருக்குமிடத்திற்குத் திரும்பிப் போகக்கூடாது என்று அவர்களுக்குக் கனவில் அறிவித்துத் தடுத்ததினால், அவர்களும் அரசனிடத்தில் செல்லாதிருந்துவிட்டார்கள். அந்தக் கனவில் அறிவித்த அறிவிப்பை, மேதாவிகளாகிய வல்லுனர்களும் உண்மையென்று ஏற்றுக்கொண்டு அதன்படியே நடந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

(3) அவ்வல்லுனர்கள் அந்த ஊரை விட்டுப் புறப்பட்டவுடன், ஜோசப்பினுடைய கனவிலே அந்த தேவதூதர் தோன்றி, இளங் குழந்தையாகயிருந்த இயேசுநாதரையும், அவருடைய தாயாராகிய கன்னிமேரி அம்மையாரையும், கூட்டிக்கொண்டு (Egypt) எகிப்து தேசத்திற்கு விரைந்து செல்லும்படியாகவும், ஹெரெட் என்ற அரசன், அக் குழந்தையைக் கொல்லுவதற்காக முயற்சித்துக் கொண்டிருப்பதாகவும், மறு அறிவிப்பு வரும் வரை எகிப்திலேயே தங்கியிருக்கும்படியாகவும், அறிவிக்கலாயிற்று. அவ்விதமே ஜோசப், எகிப்துக்கு இயேசுநாதரையும் அவருடைய தாயாரையும் அழைத்துச் சென்று, அங்கேயே வசித்து வந்தார்.

(4) இயேசுநாதரைக் கொல்ல முயற்சித்த, ஹெரொட் என்ற அரசன் இறந்ததும், எகிப்திலிருந்த ஜோசப்பினுடைய கனவில், முன் வந்த தேவதூதரே தோன்றி, குழந்தையையும் தாயாரையும் இஸ்ரேயில் நாட்டுக்கு, இப்பொழுது கூட்டிக்கொண்டு போகலாம் என்று அறிவிக்கலாயினர்.

(5) அவ்விதம் இஸ்ரேயில் நாட்டில் வசித்திருந்த ஜோசப்பிரிடம், (Galilee) கலிலி பிரதேசத்திலுள்ள (Nazareth) நாசரெத் என்ற ஊருக்குப் போகும்படியாகவும், வரும்பொருள் உரைக்கும் வல்லுனர்கள் முன்னரே உணர்த்தியிருந்தபடி, இயேசுநாதருக்கு (Nazarene) நாசரீன் என்ற பட்டப் பெயர் வழங்கப்பெற வேண்டுமென்றும், தேவதூதரால் கனவிலே அறிவிக்கப் பெற்று, அதன்படியே ஜோசப் நாசரத்தில் குடியிருந்தார் என்றும் அறிகின்றோம்

இவ்விதமாக ஜோசப், தான் கண்ட கனவுகளையும், அறிவித்த தேவதூதர்களையும், வெறும் எண்ணங்களின் பிரதிபிம்பங்களென்றும், வெறும் மனோ நிகழ்ச்சியென்றும், எல்லோரும் எண்ணுவதுபோல் எண்ணி, கனவுகளிலே அறிவித்தபடி நடவாதிருந்திருந்தால், இயேசுநாதருக்கும், அவரைப் பின்பற்றிய கிறிஸ்தவ மதத்திற்கும், என்ன ஏற்பட்டிருக்கும்? இயேசுநாதர் ஞானஸ்நானம் பெற்றபிறகு, கடவுளினுடைய ஆவி அவரில் இறங்கியதாகவும், வானங்களிலுள்ள தேவதூதர்கள், அவரிடம் வந்து பலவிதமாக அறிவித்தார்களென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்விதமாக கிறிஸ்தவ மதத்திற்கே, சொப்பனங்களும், ஆவியுண்டான தோற்றங்களும், தேவதூதர்களின் அறிவிப்புக்களும், உண்மையில் அஸ்திவாரங்களாக அமைந்திருக்க, அம்மதத்தைச் சார்ந்த ஒரு பகுதியார், ஆவி உலகத்தோடு தொடர்பு கொள்வது பாவமென்றும், அப்படிப் பேசுவதும், சொப்பனங்கள் காணுவதும் (Satan) சயித்தானு

டைய வேலை என்றும் சொல்லி, மேல் உலகத்திலுள்ளவர்களுடைய தொடர்பைப் பயன்படுத்திக்கொள்ளாதது, எவ்வளவு விபரீதமென்று சிந்தித்துப் பாருங்கள். ஐரோப்பிய நாடுகளில் ஆவி உலகத்தோடு தொடர்பு வைத்து, பின்னாலே நடப்பதை முன்னாலே அறிந்துசொன்ன பலரைக் கொன்றும், தீயினால் சுட்டும் அழித்திருக்கிறார்கள் என்று, கிறிஸ்தவ மதத்தின் வளர்ச்சியைப்பற்றிய சரித்திரங்கள் கூறுகின்றன. இப்பொழுது ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் ருஷியாவிலும் பிறதேசங்களிலும், எல்லா ஜாதியாரும் எல்லா மதத்தினரும், இறந்தவர்களோடு பேசுகின்ற தொடர்பை வைத்திருக்கிறார்கள் என்றும், அந்த உண்மையை, பற்பல விதமாக சோதனைகள் செய்து நிரூபித்திருக்கிறார்கள் என்றும், ஆயிரக்கணக்கான வெளியீடுகள் நிரூபிக்கின்றன

## 12. முகம்மதிய மதஸ்தாபகருக்குரிய முன் அறிவிப்பு.

இப்பொழுது, கிறிஸ்தவ மதத்திற்குப்பின் தோன்றிய இஸ்லாமிய மதத்தின் ஸ்தாபகரான, முகம்மது நபிநாயகத்தின் வாழ்க்கை வரலாற்றைப்பற்றி ஆராய்வோம். அவருடைய வரலாற்றில், இந்தப் பரந்த உலகத்தைப்பற்றியும், அதில் நடக்கப்போகிற பெரிய காரியங்களைப்பற்றியும், அவர் முன்னரே கனவுகள் கண்டதாகக் குறிப்பிடப்பெற்றிருக்கிறது. அவருடைய பாட்டனாரான அப்துல் முத்தலீப் என்பவர், முகம்மது நபியின் பிறப்பைப்பற்றி, முன்னதாகவே சொப்பனங்கள் கண்டதாக அறிவிக்கப்படுகிறது. முகம்மது நபியின் மனைவியான கதிஜா என்பவர், தனக்கு பதினைந்து வயதுக்கு இளையவராகவும், தன்னிடத்தில்வேலை பார்த்துவருபவராகவும் இருந்த, நபிநாயகம் அவர்களை மணந்துகொள்ள வேண்டுமென்று, முன்னரேயே கனவில் அறிவிக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

முகம்மது நபிக்கு, ஆண்டவனுடைய அறிவிப்பு, மனித உருவத்தில் வந்த (Gabraiel) ஜிப்ரீல் என்ற தேவ

தூதர் மூலமாக, (Mount Hira) மௌண்ட் ஹீரா என்னு மிடத்தில் கிடைத்தது. அங்கே அவர் தூங்கிக்கொண்டிருக் கும்பொழுது, ஜிப்ரீல் என்ற தேவதூதர் தோன்றி, அவரை எழுப்பி "நீ படிப்பாயாக அல்லது ஒப்பிப்பாயாக" என்று பொருள்படக் கூடிய அரபி வாக்கியத்தைச் சொன்ஞர்; முகம்மதுநபி "எனக்குப் படிக்கத்தெரியாது" என்று பதில் சொன்ஞர்; திரும்பவும் அதே தேவதூதர் இரண்டு முறை நெருக்கி அதட்டி, முன் சொன்ன வாக்கியத்தையே திரும் பவும் சொன்ஞர்; முகம்மதுநபி "நான் எதை ஒப்பிக்க" என்று கேட்டபொழுது, ஜிப்ரீல் "எல்லாவற்றையும் படைக்கின்ற ஆண்டவன் பெயரால் ஒப்பிப்பாயாக; ஆண் டவன் மனிதனை ஒரு துளி இரத்தத்திலிருந்து உண்டு பண்ணியிருக்கிருன்; அவன் பெயரால் ஒப்பிப்பாயாக; மனிதனுக்குத் தெரியாத விஷயங்களை எல்லாம் ஆண்டவன் தெரியும்படியாகக் கற்பிக்கிருன்" என்று சொன்ஞர்; முகம் மதுநபி அதைத் திருப்பி ஒப்பித்தார்; அந்த வாக்கியங்கள் அவருடைய மனதில் பதிந்துவிடவே, ஜிப்ரீல் என்பவர் மறைந்து விட்டார்; முகம்மதுநபி ஒப்புவிக்கச் சொன்ன வற்றைச் சொல்லிக்கொண்டே வெளியே வந்தபொழுது, வானத்திலே முன் கேட்டவிதமாகவே சப்தம் கேட்டது; தலையை நிமிர்த்தி உயரப்பார்த்த பொழுது, தான் முன்னே கண்ட ஜிப்ரீல் தோற்றமளித்துத் தன்னைக் கூப்பிடுவதைக் கண்டார்; எந்தத் திக்கை அவர் பார்த்தாலும் அங்கெல்லாம் அந்தத் தோற்றத்தையே கண்டார்; அந்தச் சப்தத்தையே கேட்டார்; இதுவும், இதுபோன்ற ஜிப்ரீல் என்ற தேவ தூதரின் பலவித அறிவிப்புக்களுமே இஸ்லாமிய மதம் உண்டாவதற்கும், இஸ்லாமிய வேதமாகிய 'குரான்' தோன்றுவதற்கும், அஸ்திவாரமாகவும் ஆதாரமாகவும் இருந்தன.

## 13. இறந்தவர்கள் பிரீதியடைவதற்கு செய்யும் வழிபாடுகள்.

இந்துக்கள் தொன்றுதொட்டு, சந்தியாவந்தன காலங்களில், ஆண்டவனுக்கும், தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், இறந்துபோன பிதுர்க்களுக்கும், பிரியம் உண்டாகும் பொருட்டுத் தர்ப்பணம் பண்ணுவதும், இறந்தவர்களுடைய திதியை அனுசரித்து, ஒவ்வொரு மாதமும் 'மாசமாசிகம்' என்று சொல்லப்படுகின்ற மாதச் சிரார்த்தமும், வருஷ முடிவில் வருகின்ற திதியில் 'வருஷாப்திகம்' என்று சொல்லப்படுகின்ற வருஷ சிரார்த்தமும், சிரத்தையோடு செய்வித்து வருவது யாவரும் அறிந்ததே. அப்படிச் செய்வதினால், இறந்தவர்கள் திருப்தியடைந்து, அவ்விதம் நன்றி காட்டி வருகின்ற சந்ததியார்களை, ஆசீர்வதிக்கிறார்களென்றும், அதனால் அந்தச் சந்ததி சிறப்புறுவதாகவும் தெரிய வருகிறது. அதே சமயத்தில், இறந்தவர்களை நினைத்துச் செய்கின்ற பூஜை, வழிபாடு, தானங்கள், தருமங்கள் முதலிய நற்செய்கைகளெல்லாம், இறந்தவர்களை மேல் நிலைகளுக்குச் செல்லும்படியாக உதவுகின்றன என்றும் அறிகின்றோம். இறந்தவர்களில் சிலர், தன் குடும்பத்திலுள்ள சிலருடைய கனவில் வந்து, தங்களுக்கு வேண்டியவற்றைக் கேட்கின்றதும், அவர்களைத் திருப்தி செய்யாவிட்டால், அந்த வருத்தத்தினால் குடும்பத்தில் ஏதாவது தொந்தரவுகளை உண்டாக்குகிறதும் உண்டு. குடும்பத்திலே கல்யாண காரியங்கள் வரும்பொழுது, இறந்துபோன கன்னிப் பெண்களுக்கு, ஆடை ஆபரணங்கள் உணவு வகைகள் எல்லாம் படைத்து "சுமங்கலிப் பிரார்த்தனை" "பூவாடைக்காரி பூஜை" "கன்னிக்குப் படைத்தல்" அல்லது "படைப்புப் படைத்தல்" என்று வழங்கப்பெறுகின்ற, சடங்கைச் செய்து முடிக்கின்ற சம்பிரதாயம், இன்றும் நடைபெற்று வருவதற்கு அதுவே காரணமாகும். இறந்தவர்களுக்கு வணக்கம் செலுத்துவதும், வழிபாடு செய்வதும், மூத்தோர்

களுக்கு வணக்கம் செலுத்துவதும், வழிபாடு செய்வதும், இவ்வித காரணங்களால் வந்தனவே ஆகும்.

இவ்வித பழக்கம், உலகத்திலுள்ள எல்லா தேசங்களிலும், எல்லா மதத்தாராலும், அவரவர்களுடைய சம்பிரதாயப்படி, நடைமுறையில் இன்றும் இருந்து வருகின்றது என்பதை யாரும் மறுக்கமுடியாது. எகிப்தியர், ஆப்ரிக்கர், அமெரிக்கர், ஐரோப்பியர், ருஷியர், சீனர், ஜப்பானியர், பாரசீகர், பௌத்த மதத்தினர், கிறிஸ்தவ மதத்தினர், இஸ்லாமிய மதத்தினர் ஆகிய எல்லோருமே இது சம்பந்தமாக வெவ்வேறு வகையான அபிப்பிராயங்களேயும், பழக்க வழக்கங்களேயும் கொண்டிருக்கின்றனர். ஒவ்வொரு மதமும், மேல் உலகங்களில் உள்ளவர்களால், இங்குள்ள மக்களில், பக்குவமுள்ளவர்கள் மூலமாக அறிவிக்கப்பட்டே உற்பத்தியாயிருக்கின்றது என்று, முன்னரே சொல்லியிருக்கிறேம். ஏனைய மதங்களெல்லாம், இவ்வுலகத்தில் பக்குவமுள்ள ஒவ்வொருவர் மூலமாக வந்திருக்க, இந்து மதமானது, பக்குவமுள்ள பலர் மூலமாக, வெவ்வேறு காலங்களில் அறிவிக்கப்பெற்று வந்திருப்பதினுலேயே, அதில் உலகத்திலுள்ள எல்லா மதங்களின் கோட்பாடுகளும், அவற்றில் சொல்லாதனவும், விரிந்து அமைந்து கிடக்கின்றன.

எகிப்து தேசத்தில், நம்முடைய ஸ்தூல உடம்பின் சாயல்போன்ற, இன்னொரு உடம்பு உண்டு என்றும், ஸ்தூல சடலம் அழியாதிருக்கும் வரை, ஆவி உடல் அழியாதிருக்குமென்றும் கருதி, இறந்த பின்னும் சடலம் கெட்டுப் போகாவண்ணம் இருக்கக் கூடிய முறைகளேக் கையாண்டு, (Mummifying) அதற்கென்று இடங்கள் கட்டி பத்திரப்படுத்தி வைத்திருந்தார்கள். (Chaldeans) சால்டீன்ஸ்களும், பாபிலோனியர்களும், (Babyloneans) அதேவிதமாகக் கருதியே, மரணத்தின் பின் உள்ள உடம்பைச் சுட்டுவிடாமல், புதைத்துக் கல்லறைகள் கட்டிவந்

தார்கள். அவ்விதப் பழக்கமே, பின் வந்த கிறிஸ்தவர்களா லும் இஸ்லாமியர்களாலும், கைக்கொள்ளப்பட்டு வந்திருக் கிறதென்று தெரிகிறது. அப்படிப் பாதுகாக்கப்பட்டு வந் தால்தான், எழுப்பப்படுவதாக சொல்லப்பெறுகின்ற நாளிலே, ஸ்தூல உடம்பினோடு. உயிர் சேர்க்கப்பெறு மென்று கருதப்பட்டிருக்கிறது போலும்.

உண்மையில், ஸ்தூல உடம்பு வளருவதற்கு ஆதார மாக, அவ்வுடம்பினுள்ளே இருக்கிற ஆவியுடல், (சொப்ப னத்தில் தொழிற்படுகின்ற சூக்கும சரீரம்) இவ்வுலகிலுள்ள ஐம்பூதங்களாலும் அழிக்கப்படாததாகையால், அந்த ஆவி யுடல் உயிரோடும், சகல அவயவங்களோடும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலியவற்ருேடும், ஸ்தூல உடலினி ருந்து பிரிந்துவிடுவதே இறப்பு அல்லது மரணம் ஆகின்றது. மரணத்தின்பின், எப்படி முட்டையைவிட்டு வந்த பறவை யும், சட்டையைக் கழற்றிவந்த பாம்பும், திரும்பவும் அந்த முட்டையிலோ சட்டையிலோ பிரவேசிக்க முடிகின்ற தும், பிரவேசிப்பதும் இல்லையோ, அதே போல, ஸ்தூல உடம்பாகிய கட்டையைவிட்டு வெளியே போன ஆவி யுடல், அது தங்கியிருந்த ஸ்தூல உடலைத் திரும்பவும் தேடிவந்து சேரவும் முடியாது; சேரவேண்டிய அவசியமும் கிடையாது. பறவையின் முட்டையும், பாம்பின் சட்டை யும், பூமியில் கிடந்து எப்படி அழிந்துபோகின்றனவோ, அதுபோலவே, மனிதரின் ஸ்தூல உடம்பும், மரணத்திற் குப் பிறகு, எரிக்கப்பட்டு அழிந்து தீரவேண்டும்; அல்லது புதைக்கப்பட்டு மண்ணோடு மண்ணாய்ப் போகவேண்டும்; அல்லது வேறு பிராணிகளுக்கு இரையாகி, அவற்றின் வயிற்றில் சேர்ந்து செமிக்கப்பெற்று அழிந்து தீரவேண் டும். இது யாவரும் அறிந்த விஷயமே. சரீரங்களைப் புதைக் கின்ற பழக்கவழக்கமுள்ள மேல்நாட்டிலும், இப்பொழுது பல மேதாவிகள், அதற்குத் தேவைப்படுகின்ற நிலத்தின் விஸ்தீரணத்தையும், அவை பூமிக்குள் செமிப்பதினால் வரு கின்ற அசுத்தத்தையும், கேடுகளையும் ஆராய்ந்து, சடலங்

களைச் சுட்டெரிப்பதே சுகாதாரத்திற்கும், இடம், பொருள் முதலியவற்றின் சிக்கனத்திற்கும், சாலச் சிறந்ததென்று கண்டு, அவ்விதம் கையாண்டும் வருகின்றார்கள்.

### 14. வருங்கால அறிவிப்பை தீய காரியங்களுக்குப் பயன்படுத்திய அரசர்களின் கொடுமை.

சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன், ரோமாபுரியை ஆண்டுவந்த அரசர்களின் மந்திரிமார்கள், பின்னால் நடக்கப்போகும் காரியங்களை, ஆவி உலகத்தோடு தொடர்பு கொண்டு அறிந்தார்களென்றும், சோதிடத்தின் உதவியைக் கொண்டும், ஆவி உலகத்தின் தொடர்பைக் கொண்டும், ''மந்திரிக்கழகு வரும் பொருளுரைத்தல்'' என்ற நியதியைக் காப்பாற்றி வந்தார்கள் என்றும், சரித்திரங்கள் கூறுகின்றன. அக்காலங்களில் வாழ்ந்துவந்த அரசர், தனக்குப் பின்னாலே, என்ன பெயருடைய அரசன் பட்டத்துக்கு வருவானென்று, மந்திரிகள் மூலமாக அறிந்து, அந்தப் பெயருடைய குழந்தைகள், எங்கெங்கு பிறந்திருந்தாலும், அந்தக் குழந்தைகளை எல்லாம், ஈவு இரக்கமின்றி ஒற்றர்களைக்கொண்டு அறிந்து, அவர்களைக் கொன்றுவிடுவது வழக்கமாக இருந்திருக்கிறது. அவ்வித பழக்கத்தினாலேயே, ஏசுநாதர் பிறந்த விபரத்தை அறிந்த ஹெரெட் என்ற பெயருடைய அரசன், அவர் எங்கு பிறந்திருக்கிறார் என்பதை அறிந்துவர, சில மேதாவிகளை அனுப்பிவைத்தான் என்றும், இயேசுநாதரைக் கொன்றுவிடுவதென்றே எத்தனித்திருந்தான் என்றும், ஆவி உலகத்திலுள்ள தூதர்களின் உதவியாலேயே, இயேசுநாதர் உயிர்தப்பி வாழமுடிந்ததென்றும், மறுக்கமுடியாத முறையில் பைபிள் (Bible) சான்று தருகிறது.

அக்காலத்திலிருந்த வழக்கப்படி, ரோமாபுரியை ஆண்டுவந்த அரசன் ஒருவன், தன்னுடைய மந்திரிமார்களிடம், அடுத்த பட்டத்திற்கு எந்தப் பெயருடையவர்

வருவாரென்று கேட்டபொழுது, மந்திரிமார்கள் (Theodosis) தியோடோசிஸ் என்ற பெயருடையவர், அரசராக வருவார் என்று சொன்னார்கள். அவ்வரசன், அவர்கள் எந்த முறையில் பின் வரக்கூடியதை, முன்னதாக அறியமுடிகிறதென்று தெரிய ஆசைப்பட்டதோடு, தானும் அந்தப் பெயரை சரிபார்த்துக்கொள்ள வேண்டுமென்று கருதி, மந்திரிமார்களிடத்தில் அடுத்த பட்டத்திற்கு (Theodosis) தியோடோசிஸ் என்ற பெயருடையவன்தான் வருவான் என்பது, உங்களுக்கு எப்படித் தெரியவந்தது என்று கேட்டான். அவர்கள் அந்த ரகசியத்தைச் சொல்லிக்கொடுக்க முடியாது என்று சொல்லிவிட்டார்கள். அப்பொழுது அவ்வரசன் மந்திரிமார்களை எல்லாம் துன்புறுத்தி, உண்மையைச் சொன்னாலன்றி விடப்போவதில்லை என்று, பொறுக்கமுடியாத முறைகளில் இம்சிக்க ஆரம்பித்துவிட்டான். அதைத் தாங்க முடியாத ஒரு மந்திரி, அரசனுக்கு உண்மையைச் சொல்லிவிடுகிறேன் என்று சொல்லி, தான் மேலுலகத்திலுள்ள தேவதூதர்களோடு பேசுகின்ற முறையை, அரசனுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டான். அந்த முறையை அரசன் கையாண்டு, வரப்போகின்ற அரசனின் பெயர் (Theodosis) தியோடோசிஸ் என்பதை நிச்சயித்துக்கொண்டு, தன் தேசத்திலுள்ள அந்தப் பெயர் தாங்கியவர்களையெல்லாம் கொன்றுவிட்டான். பல வருடங்கள் கழிந்தபின், அன்னிய தேசத்திலிருந்து படையெடுப்பு ஏற்பட்டு, அதன் முடிவில் (Theodosis) தியோடோசிஸ் என்ற பெயருடைய ஒருவனே, அரசனானன் என்று ரோமாபுரி சரித்திரம் கூறுகின்றது.

**15. ஆவி உலகத் தொடர்பிற்கு, கிறிஸ்தவர்களின் எதிர்ப்பு.**

ஆவி உலகத்தோடு தொடர்பு கொள்வதினாலேயே, அவ்விதக் கொலைகள் ஏற்பட்டன என்று, அரசனுடைய

கொடுங்கோன்மையைப் பழிப்பதற்குப் பதிலாக, ஆவி உலகத்தின் தொடர்பே பழிப்புக்கு இடமானது என்று, ஒரு சாரார் தவருகக் கருதுகின்றனர். முக்கியமாக கிறிஸ்தவர்கள், இறந்தவர்களோடு தொடர்பு வைத்துக்கொள்ளக் கூடாது என்று தடுக்கப்பட்டிருப்பதாக அறிகிறோம். அதற்கு மூலகாரணம், ரோமாபுரியிலுள்ள கிறிஸ்தவ தலைமைக் கோயில் அதிகாரிகள், அவர்களுடைய கொள்கைக்கு மாறுபட்ட எந்த உண்மையும், உலகத்தில் பரவக் கூடாது என்று தடை உத்திரவுகள் பிறப்பித்திருப்பதும், உண்மைகளைக் கண்டுபிடித்த மேதாவிகளைத் துன்புறுத்திக் கொலை செய்திருப்பதுமேயாகும்.

கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்த (Copernicus) கோபர்னிகஸ் என்பவர், 1543ம் வருடத்தில் சூரியன் உலகத்தைச் சுற்றவில்லை; உலகமும் மற்ற கிரகங்களுந் தான் சூரியனைச் சுற்றிவருகின்றன என்று, முதன் முறையாக மேல் நாட்டில் கண்டுபிடித்தார். (Galileo) கலிலியோ என்ற வான சாஸ்திரி, தூர திருஷ்டிக்கண்ணுடியைக் கண்டுபிடித்து, (Telescope) சாதாரணக் கண்களால் காணமுடியாத நக்ஷத்திரங்களின் நிலைகளையும், இதர கிரகங்களின் நிலைகளையும், காணமுடியும் என்று கண்டுபிடித்தார். அவர்கள் இருவரையும் மேற்சொன்ன கிறிஸ்தவ அதிகாரிகள் கொன்றுவிட்டார்கள். (Bruno) புருனே என்ற மேதாவி, இந்த உலகம் சமதளமாகயில்லை, உருண்டையாக இருக்கிறது என்பதைக் கண்டுபிடித்துச் சொன்ன காரணத்திளுல், அவரை ஏழு வருடகாலம் இருட்டறையில் அடைத்து வதைத்து, கடைசியாகச் சுட்டெரித்துக் கொன்றுவிட்டார்கள். அவரை அடைத்து வைத்திருந்த இருட்டறை. இப்பொழுது ஆயிரக்கணக்கான மக்கள் சென்று போற்றுகின்ற புனித இடமாக மாறியிருக்கிறது.

இந்தவிதமாக, ரோமாபுரியிலும் பிற இடங்களிலும் கிறிஸ்தவர்கள், தங்களுடைய கொள்கைக்கு மாறாக, என்ன உண்மை கண்டுபிடிக்கப்பட்டாலும், அதைப் பலவிதத்தாலும் மறுப்பதும், அவற்றைக் கண்டுபிடித்தவர்களைத் துன்புறுத்திக் கொல்லுவதும், இயல்பாகயிருந்துவந்திருக்கிறது. இன்றும் கிறிஸ்தவர்கள், இறந்த பிற்பாடு இயேசுநாதரை நம்பினாலன்றி, உயிரும் உடலும் சேர்க்கப் படமாட்டாது, நற்கதி அடைய முடியாது. அவரை நம்பாதவர்களெல்லாம். மீளா நரகத்தில் கிடந்து துன்புறுவார்கள் என்று, நம்பிக்கொண்டு இருக்கிறார்கள். அதனாலேயே இறந்தவர்கள் யாராயிருந்தாலும் எந்தக் கொள்கையுடையவராயிருந்தாலும், எந்த தேசத்தவராயிருந்தாலும், எந்தப் பாஷையாளராயிருந்தாலும், அவரவர்களுடைய ஆவி உடலோடு (கனவில் தொழிற்படுகின்ற உடலோடு) வசித்து வருகிறார்கள் என்ற உண்மையையும் அவர்களோடு நாம் பேச முடியும், அவர்கள் நம்மீது அன்புடையவர்களாகவும், பற்றுடையவர்களாகவும், இறந்தபின் இருக்கின்ற நிலைகளைப்பற்றி நமக்கு அறிவிக்க, அவர்கள் மிகுந்த ஆவலுடையவர்களாகயிருப்பதாக, தெரிவிக்கிறார்கள் என்ற உண்மைகளையும், மேல்நாட்டு விஞ்ஞானிகளெல்லாம், (Scientific) அறிவியல் முறையில் சோதனை செய்து நிர்ணயித்த பிறகும், கிறிஸ்தவர்களில் பலர் எப்பொழுதும் எதிர்த்து, அவைகளெல்லாம் (Satan) சயித்தானுடைய வேலைகள் என்றும், இறந்தவர்களுக்கு உடலும் கிடையாது, அறிவும் கிடையாது என்றும், வாதித்துக்கொண்டிருக்கிறார்கள்.

இயேசுநாதர் பிறப்பதற்கு முன்னிருந்த (Socrates) சாக்ரட்டீஸ் என்ற தத்துவஞானி சொல்லுவதைக் கவனியுங்கள். "ஆவி ரூபத்தில் உள்ளவர்கள் எல்லா இடங்களிலும் இருக்கின்றனர். மனிதர்களோடு தொடர்புவைத்து அறிவிக்க வேண்டியதை அறிவித்து வருகிறார்கள். நாம் செய்வதையெல்லாம் அறிந்துகொண்டிருக்கிறார்கள். நாம்

சொல்வதை எல்லாம் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். மனத்திலே நினைப்பதையும் தெரியக்கூடியவர்களாயிருக்கிறார்கள்.''

கிரீக் தேசத்தின் சிறந்த மேதாவியாகிய (Plato) பிளாட்டோ என்பவர், கடவுளுக்கும் மனிதர்களுக்கும் இடையில், இறந்தவர்கள் ஆவி ரூபத்தில் நம்முடைய கண்களுக்குத் தெரியாமலும், நாம் எண்ணுவதையும், பேசுவதையும், செய்வதையும், தெரிந்துகொள்ளக் கூடியவர்களாக இருக்கிறார்கள் என்று சொல்லி இருக்கிறார் கிரீக் தேசத்திலிருந்த (Epimemides) எபிமிமைட்ஸ் என்பவர், இறந்துபோனவர்களோடு வெகுகாலமாக தொடர்பு கொண்டு, பேசி வந்திருக்கிறார் என்று சொல்லப்படுகின்றது. கிரீக் தேசத்திலிருந்து ரோம் தேசத்திற்கு அது பரவியதாகவும், ரோம் தேசத்திலுள்ள (Podalirius) பொடலிரியஸ் (Sibyls) சிபைல்ஸ் ஆகியோர், மருந்தில்லாமல் வியாதிகளைக் குணப்படுத்தவும், பின்னால் வரக்கூடிய காரியங்களை முன்னால் அறிந்து சொல்லவும், வல்லுநர்களாக இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. ரோம் தேசத்திலுள்ள பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள், தாங்கள் சண்டையில் வெற்றி பெறுவதற்கு, அவரவர்களுடைய இறந்து போன தந்தையாருடைய ஆசியை விரும்பிப் பிரார்த்தித்து வந்ததாகவும் சொல்லப்படுகின்றது.

பகலிலே இந்த ஸ்தூல உடலைத் தொழிற்படுத்துவதும், காண முடியாத உயிருக்கும் காணப்படுகின்ற ஸ்தூல உடலுக்கும் இடையே நின்று இயங்குவதும், கனவிலே ஸ்தூல உடலின் உள்ளேயேயிருந்து தொழிற்படுவதும், மரணத்தின் பின் ஸ்தூல உடலின் பிணைப்பு நீங்கித் தனித்துத் தொழிற்படுவதுமான ஆவிகளின் செயல்களையும் தொடர்பையும், சயித்தானுடைய செயல்களும் தொடர்புகளும் என்று கிறிஸ்தவ அன்பர்கள் கருதுவது, உண்மைக்கு எவ்வளவு முரண்பாடு என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

இறந்தவர்கள் நம்மோடு பேசுவதும் தொடர்புகொள்வதும் சயித்தானுடைய வேலையாக இருக்குமானால், ஸ்தூல உடலோடு கூடிய தாய் தந்தையர் பிள்ளைகளோடு பேசுவதும், பிள்ளைகள் பெற்றோருடன் பேசுவதும், உற்றார் உறவினரோடு பேசுவதும், மற்றும் ஸ்தூல உடல்கொண்டு நடக்கின்ற காரியங்கள் அத்தனையும், சயித்தானுடைய வேலையாக முடிந்து, மக்களுடைய அறிவுக்கும் அன்புக்கும் இடமில்லாமற் போய்விடுமல்லவா? கண்ணுக்குத் தெரியாத உயிரானது ஆவி உடலை இயக்க, ஆவி உடல் ஸ்தூல உடலை இயக்குகின்றது என்பதை முன்னரே விளக்கியிருப்பதால், ஆவி உடலின் செயற்பாட்டை அந்தந்த உடலிலுள்ள ஜீவான்மாவின் தொழிற்பாடாகக் கருதவேண்டுமே தவிர, அதைச் சயித்தானுடைய வேலையாகக் கருதுவது சுருதி, யுக்தி, அனுபவம் ஆகிய மூன்றுக்கும் பொருந்தாத விவாதமாகுமென்பது தெளிவாகும்.

## 16. அமெரிக்காவில் விஞ்ஞானமுறையில் ஆவிஉலக ஆராய்ச்சியின் ஆரம்பம்.

இனி, அமெரிக்காவில் விஞ்ஞான முறையில், இப்பொழுது கையாளப்பட்டு வருகிற ஆவி உலகத் தொடர்பு, எப்படி ஆரம்பமாயிற்று என்பதைக் கவனிப்போம். 1848-ம் வருடத்தில், அமெரிக்கா தேசத்தில் (Buffallo) பவ்வல்லோ என்ற இடத்திலிருந்து தென்மேற்கே நாற்பது மைல் தூரத்திலுள்ள, "லிலி டேல்" என்ற ஒரு சிறு கிராமம் இருக்கிறது. அதில் (Fox) பாக்ஸ் என்ற பெயருடைய ஒரு குடியானவன், ஒரு சிறு வீட்டில் குடியிருந்து வந்தான்; அவனுக்கு இரண்டு பெண் குழந்தைகள் இருந்தனர். இருவரில் (Cate fox) கேட்பாக்ஸ் என்பவள் முக்கியமானவள். அவ்விருவரையும் (Fox Sisters) பாக்ஸ் சகோதரிகள் என்று எல்லோரும் அழைத்து வந்தார்கள். அவர்கள் இருவருக்கும் இறந்தவர்களோடு தொடர்பு கொள்ளுகின்ற ஆற்றல் (Medium Power) இருந்திருக்

கிறது. அதனால் அந்த வீட்டில் முன்னர் கொலையுண்ட, தலைச்சுமை வியாபாரியினுடைய வரலாறுகள், அரசாங்கத் தாரால் கண்டு பிடிக்க முடியாமல் இருந்திருக்க, கொலை யுண்டவனுடைய ஆவி, "பாக்ஸ்" சகோதரிகள் மூலமாகத் தன்னுடைய ஸ்தூல உடம்பு எப்படிக் கொல்லப்பட்ட தென்றும், எங்கே புதைக்கப்பட்டதென்றும் அறிவிக்கப் படவே, அந்த நிகழ்ச்சி, அமெரிக்காவில், இறந்தவர்கள் யாவரும், ஆவி உடலோடு இருந்து, நம்மோடு தொடர்பு வைத்துக்கொள்ள முடிகின்றதென்பதை, அறியவும் ஆச் சரியப்படவும் செய்தது.

அந்த ஆச்சரியத்திற்கு முக்கிய காரணம், கிறிஸ்தவர்க ளிடையே இறந்தவர்களுக்கு அறிவும் செயலும் கிடையவே கிடையாது என்ற, பிடிவாதமான கொள்கையேயாகும். அதன் பிறகு "பாக்ஸ்" சகோதரிகள் என்பவர்களின் துணைகொண்டு, இறந்தவர்களோடு பேசத் தொடங்கி, அவர்கள் கையாண்ட முறைப்படி அமெரிக்கா வில் பலப் பல இடங்களில் இறந்தவர்களோடு பேச ஆரம் பித்தார்கள். புதிதாக ஏதாவது ஒன்று தோன்றுமானால், அதைப் பின்பற்றுகிறவர்கள் ஆமோதிப்பதும், முன்னைய கொள்கைக்கு விரோதமென்று கருதுகின்றவர்கள், அத னைக் குறைகூறி விரோதிப்பதும் இயல்பாகும்.

அமெரிக்காவில் இது காட்டுத் தீ போல் பரவி 5-ல் 2-பாகம் இதைச் சோதிக்கத் தொடங்கியது. அப்படித் தொடர்புகொண்டவர்களெல்லாம், இறந்தவர்கள், மனித நிலைக்கு மேம்பட்ட தெய்வீக நிலையை அடைந்துவிட்ட தாகத் தவறாக எண்ணிக்கொண்டு, தனக்கு ஆண் குழந்தை பிறக்குமா? பெண் குழந்தை பிறக்குமா? எப்போது கல்யாணமாகும்? யார் மாப்பிள்ளையாக வருவார்? யார் பெண்ணாக வருவாள்? தனக்கு உத்தியோகம் உயருமா? சம்பளம் உயருமா? புதையல் கிடைக்குமா? என்றெல்லாம் கேட்டு, அவற்றிற்குச்

சரியான விடைகள் வராதபொழுது, அவநம்பிக்கை கொண்டு கைவிட்டுவிட்டார்கள். சரியான விடைகள் கிடைக்கப்பெற்றவர்கள், அதைப்போற்றிப் புகழவும் செய்தார்கள். கற்றறிந்த மேதாவிகள், அதனுடைய உண்மை தெரிய வேண்டுமென்று ஆராய்ந்து, உண்மையென்று கண்டபோது, சஞ்சிகைகள் மூலமாகவும் வெளியிட்டார்கள். அவற்றுள் அமெரிக்காவில் (The Spirit Messenger) ஸ்பிரிட் மெசன்ஜர் (The spiritual telegraph) ஸ்பிரிச்சுவல் டெலிகிராப் இரண்டும் முக்கியமானவை.

**17. இங்கிலாந்தில் ஆவிஉலக ஆராய்ச்சியின் ஆரம்பமும், இன்றைய நிலையும்.**

1852-ம் வருடத்தில் (Hayden) ஹேடன் என்ற பெண்மணி, அமெரிக்காவிலுள்ள (Boston) போஸ்டன் நகரத்தில், இறந்தவர்களுடன் பேசுவதில் பிரபல்யமாக இருந்து, இங்கிலாந்துக்கு வந்துசேர்ந்தாள். இங்கிலாந்தில் (Robert Oven) ராபர்ட் ஓவன் என்ற மேதாவியை, ஆவிகளுடன் பேசலாமென்பதை ஒப்புக்கொள்ளும்படியாக அவள் செய்தாள். அதன் விளைவாகப் பல பிரமுகர்களும் அந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டு, முதன் முதலாக இங்கிலாந்தில் (The Yorkshire spiritual telegraph) யார்க்ஷயர் ஸ்பிரிச்சுவல் டெலிகிராப் என்ற பத்திரிகை தொடங்கப்பெற்றது. அதன் பின், பல சஞ்சிகைகள் வெளிவந்தபோதிலும் (The two worlds) இரண்டு உலகங்கள் என்ற சஞ்சிகையும் (The light) "தி லைட்" என்ற சஞ்சிகையும், இங்கிலாந்தில் ஆவிஉலக ஆராய்ச்சியை, மிகவும் பிரபலமடைய வேலை செய்தவையாகும்.

இறந்தவர்களோடு பேசுவதற்கு, ஆண்களைவிடப் பெண்களுடைய உடல்நிலை ஏற்றதாக அமைந்திருப்பதால், இறந்தவர்களோடு பேசுவதில் ஆண்களைவிடப் பெண்களே

அதிகமாக முன்வந்தார்கள். இறந்தவர்களோடு பேசுகிற ஆற்றல்பெற்ற பெண்மணிகளில், (Margery) மார்கெரி என்பவளும், ஆண்களில் (D. D. Home) டி. டி. ஹோம் என்பவரும், மிகவும் பெயர்பெற்றவர்கள். ரேடியோ பெட்டியில், இன்ன இன்ன ஊரை இன்ன இன்ன மீட்டரில் எடுக்கலாம் என்று காட்டுகின்ற, மீட்டர் கருவியைக் கண்டுபிடித்த, விஞ்ஞானத்தில் தலைசிறந்த (Sir William Crooks) சர் வில்லியம் குருக்ஸ் என்பவரும், (Lord Lingsay) லார்டு லிங்சே என்பவரும், இறந்தவர்களோடு பேசுகின்ற உண்மையையும், இறந்தவர்கள் இருக்கின்ற அபூர்வமான நிலையையும், மேலே சொன்ன டி. டி. ஹோம் என்பவர் மூலமாகச் சோதித்துப்பார்த்து, அதன் உண்மையை இலண்டன்மா நகரத்தில் வெளியிட்டார்கள். சர் வில்லியம் குருக்ஸ் என்பவர், ஆவி உடம்பு உள்ளவர்களுக்கு அபூர்வமான ஆற்றல் உண்டு என்பதை ஒத்துக்கொள்வதற்கு முன்னதாக, காற்று உள்ளே புகாவண்ணம் ஒரு கண்ணாடி அலமாரியைச் செய்வித்து, அதற்குள்ளே ஒரு தராசு வைத்து, அதில் உள்ள தட்டுகளில் ஒன்றை இவ்வளவு தூரம் கீழே போகுமாறு அமுங்கும்படி, செய்ய வேண்டுமென்று ஒரு ஆவியைக் கேட்க, அந்த ஆவி, அவர் சொன்ன தட்டு அவர் சொன்னதுக்கும் மேலதிகமாகக் கீழே உள்ள தளத்தில் மோதும்படியாகச் செய்வித்ததைக் கண்ட பிறகே, அவர் ஒத்துக்கொண்டதாக, அவர் எழுதிய புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

•1869-ம் வருடத்திலே, சர் வில்லியம் குருக்ஸ் போன்ற பல விஞ்ஞானிகள் சேர்ந்து, (The London dialectical society) தி லண்டன் டயலெக்டிக்கல் சொசைட்டி என்ற சங்கத்தின் மூலமாக, இறந்தவர்கள் ஆவி ரூபத்தில் இருக்கிறார்களென்றும், இவ்வுலகத்தாரோடு அன்பு செலுத்துகிறார்களென்றும், நல்ல அறிவோடும், புத்திக் கூர்மையோடும் அவர்கள் இருக்கிறார்களென்றும்,

அவர்களோடு தொடர்பு வைத்து, அங்குள்ள நிலவரங்களை எல்லாம் அறிய முடிகிறதென்றும் வெளிப்படுத்தினார்கள். அவ்விதம் வெளிப்படுத்தினவுடனே, அப்பொழுது இருந்த (The Times) டைம்ஸ் பத்திரிகை, (The Pallmall gazette) பால்மால் கெஜெட், (The conservative standard) கன்செர்வேடிவ் ஸ்டாண்டர்டு, (The morning Post) மார்னிங் போஸ்ட் முதலிய எல்லாப் பத்திரிகைகளும், ஒரே முகமாக எதிர்த்து "அதெல்லாம் பெரிய ஏமாற்று என்றும், எண்ணமுடியாத புளுகுகளென்றும், முட்டாள் தனமென்றும், கண்கட்டி வித்தையென்றும், பைத்தியக்காரத்தனம் என்றும், அதில் ஈடுபட்டவர்களையெல்லாம் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்ப வேண்டுமென்றும்" தலையங்கங்கள் எழுதி வெளியிட்டார்கள்.

இதற்கெல்லாம் முக்கிய காரணம், இறந்தவர்களுக்கு அறிவும் செயலும் கிடையாது என்று கிறிஸ்தவர்கள் கொண்டிருந்த, விபரீதமான கொள்கையேயாகும் அப்படியிருந்தும், மேலே சொன்ன சங்கத்தின் விடா முயற்சியாலும் (Sir William Crooks) சர் வில்லியம் குருக்ஸ் போன்ற விஞ்ஞானிகள், உண்மை என்று நிருபித்த காரணங்களாலும், ஆவி உலகத்தொடர்பு அற்றுவிடாமல், அறிவாளிகளிடத்தில் நாளுக்குநாள் பரவி வந்து, 1882-ம் வருடத்தில் ஆவி உலக ஆராய்ச்சி உண்மையானதென்றும், மதிப்பிற்குரியதென்றும் ஏற்பட்டு, (Society for Psychical Research) மனோதத்துவ ஆராய்ச்சி சங்கம் என்ற, ஒரு பெரிய பெயர் பெற்ற சங்கம் தோன்றலாயிற்று. சுருக்கெழுத்தில் அதை S. P. R. என்று சொல்லுவார்கள். அது முதல் ஆவி உலக ஆராய்ச்சி, உலகிலுள்ள விஞ்ஞான ஆராய்ச்சிகளில் ஒன்றாகக் கருதப்பட்டு வரலாயிற்று. S. P. R. சங்கத்திற்கு முதல் தலைவர் (Professor Henry Sidgwick) புரொபசர் ஹென்றி சிட்ஜ்விக் என்பவராவார். அறிவியல் ஆராய்ச்சியில் ஈடுபட்ட பலர்,

ஆவி உலக ஆராய்ச்சியில் ஈடுபட்டார்கள். இறந்தவர்கள் சாதாரணக் கண்களுக்குத் தெரியாமல் இருந்துகொண்டு, நம்மீது அன்புடையவர்களாகவும், பற்றுடையவர்களாக வும், நம்மோடு தொடர்புடையவர்களாகவும் இருக்கிருர்கள் என்று நிரூபிக்கப்படவே, அந்த நிரூபணம் கடவுள் இல்லை என்று சொல்லுகிறவர்களையெல்லாம் திகைக்கும் படியாகவும், கண்ணுக்குத் தெரியாத காரணத்தால் கடவுள் இல்லை என்று சொல்லுவது கூடாதுஎன்று சிந்திக்கும்படியாகவும் செய்துவிட்டது.

ஆவி உலகத் தொடர்பில் வெற்றி பெற்ற (William Eglington) வில்லியம் எக்லிங்டன் என்பவர், தன்னுடைய புத்தகத்தில் கீழ்வருமாறு சொல்லியிருக்கிருர்:- "என்னுடைய தந்தையார் (Dr. Sexton) டாக்டர் செக்ஸ்டன் என்பவரால், ஆவி உலக விஷயமாகச் செய்யப்பட்ட பல சொற்பொழிவுகளைக் கேட்டுவந்து, அவர் சொன்னமுறைப் படி எங்களுடைய வீட்டில் இறந்தவர்களோடு பேசுவதற்கு ஒரு கூட்டம் கூட்டினர். எட்டு நாட்கள் வரை பிரார்த்தனைகள் செய்தும், பைபிளிலுள்ள பாட்டுக்களைப் பாடியும், ஒரு பயனுமில்லாமல் போய் விட்டது. ஆவி உலகத்தொடர்பு ஒன்றும் ஏற்படாமல் இருந்தது. நான் அதையெல்லாம் பார்த்து விட்டு, இது பெரிய பைத்தியக் காரத்தனம் என்று நினைத்து, என் தந்தையாருடன் ஒன்றும் பேசாமல் ஒரு பலகையில் "இந்த அறையில் பைத்தியக்காரர்கள் கூடியிருக்கிருர்கள், அபாயகரமானவர்கள், விரைவில் ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட வேண்டியவர்கள்" என்று எழுதித் தொங்கவிட்டேன்.

அதைப் பார்த்த என் தந்தையார், கோபாவேசங் கொண்டு தன்னுடனே அந்த ஆராய்ச்சியில் ஒன்று ஈடுபட வேண்டும்; இல்லாவிடில் வீட்டை விட்டு வெளியே போக வேண்டும் என்று உத்தரவிட்டார். நானும் பயந்துபோய் அவர்களுடனே அந்த அறைக்குள் சென்று, என்ன நடக்

கின்றதென்று கவனித்துக் கொண்டிருந்தேன். உள்ளே சென்றதும் எனக்கு ஒரு விதமான உணர்ச்சி ஏற்பட்டு, கேலி செய்துகொண்டிருந்த மனப்பான்மை மாறத் தொடங்கியது கொஞ்ச நேரத்திலெல்லாம் நாங்கள் இறந்தவர்களோடு பேச ஆரம்பித்துவிட்டோம். கேட்ட கேள்விகளுக்கெல்லாம் புத்திக் கூர்மையுள்ள பதில்கள் கிடைத்தன. சோதனை செய்வதற்காகக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம், திருப்திகரமான பதில்கள் கிடைத்தன. அங்குக் கூடியிருந்தவர்களெல்லாம் மிகவும் சந்தோஷப்பட்டார்கள். அன்று சாயங்காலம் நாங்கள் பிரார்த்தனை செய்த பிற்பாடு, என்னுடைய இறந்து போன தாயார் ஆவி ரூபத்தில் வந்து, நாங்கள் நம்பும்படியாக அரைமணிநேரம் பல விஷயங்களைப் பற்றிச்சொன்னதுமே, நான் இதுவரை எவ்வளவு அறியாத்தனமாகப் பொறுப்பில்லாத முறையில், உண்மைக்கு மாறுக நடந்துவந்தேன் என்பதை உணரலானேன்.

இறந்தவர்கள் திரும்பவும் இந்தப் பூவுலகத்திற்கு வந்து, அவர்கள் உயிரோடு இருக்கிற விபரமும், அவர்கள் நம்மீது அன்பு குறையாதவர்களாக இருந்து, நமக்கு அநேக நற்புத்திகளைப் புகட்டுகிருர்கள் என்ற விபரமும், சந்தேக விபரீதமில்லாமல் தெரியவந்த உடனேயே, எனக்கு ஒரு மகிழ்ச்சியும் என்னுடைய உலக நடையில் ஒரு மாற்றமும் ஏற்படலாயிற்று. அதுமுதல் பற்பல மணி நேரங்கள், நான் இறந்தவர்களோடு பேசி மகிழ்ந்திருக்கிறேன்.'' இவ்விதமான நிகழ்ச்சிகள் ஆங்கிலப் புத்தகங்களிலிருந்து எழுதுவதானல், பல்லாயிரம் பக்கங்கள் எழுதலாம். பிறருடைய அனுபவமெல்லாம் தன்னுடைய அனுபவத்திற்கு வந்தாலன்றி, ஒத்துக்கொள்ளக்கூடிய மனப்பான்மை சாதாரண மனிதர்களுக்கு, ஏற்படமுடியாது என்பதை நன்கு உணர்வோம். ஆகையால் அவற்றையெல்லாம் இங்கு விவரிக்க விரும்பவில்லை.

விஞ்ஞானிகளில் (Sir Oliver Lodge) சர் ஒலிவர் லாட்ஜ் எழுதிய (Reymond) ரெய்மாண்டு என்ற தலை அங்கப்புத்தகம், அவர் ஆவி உலக ஆராய்ச்சியில் எவ்வளவு தீவிரமான ஆராய்ச்சி செய்திருந்தார் என்பதையும், இறந்து போன தன்னுடைய மகன், 'ரெய்மாண்டு' என்பவன் அதற்கு எவ்வளவு துணைபுரிந்தான் என்பதையும் விளக்கு கின்றது. அறிவியல் மேதாவிகளில் (Sir Arthur Conan Doyle) சர் ஆர்தர் கொனென்டாயில் என்பவர், ஆவி உலக ஆராய்ச்சியின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டது போல, வேறு யாரும் அவ்வளவு தீவிரமாக ஆராய்ச்சி செய்யவில்லை என்றே சொல்லலாம். எழுத்தாளர்களில் (W. D. Stead) ஸ்டெட் என்பவர் ஆவி உலக ஆராய்ச்சி யில் ஈடுபட்டு, எதிர்ப்புக்களை எல்லாம் கொஞ்சமும் பொருட்படுத்தாது துணிகரமாக வேலை செய்திருக்கிறார். அது போலவே (Horace-leaf) ஹொரேஸ் லீப் என்ப வருடைய புத்தகங்கள், மக்களிடையே பெரியதோர் கிளர்ச்சியை உண்டுபண்ண உதவியிருக்கின்றன.

பாதிரிமார்களில் (Rev. William Stainton Moses) 'ரெவரெண்டு வில்லியம் ஸ்டெயின்டன் மோசஸ்' என்ப வர் எழுதிய (Sprit teachings) 'ஆவியின் போதனைகள்' என்ற புத்தகமும் (Rev. Mawrice Elliot) ரெவெரெண்டு மாரைஸ் எல்லியெட் என்பவர் எழுதியிருக்கிற (Psychic powers of Jesus Christ) 'ஏசுநாதரின் மனோ தரும சக்திகள்' என்ற புத்தகமும் (Spiritualism in the old and new testaments), பழைய புதிய ஏற்பாடுகளில் ஆவிகளின் இயக்கம் என்ற புத்தகமும், எவ்வளவு பிடி வாதகுணமுள்ள கிறிஸ்தவ அன்பர்களையும், ஆவி உலக ஆராய்ச்சியின் உண்மையை ஒப்புக்கொள்ளச் செய்யக் கூடியவைகளாக அமைந்துள்ளன.

இப்பொழுது உயிரோடு இருப்பவர்களில் (C. W. Lead-Beator) லெட் பீடர் என்பவர், இது சம்பந்தமாக பல புத்தகங்கள் வெளியிட்டிருக்கிறார். ஆவி உலக ஆராய்ச்சியில் ஈடுபட்ட சங்கங்களும் வேதக்கோயில்களும் (United Kingdom) ஐக்கிய ராஜ்யம் என்ற இங்கிலாந்தில் 500-க்கு மேலும், (Brazil) பிரேசில் தேசத்தில் 170ம் (Belgium) பெல்ஜியம் தேசத்தில் 60ம் இன்னும் கூபா, கொலம்பியா, அமெரிக்கா, மெக்சிகோ, ஜெர்மனி, பிரான்சு போர்ச்சுகல் முதலிய பல தேசங்களிலும் எண்ணிறந்தன

## 18. இந்தியாவில் மேல்நாட்டு முறையில் ஆவி உலக ஆராய்ச்சி.

இந்தியாவில், கல்கத்தா இராமகிருஷ்ண வேதாந்த மடத்தைச் சேர்ந்த, சுவாமி அபேதானந்தா என்பவர் (Life beyond death) "மரணத்தின் பின்னுள்ள வாழ்க்கை" என்னும் விஷயமாக ஆராய்ச்சிப் புத்தகம் வெளியிட்டிருக்கிறார். பம்பாயில் (V. D. Rishi) வி. டி. ரிஷி என்பவர், இது விஷயமாக ஆராய்ச்சி செய்து, மேல் நாடுகளுக்கும் சென்று பல சங்கங்களைக் கலந்து வந்திருக்கிறார். அவர் ("Spiritualism in India, theory & Practice") "இந்தியாவில் ஆவிவுலக ஆராய்ச்சி விவரமும் அநுபவமும்" என்ற புத்தகத்தை எழுதியிருக்கிறார். கோயம்புத்தூரில் ("Spiritual healing centre") "ஆவிகளால் குணப்படுத்தும் நிலையம்" என்ற ஒரு சங்கம் நடைபெற்றுவருகிறது. இதைத்தவிர, இந்தியாவிலும் இலங்கையிலும் அநேக குடும்பங்களில், இறந்த சுற்றத்தாரோடு பேசிவருகிறார்கள்; அப்படிப்பட்டவர்களில் எமது பூர்வாஸ்ரம குடும்பமும் ஒன்று.

இறந்தவர்கள், புண்ணிய மேலீட்டினால் ஆவி உலகத்தில் எவ்வளவு மேலான நிலையில் இருக்கிறார்களோ, அதற்

குத் தகுந்தபடி அவர்கள் அநேக அற்புதமான காரியங்களைச் செய்யவும், சொல்லவும் முடிகிறது. பாவம் செய்தவர்கள், ஆவிவுலகத்தில் பாவப்பகுதியாகிய இருட்பகுதியில் அடைக்கப்பட்டு, அவர்கள் விருப்பம்போல் எங்கும் போகவாவது, இங்கு இப்பூவுலகில் நினைப்பவர்களிடம் வரவாவது முடியாதிருக்கிறார்கள். புண்ணியப் பகுதியாகிய அருட் பகுதியில் இருக்கக்கூடியவர்களே, இங்குள்ள நிகழ்ச்சிகளைக் கண்காணித்துக்கொண்டும், இருட் பகுதியில் இருப்பவர்களுக்கு நல்லுபதேசங்கள் செய்துகொண்டும், வழிபாடுகள் செய்துகொண்டும் இருக்கிறார்கள். பலர் இறந்தவர்களுடன் பேசுகிற முறையைத் தெரிந்து உற்சாகத்துடனே பேச ஆரம்பிக்கிறார்கள்.

எல்லோருடைய உடம்புகளையும் ஆவி உடலோடு இருக்கின்ற இறந்தவர்கள், இயக்கமுடியாதிருக்கின்ற காரணத்தினால், கொஞ்சநேரம் அல்லது சில மணி நேரங்கள் முயற்சி செய்துவிட்டு, மறுமொழிக்குரிய அறிகுறிகள் வராததைக் கொண்டு நம்பிக்கையிழந்து விடுவதோடு, இறந்தவர்கள் பேசுகிறார்கள் என்பதெல்லாம் பொய்யான காரியம் என்று சொல்லவும் துணிந்துவிடுகிறார்கள். இன்னும் சிலர் பேச ஆரம்பித்து, மறுமொழி வரக்கூடிய அறிகுறிகள் தென்பட்டு, வார்த்தைகளும், வாக்கியங்களும் சரியாக வராத சமயத்தில், மேற்கொண்டும் சலியாது முயற்சிசெய்வதை விட்டுப் பொறுமையை இழந்து, இறந்தவர்களின் தொடர்பையும் கைவிட்டு விடுகிறார்கள். இறந்தவர்களுடன் தொடர்புவைத்துக் கொள்வதும், விண்ணவரை ஏவல் கொள்ளுவதும் சாமான்ய காரியங்களல்ல. அதனாலேயே இதன் உண்மை உலகத்திலே பரவவேண்டிய அளவு பரவாதிருக்கிறது.

## 19. இறந்தவர்களோடு பேசுவதற்குச் சாதனமாயிருப்பவர்கள் 'மீடியம்' எனப்படுதல்.

சரியாகப் பேச்சு வருவதற்கு, இப்பூவுலகத்திலுள்ளவர்களுடைய உடம்பு, இறந்தவர்களுடைய ஆவி உடலால், பூரணமாக இயக்கும் தன்மையில் அமைந்திருக்க வேண்டும். அவ்விதத் தன்மை மக்களாய்ப் பிறந்த யாவருக்கும் உண்டு. ஆனால் அதில் ஒருவருக்கொருவர் ஏற்றத் தாழ்வு உண்டு. உதாரணமாக, ஆண்பாலரையும், பெண் பாலரையும், 13 வயதிலிருந்து 19 வயது வரை சுலபமாக இபக்கமுடிகின்றது என்று இறந்தவர்கள் குறிப்பிடுகிறார்கள். அந்த வய்து உள்ளவர்களிலும் சிற்சில உடம்புகள், இயக்குவதற்கு சுலபமாயிருப்பதாகவும், சிற்சில உடம்புகளை இயக்குவதற்குக் கொஞ்சம் சிரமமாயிருப்பதாகவும், இன்னும் சிலரை இயக்கவே முடியாமலிருப்பதாகவும் சொல்லுகிறார்கள். இறந்தவர்கள், சுலபமாக இயக்கும் தன்மை வாய்ந்த ஸ்தூல உடல்களைப் பெற்றவர்களுக்கு 'மார்க்கர்' அல்லது 'வாயிலாளர்' அல்லது 'தொடர்பு உண்டுபண்ணுகிறவர்' என்று சொல்லுவார்கள். அவர்களை ஆங்கிலத்தில் ("Medium") "மீடியம்" என்று சொல்லுவார்கள்.

மேலே சொன்ன வயதுக்குட்பட்ட ஆண்களிலும் பெண்களிலும், யாரிடம் இறந்தவர்கள் சொப்பனத்தில் வந்து, தங்களுக்கு இதுவேண்டும், அதுவேண்டும், என்று கேட்பதாகச் சொல்லுகிறார்களோ, அப்படிப்பட்டவர்களெல்லாம் பெரும்பாலும் நல்ல "மீடியம்" எனத் தெரிய வருகிறது. வயது வந்தவர்களிலும் சிலர் நல்ல மீடியமாக இருக்கிறார்கள். இறந்தவர்களோடு பேசுவதற்கு, நமக்கு அதிகப் பொறுமையும், அவர்களுடன் பேசவேண்டுமென்ற உண்மை ஆவலும், பக்தியும் வேண்டும். நாம் பேசுகின்ற இடம் தூய்மையுள்ளதாக இருத்தல் வேண்டும். நாமும் தூய்மையுடையவர்களாக இருத்தல் வேண்டும்.

பேசும் தன்மைபெற்றுவிட்ட சிலர், தங்களுடைய இறந்துபோன உற்றார் உறவினரை அழைத்துப்பேசும் பொழுது, அவர்கள் பாவப்பகுதியில் இருந்தால், அவர்கள் பேசுகின்ற பேச்சு இனிமையாக இருக்காது. அதற்குக் காரணம், அவர்கள் இருள் உலகத்தில் அடைக்கப்பட்டு, இந்நிலவுலகிலுள்ளவர்கள் நினைத்த பொழுது, இங்குவந்து பார்த்துப்போகும் சுதந்திரம் அற்றதும், அதனால் இங்குள்ள சுற்றத்தாரோடு அவர்களுக்குத் தொடர்பு அறவே விட்டுப் போனதுமேயாகும்.

இனி, இறந்தவரோடு பேசுகின்ற வாய்ப்புப் பெற்ற பிள்ளைகளும் கிடைத்து, இறந்துபோன உற்றார் உறவினர் புண்ணியப் பகுதியிலும் இருந்தால், அவர்களோடு பேசுதல், அவர்கள் இறவாதிருந்தால் எவ்வளவு மகிழ்ச்சியைக் கொடுக்குமோ, அவ்வளவு மகிழ்ச்சியைக் கொடுக்கும். அவர்களை, நம்முடைய ஊனக்கண்களால் பார்க்கமுடியாமலிருக்கிற ஒரு வேற்றுமையைத் தவிர, மற்றப்படி நாம் கேட்பவைகளுக்கெல்லாம், அவர்கள் உயிரோடிருந்திருந்தால் என்னென்ன போசனைகளையும், புத்திகளையும் சொல்லுவார்களோ, அவற்றையெல்லாம் சொல்வதோடு, நாம் மேல்நிலையடையவும், ஆவியுலகத்தில் மேம்பாடுடன் வாழவும், இப்பூவுலகில் நாம் செய்யவேண்டியவற்றையும், சந்தேக விபரீதமின்றித் தெரிந்துகொள்ளும்படி சொல்லுவார்கள். அங்குள்ள வாழ்க்கையைப் பற்றியும், பாவம் செய்தவர்கள் இருக்கின்ற இருள் பகுதியைப்பற்றியும் சொல்லுவார்கள். இவற்றிற்கெல்லாம் மேலாக, நம்முடைய நெருங்கிய சுற்றத்தாருள், யார் யார் நல்ல புண்ணிய சீலர்களாக இவ்வுலகில் வாழ்ந்து வந்து, இறந்தபின் ஆவி உலகில் புண்ணியப் பகுதியில் மேலான நிலையில் இருக்கிறார்களோ, அவர்களுடன் பேசும் பேறு கிடைக்குமானால் அது மட்டில்லாத மகிழ்ச்சியைக் கொடுப்பதாகும்.

இங்குப் பெரிய பக்திமான்கள் போலவும், சிறந்த துறவிகள் போலவும் நடித்து, தங்களுக்கு வேண்டிய சமாதி முதலாய தோரணைகளைச் சிறந்த முறையில், முன்னதாகவே அமைத்துக்கொண்டு இறந்தவர்களில் சிலர், உண்மையில் ஒழுக்கக்கேடுடையவர்களாயிருந்த காரணத்தால், ஆவி உலகத்தில், இருள் பகுதியாகிய பாவப்பகுதியில் அடைக்கப்பட்டுத் துன்புற்றுக் கொண்டிருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. இவ்வுலகில், ஒருவிதப் படாடோபமுமின்றி, வறியவர்களாக வாழ்ந்து இறந்தவர்களில் பலரும், சிறு கைக்குழந்தைகளாக இறந்தவர்களில் பலரும், ஆவிவுலகில் மிகவும் மேலான நிலையில் இருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனதால் இந்த உலகத்தில் கண்ட கோலத்தைக்கொண்டும், பிற வேடத்தைக் கொண்டும் ஆவி உலகத்திலிருக்கும் நிலையைத் தீர்மானித்துவிட முடியாதென்று எச்சரிக்கிறோம்.

## 20. மேல்நிலையிலுள்ள ஆவிகளின் சிறப்பு இயல்புகள்.

புண்ணியப்பகுதியில், மிகவும் மேலான நிலையில் இருக்கின்றவர்களோடு பேசும் வாய்ப்புக்கிடைத்தால், அவர்கள், ஆவி உலகத்திற்கு மேலுள்ள எமலோகம், பிரம்மலோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் முதலிய இடங்களுக்குப் போய்வருகிறதும், அங்கே உள்ள அதிகாரமூர்த்திகளோடு பேசுகிறதும், அங்குள்ள இரகசியங்களை நமக்குச் சொல்லுகிறதும், மிகவும் ஆச்சரியகரமாயிருக்கும். நாம் அவற்றை அறிந்துகொள்வோமானால், அது புராணங்களின் உண்மையை உய்த்துணரவும், ஒப்புக்கொள்ளவும் அரியதோர் வாய்ப்பாக அமையும்.

ஆனதால் இறந்தவர்களோடு பேசுதல் இன்பகரமாகவும், உபயோகமுள்ளதாகவும் அமைவதற்கு, முதலாவது நல்ல மீடியம் அமையவேண்டும். இரண்டாவது நம்முடன் பேசுகின்ற ஆணோ பெண்ணோ, ஆவி உலகத்தில் புண்ணி

யப் பகுதியில் இருக்கவேண்டும். நல்ல மீடியமாக இருந்தால், ஆவிவுலகத்திலிருந்து எந்த பாஷையில் பேசினாலும், மீடியத்திற்கு அது தெரிந்த பாஷையாகயிருந்தாலும், தெரியாத பாஷையாக இருந்தாலும், அந்தந்த பாஷையிலேயே, மீடியம் மூலம் பதில் கிடைக்கும். அப்படி அல்லாதவர்களுக்கு, ஆவிவுலகத்திலிருப்பவருடைய அன்னிய பாஷையும், மீடியத்திற்குத் தெரிந்த தாய்பாஷையும் கலந்து வரும். அதுவும் அல்லாதவர்களுக்கு, மீடியத்தினுடைய தாய்ப்பாஷையிலேயே, ஆவி உலகத்திலுள்ள எல்லா பாஷையாளருடைய பேச்சும் வரும். ஆவி உலகத்தில் படிப்பே தெரியாதவர்களும், பிறந்தவுடனே இறந்துபோன பேச்சுத் தெரியாத சிறு குழந்தைகளும், பேச முடிகின்றது ஆச்சரியமானதாக

இனி, புண்ணியப்பகுதியில் மேலான நிலையில் இருக்கின்ற ஆவிகளுக்கு, மற்ற புண்ணியப்பகுதியில் சாதாரண நிலையிலுள்ளவர்களுக்கு இயலாத தன்மைகள் உண்டு. அவற்றில் (1) ஆவி உலகத்திற்கு அப்பாற்பட்ட மேலுலகங்களுக்குச் செல்லுதல் (2) ஆவி உலகத்திலிருந்து மறு பிறவி எடுக்க நேர்ந்து, அவ்விதம் பிறந்தவர்கள் எந்த ஊரில், எந்தத் தகப்பனுருக்கு, என்ன குழந்தையாக எந்தப் பெயருடன், எந்த வயதில் இப்பொழுது வசித்து வருகிறதென்று, மேல் உலகங்களுக்குச் சென்று அறிந்து வந்து நமக்கு அறிவித்தல் (3) நமக்குப் பின்னல் நடக்கக்கூடிய காரியங்களை, முன்னதாகவே நாம் கேட்டிருந்தாலும், கேளாதிருந்தாலும், அவர்களாகவே அறிவித்தல்.

ஆகவே, சரியான ஆவிவுலகத் தொடர்பு, பல சூழ்நிலைகளைப் பொறுத்து, விருப்பத்தைக் கூட்டக்கூடியதாகவும், விருப்பத்தைக் குறைக்கக்கூடியதாகவும் அமையும் என்பதை அறிந்திருத்தல் வேண்டும்.

திருவருளால் எமக்கு இங்கு நல்லதோர் மீடியமும், ஆவி உலகத்தில் மிகவும் மேலான நிலையில் இருந்த, எம்முடைய பூர்வாஸ்ரமத் தந்தையாருடைய தொடர்பும், அவர்களுக்கும் மேலான நிலையிலிருந்த, எம்முடைய (பிறந்த ஐந்தாம் நாள் இறந்துபோன) பெண்குழந்தையின் தொடர்பும், பல அரிய உண்மைகளை உணர்த்துவதற்கு ஏதுவாயிற்று.

இறந்தவர்களோடு நாம் பேசியிருக்கிற விவரங்களை யெல்லாம் எழுதுகிறதாயிருந்தால், ஆயிரக்கணக்கான பக்கங்கள் எழுதவேண்டியதாகவிருக்கும். அதில் குடும்ப விஷயங்களும், வியாபார விஷயங்களும், சமய உண்மைகளை உள்ளவாறு அறிந்துகொள்வதற்குரிய விவரங்களும், புண்ணியம் செய்தவர்களும், பாவம் செய்தவர்களும், இறந்தபின் ஆவி உலகத்தில் இருக்கும் நிலைகளும், இன்னும் இவ்வுலகமக்கள் நினைப்பதையும், சொல்வதையும், செய்வதையும் அறிந்து, மேலுலகங்களிலிருந்து ஆண்டவன் ஆட்சிபுரிந்துவரும் அரசாங்க அமைப்பின் விவரங்களும், விளக்கப்பட்டுள்ளன. அவற்றில் முக்கியமான சிலவற்றை மட்டும் சுருக்கமாகக் கூறுதல் பயனுடையதாகவும், உணர்ச்சி ஊட்டக் கூடியதாகவும் இருக்குமெனக் கருதிக் குறிப்பிடுகிறோம்.

பிறந்த அன்றும் சிலநாட்களிலும், சில மாதங்களிலும் இறந்துபோகின்ற குழந்தைகள் பேசும் ஆற்றல் இல்லாதனவாக இருக்கும் என்றே யாவரும் நினைக்கக்கூடும். இப்பூவுலகத்திலே, அப்படிப்பட்ட குழந்தைகள் பேசும் ஆற்றல் இல்லாதிருப்பதைக் காணுகின்ற நாம், வேறு என்னதான் நினைக்கக்கூடும்? உண்மை எப்படி இருக்கிறதென்றால், சிசுவாக இறந்து போகின்ற குழந்தைகளில் பெரும்பாலோர், மிகுந்த புண்ணியம் உடையவர்களாகவும், ஆவி உலகத்தில் மேலான நிலைகளில் இருப்பவர்களாகவும், பெற்றோர்களுக்கு ஆவி உலகத்திலிருந்து புத்திமதி சொல்லக் கூடிய

வர்களாகவும் இருக்கிறார்கள். அதற்குக் காரணம் வினவிய பொழுது, அவர்கள் விட்டகுறை தொட்டகுறைகளைப் பூர்த்திபண்ணுவதற்காக என்றே இப்புவியில் பிறந்து, இருக்கவேண்டிய நாள்வரை இருந்து, இறந்து, மேலுலகம் சென்று, மேலான நிலைகளில் அங்கு தங்கியிருந்து, மறு பிறவியில்லாத நிலை எய்தி விடுகிறார்கள் என்று அறிவிக்கப் படுகிறது.

## 21. இறந்த குழந்தை தன் தந்தையை ஆஸ்திகராக்கின விந்தை.

இலங்கையில் வியாபார வட்டாரங்களில், திரு. A. S. S. சங்கரலிங்கம்பிள்ளையவர்களையும், அவர்களுடைய தம்பி திரு. சொர்ணம்பிள்ளையவர்களையும், தெரியாதவர்கள் கிடையாது. அவர்களுக்கு ஒரு புத்திரன் ஒருவயதுப் பிராயத்தில் இறந்துவிட்டான். அவனுக்கு வைத்திருந்த பெயர் சம்பந்தன். சுமார் 10வருடங்கள் கழிந்தபின், இலங்கையில் இறந்தவர்களுடன் பேசும் முறையைக் காட்டிக்கொடுக்க வேண்டுமென்று நாம் முயற்சி செய்தபோது, மேலே சொன்ன A. S. S. சங்கரலிங்கம் பிள்ளை அவர்களின் புதல்வி, செல்வி மீனாள் ஒரு மீடியமாகக் காணப்பட்டாள். அவள் மூலம் 10 வருஷங்களுக்கு முன், ஒரு வயதுப் பிராயத்தில் இறந்துபோன தம்பி சம்பந்தன் எங்களுடன் பேசிக் கொண்டிருந்தான். தன்னுடைய சொந்த மகள் மீடியமாக இருந்து, தன்னுடைய இறந்துபோன சொந்த மகன் வந்து பேசுகிறான் என்பதையறிந்தும், ஒன்றரைவருட காலமாக தந்தையாராகிய சங்கரலிங்கம்பிள்ளை அவர்கள், அதை நம்ப மறுத்ததுமல்லாமல், எமக்கும் தன் தம்பி சொர்ணம் பிள்ளைக்கும் பயித்தியப்பட்டமும் சூட்டி, வியாபாரத்திற்கு லாயக்கில்லாதவர்கள் என்று பேசவும் ஆரம்பித்துவிட்டார்கள்.

என்ன பேசுகிறுன் என்பதையும், எப்படிப் பேசு கிறுன் என்பதையும் பார்க்காமலே, அப்படிப்பேசுவது சரியல்லவென்று சொன்னதற்கு, "செத்தவன் எப்படிப் பேசுவான், அது நம்ப முடியாத காரியம்; ஆனதால் அதைப் பார்க்கவேண்டிய அவசியம் இல்லை" என்று கூறி விட்டார்கள். இது விஷயமாக, ஆவி உலகத்திலுள்ள அவர்களுடைய மகன் சம்பந்தனிடம் சொன்னபொழுது, அவன் தன் தந்தையாருக்குப் பணத்தைத் தவிர வேறு எந்த ஆராய்ச்சியிலும் சிந்தை செல்லாது; அவர்களை நம்பும் படியாகச் செய்வதற்குப் பணம் சம்பந்தமான ஒரு நிகழ்ச்சி யைச் சொல்லியே வசப்படுத்தவேண்டும் என்றும், அதற் குரிய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருப்பதாகவும் அறிவித் தான்.

சில மாதங்களுக்குப் பிறகு சம்பந்தன், தன் தந்தை யாரைத் தன் அக்காளிடம் சொல்லி அழைத்து வைத்துக் கொண்டு, அவர்களுக்கு அதிர்ஷ்டம் வந்திருப்பதாகவும், ஒரு பெரிய வியாபாரி நல்ல வாடகை வரக்கூடிய ஒரு வீட்டை, அவர்கள் பெயருக்கு மிகவும் குறைந்த விலை போட்டு எழுதிவைத்திருப்பதாகவும், அதன் விவரம் மறு வாரம் வெளியாகும் என்றும் அறிவித்தான். அதுசமயம் அதை அவர்கள் நம்புவதற்கில்லை. மறுவாரம் அதன் விவ ரம் அவர்களுக்கு வெளியானதும், தன் மகன் சம்புந்தன் முன்னரேயே அறிவித்தது அவர்களுக்குப் பெரிய ஆச்சரி யத்தைக் கொடுத்தது. அதிலிருந்து அவனிடம் அடிக்கடி பேசுவதும் அநேக விஷயங்களைக்கேட்டு அவனைச் சோதிப் பதுமாக இருந்தார்கள். அவன் சொல்லுவதெல்லாம் அனு பவத்திற்கு ஒத்துவரவே, அவர்கள் சம்பந்தன் பேசுவதி லும், ஆவி உலகத்திலுள்ள பிறர் பேசுவதிலும் பெரிய உண்மைகள் இருக்கின்றனவென்று ஒத்துக் கொள்ள

கோவிலுக்குப் போகிறவர்களையும், திருநீறு அணிபவர்களையும், உருத்திராக்கம் போடுகிறவர்களையும், கேலியும், நையாண்டியும் செய்துவந்த அவர்கள், ஆவி உலகத்திலிருந்து பேசிய தன்னுடைய மகன் சம்பந்தன் சொல்லின் படி, சிவபூசையும் மேற்கொண்டு, விபூதி உருத்திராக்க தாரியராகக் காட்சியளித்து, ஆவி உலகத்தைப் பற்றி யாரிடமும் பிரசாரம் செய்யக்கூடியவர்களாக மாறிவிட்டார்களென்றால், சற்புத்திரர் இருந்தாலும், இறந்தாலும் நம்மை நரகத்திலிருந்து விடுவிக்கப் பாடுபடுகிறார்களென்பதற்கு வேறு சான்றுகளும் வேண்டுமோ? சிந்தியுங்கள்.

அதேவிதமாக இலங்கையில் ரப்பர் வியாபாரம் செய்து பெரும்பொருள் ஈட்டிய திரு. C. சண்முகம் பிள்ளையவர்களும், அவர்களுடைய ஒரே புதல்வன் முருகன் என்பவன், ஆவி உலகத்திலிருந்து அவர்களுடன் பேசியதின் பயனாகவே, அவர்களும் சிவபூசா துரந்தரராக விளங்குகிறார்கள். மேலே சொன்ன இரு பிரமுகர்களும் பாளையங்கோட்டையில் வசித்துவருகிறார்கள்.

## 22. இறந்த மனைவி களவுநடப்பதை அறிந்து அறி

கொழும்பிலே சுந்தரம்ஸ் லிமிடெட் கம்பேனிக்கு, லொசஞ்சஸ் (Lozenges) செய்கின்ற தொழிற்சாலையும், அச்சுயந்திரசாலையும் உண்டு. கம்பேனியில் வேலைபார்த்து வந்த ஒரு "ஸ்டோர் கீப்பர்" மிகவும் நம்பிக்கையுள்ளவன் போல் நடித்து, தொழிற்சாலையிலிருந்து வருகிற லொசஞ்சஸ் டின்களை, கள்ளத்தனமாக வேறொரு கடையில் டெலிவரி கொடுக்கும்படி, கூலிக்காரனைத் தூண்டி, கடைக்கு வந்ததாகக்கணக்கு எழுதி, சில்லறை விற்பனைக்குக் கொடுத்ததாகப் பற்று எழுதிவைத்துக் களவுசெய்துவந்தான். அவன்பேரில் கடையிலுள்ள எல்லோருக்குமே உண்மையான வேலைக்காரன் என்ற எண்ணம் உண்டு. நாம் அப்

என்ன பேசுகிறான் என்பதையும், எப்படிப் பேசுகிறான் என்பதையும் பார்க்காமலே, அப்படிப்பேசுவது சரியல்லவென்று சொன்னதற்கு, "செத்தவன் எப்படிப் பேசுவான், அது நம்ப முடியாத காரியம்; ஆனதால் அதைப் பார்க்கவேண்டிய அவசியம் இல்லை" என்று கூறிவிட்டார்கள். இது விஷயமாக, ஆவி உலகத்திலுள்ள அவர்களுடைய மகன் சம்பந்தனிடம் சொன்னபொழுது, அவன் தன் தந்தையாருக்குப் பணத்தைத் தவிர வேறு எந்த ஆராய்ச்சியிலும் சிந்தை செல்லாது; அவர்களை நம்பும்படியாகச் செய்வதற்குப் பணம் சம்பந்தமான ஒரு நிகழ்ச்சியைச் சொல்லியே வசப்படுத்தவேண்டும் என்றும், அதற்குரிய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருப்பதாகவும் அறிவித்தான்.

சில மாதங்களுக்குப் பிறகு சம்பந்தன், தன் தந்தையாரைத் தன் அக்காளிடம் சொல்லி அழைத்து வைத்துக்கொண்டு, அவர்களுக்கு அதிர்ஷ்டம் வந்திருப்பதாகவும், ஒரு பெரிய வியாபாரி நல்ல வாடகை வரக்கூடிய ஒரு வீட்டை, அவர்கள் பெயருக்கு மிகவும் குறைந்த விலை போட்டு எழுதிவைத்திருப்பதாகவும், அதன் விவரம் மறு வாரம் வெளியாகும் என்றும் அறிவித்தான். அதுசமயம் அதை அவர்கள் நம்புவதற்கில்லை. மறுவாரம் அதன் விவரம் அவர்களுக்கு வெளியானதும், தன் மகன் சம்பந்தன் முன்னரேயே அறிவித்தது அவர்களுக்குப் பெரிய ஆச்சரியத்தைக் கொடுத்தது. அதிலிருந்து அவனிடம் அடிக்கடி பேசுவதும் அநேக விஷயங்களைக்கேட்டு அவனைச் சோதிப்பதுமாக இருந்தார்கள். அவன் சொல்லுவதெல்லாம் அனுபவத்திற்கு ஒத்துவரவே, அவர்கள் சம்பந்தன் பேசுவதிலும், ஆவி உலகத்திலுள்ள பிறர் பேசுவதிலும் பெரிய உண்மைகள் இருக்கின்றனவென்று ஒத்துக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

கோவிலுக்குப் போகிறவர்களையும், திருநீறு அணிபவர்களையும், உருத்திராக்கம் போடுகிறவர்களையும், கேலியும், நையாண்டியும் செய்துவந்த அவர்கள், ஆவி உலகத்திலிருந்து பேசிய தன்னுடைய மகன் சம்பந்தன் சொல்லின்படி, சிவபூசையும் மேற்கொண்டு, விபூதி உருத்திராக்க தாரியராகக் காட்சியளித்து, ஆவி உலகத்தைப் பற்றி யாரிடமும் பிரசாரம் செய்யக்கூடியவர்களாக மாறிவிட்டார்களென்றால், சற்புத்திரர் இருந்தாலும், இறந்தாலும் நம்மை நரகத்திலிருந்து விடுவிக்கப் பாடுபடுகிறார்களென்பதற்கு வேறு சான்றுகளும் வேண்டுமோ? சிந்தியுங்கள்.

அதேவிதமாக இலங்கையில் ரப்பர் வியாபாரம் செய்து பெரும்பொருள் ஈட்டிய திரு. C. சண்முகம் பிள்ளையவர்களும், அவர்களுடைய ஒரே புதல்வன் முருகன் என்பவன், ஆவி உலகத்திலிருந்து அவர்களுடன் பேசியதின் பயனாகவே, அவர்களும் சிவபூசா துரந்தரராக விளங்குகிறார்கள். மேலே சொன்ன இரு பிரமுகர்களும் பாளையங்கோட்டையில் வசித்துவருகிறார்கள்.

## 22. இறந்த மனைவி களவுநடப்பதை அறிந்து அறிவித்தல்.

கொழும்பிலே சுந்தரம்ஸ் லிமிடெட் கம்பேனிக்கு, லொசஞ்சஸ் (Lozenges) செய்கின்ற தொழிற்சாலையும், அச்சுயந்திரசாலையும் உண்டு. கம்பேனியில் வேலைபார்த்து வந்த ஒரு "ஸ்டோர் கீப்பர்" மிகவும் நம்பிக்கையுள்ளவன் போல் நடித்து, தொழிற்சாலையிலிருந்து வருகிற லொசஞ்சஸ் டின்களை, கள்ளத்தனமாக வேறொரு கடையில் டெலிவரி கொடுக்கும்படி, கூலிக்காரனைத் தூண்டி, கடைக்கு வந்ததாகக்கணக்கு எழுதி, சில்லறை விற்பனைக்குக் கொடுத்ததாகப் பற்று எழுதிவைத்துக் களவுசெய்துவந்தான். அவன்பேரில் கடையிலுள்ள எல்லோருக்குமே உண்மையான வேலைக்காரன் என்ற எண்ணம் உண்டு. நாம் அப்

பொழுது அங்கு "மானேஜிங் டைரக்டராக" இருந்தோம். எமக்கும் அவன்பேரிலும், அவனுடன் சேர்ந்திருந்த கூலிக்காரன் மீதும், யாதொரு சந்தேகமும் கிடையாது.

ஒரு நாள் இறந்துபோன பூர்வாஸ்ரம மனைவியோடு பேசிக்கொண்டிருக்கையில், அவளாகக் கடையில் களவு போய்க்கொண்டிருக்கிறது; ஸ்டோர் கீப்பர் நடராஜனும், கூலிக்காரன் வேலுவும் சேர்ந்து செய்கிறார்கள்; அவர்கள் இருவரும் கடை வேலை முடிந்து, வீட்டிற்குப் போகுமுன் இன்னகடைக்குச் செல்லுகிறார்கள்; அங்கிருந்து இன்னின்ன பேசிக்கொள்ளுகிறார்களென்று சொல்ல, அதைக் கொண்டு விசாரணை செய்ததில், அந்தச் சாமான்களை வாங்கிய கடைக்காரர் உள்ளதையெல்லாம் சொல்லிவிட்டார். அதன்பேரில் அவர்கள் இருவரையும் வேலையைவிட்டு நீக்கிப் போலீசாரிடம் ஒப்புவித்தோம்.

இறந்துபோன மனைவியாருக்கு, இந்த வேலையாட்களை எல்லாம் நன்றாகத் தெரியுமாதலாலும், நாம் தினமும் அவளைக் குறித்துப் பிரார்த்தனை செய்துவந்ததாலும், அவள் அடிக்கடி வந்து கடையில் நடப்பவைகளையெல்லாம் பார்வையிட்டிருக்கிற காரணத்தாலும், அவளுக்குத் தெரிந்த விஷயங்களை, நாங்கள் கேளாமலே சொன்னாளே தவிர, எல்லோரும் எல்லாக் களவுகளுக்கும் துப்பு அறிந்து சொல்ல முடியுமென்று எண்ணிவிடவேண்டாம். பார்த்திருந்தால் சொல்லமுடியும். பார்த்திராவிட்டால் சொல்ல முடியாது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பார்த்திருந்தால் அவர்களாகவே சொல்லிவிடுவார்கள்.

## 23. இறந்த பாட்டன் தன் மகனிடம் நடுநிசியில் தன் பேத்தி, கணவனால் அடிபடுவதை அறிவித்தல்.

எல்லா நிகழ்ச்சிகளும், எம்முடைய பூர்வாஸ்ரம நிலையில் இருக்கும்பொழுது நிகழ்ந்தன. ஆகையால், ஒவ்வொருமுறையும் அதைச் சுட்டிக் காட்ட வேண்டியதில்லை என்று கருதுகிறோம். எம்முடைய தந்தையாருடைய, சிவ பூசைக்குத் தொண்டு செய்துவந்த பேத்திப்பெண் ஒருத்திக்குத் திருமணம் ஆயிற்று. அதன் பின் எமது தந்தையார் மண்ணுலகை விட்டு விண்ணுலகம் சென்றுவிட்டார்கள். அவர்கள் இறந்த ஆறுவது மாதம், அவர்களோடு பேசவும் தொடர்பு வைத்துக்கொள்ளவும் திருவருள் கூட்டிற்று. பற்பல மாதங்களாகப் பேசிக்கொண்டிருந்தோம்.

அப்படிப்பேசிக்கொண்டிருக்கையில், அவர்களாகவே ஒரு நாள் "நேற்று இரவு 12-மணிக்குமேல் பேத்திப் பெண்ணாகிய பாப்பாள், என்னுடைய படத்தைக் கையில் வைத்துக்கொண்டு, உங்களுக்கு எவ்வளவோ பூசைத் தொண்டுகள் செய்தேனே, என்னை என் மாப்பிள்ளை இந்த விதமாக அடிக்கலாமா? இதற்கு நான் என்ன செய்வது? உங்களைத்தவிர இதை நான் யாரிடம் முறையிடுவது? என்றெல்லாம் சொல்லி அழுதாள் ஆனதால், அவளுடைய மாப்பிள்ளையிடம் இந்த விவரத்தை, நான் சொன்னதாகச் சொல்லி, அவளை இனி அடிப்பதில்லையென்ற உறுதிமொழி எடுத்துவிடு" என்று கட்டளையிட்டார்கள். அந்தப்படியே, அவளுடைய மாப்பிள்ளையிடம் பேசி உறுதிமொழி எடுத்தோம்.

ஆனதால் எந்தநேரமானாலும், இறந்தவர்களில் புண்ணியப்பகுதியில் இருப்பவர்களை நினைத்தால் அவர்கள் அங்கு உடனே வந்து, அங்கு நடக்கின்ற காரியங்களைக் கவனிக்கிறார்கள் என்பது தெரிகின்றது. இவர்களுக்கே

இந்த சக்தியும், மனப்பான்மையும் இருக்குமானால், கருணையே உருவான ஆண்டவனுக்கு எவ்வளவு சக்தியும், காருண்யமும் இருக்குமென்று சிந்தியாமல் இருக்க முடியாது அல்லவா?

## 24. இறந்த தந்தையார் பாகப்பிரிவினை விபரம் அறிவித்தல்.

நாங்கள் பஞ்சபாண்டவர்களைப் போன்று ஐவர் என்பதும், எங்களைப்போல் சகோதர ஒற்றுமையுள்ள குடும்பம் எங்கும் பார்க்கமுடியாது என்பதும், நெருங்கிப்பழகிய யாவரும் அறிந்ததே. நாங்கள் பாகப்பிரிவினை செய்யவேண்டியதாயிருந்தது. தந்தையாரோ காலமாகிவிட்டார்கள். ஆனதால், நாங்கள் பாகப்பிரிவினை நகல் ஒன்று எழுதி, இறந்து ஆவி உலகத்திலிருந்து எங்களுடன் பேசிக்கொண்டிருந்த, தந்தையாரிடம் வாசித்துக் காண்பித்து, அவர்கள் சொன்ன திருத்தங்களையெல்லாம் கடைப்பிடித்து, அசல் எழுதி, அவர்களுடைய அனுமதியின் பேரிலேயே பதிவு செய்தோமென்றால், அதில் எங்களுக்குள்ள திட நம்பிக்கைக்கு வேறு சான்றுகளும் வேண்டுமோ?

## 25. இறந்தவர் தனக்கு சுவை அறியும் தன்மை இருப்பதை அறிவித்தல்.

நாங்கள் எதைச் சாப்பிடுகிறதாக இருந்தாலும், குடிக்கிறதாக இருந்தாலும், சிவபரம்பொருளுக்கு அர்ப்பணித்து, எங்களுடைய இறந்துபோன சுற்றத்தாருக்கும் அர்ப்பணித்து, அருந்துவதே, ஆவி உலகத் தொடர்பிற்குப் பின்னுள்ள பழக்கம். ஒருநாள் எமக்குத் தொண்டை கட்டியிருந்த காரணத்தினாலே, சுக்குவெந்நீர் கொண்டு வரும்படி சொல்லியிருந்தோம். அதை வேலைக்காரன் கொண்டுவந்து கொடுத்தபொழுது, ஆவி உலகத்திலுள்ள தந்தையாருடன் பேசிக்கொண்டிருந்தோம். ஆகவே, சிவ

பரம்பொருளுக்கு அர்ப்பணம் என்று சொல்லிவிட்டு, தந்தையாரிடம் "அப்பா! தாங்கள் சுக்கு வெந்நீர் சாப்பிடுங்கள்" என்று சொன்னேன். சரி என்று சொன்னவர்கள் "அதில் சீனியே போட வில்லையே" என்று சொன்னார்கள். வேலைக்காரனிடம் கேட்டபொழுது, அம்மையார் போட்டிருப்பார்களென்று நினைத்தேன் என்றான். அம்மையாரைக் கேட்டபொழுது, சமையல்காரன் போட்டிருப்பானென்று நினைத்தேன் என்றார். ஆகவே, சுக்குவெந்நீரில் சீனிபோட வில்லையென்பது உண்மையாயிற்று.

சுக்குவெந்நீர் குறையாமலிருக்க, நீங்கள் எப்படிச் சாப்பிட முடிகின்றது என்று, அவர்களிடம் கேட்ட பொழுது, அதற்கு அவர்கள், சுக்குவெந்நீரிலுள்ள சத்தில் கொஞ்சம் பருக முடிகிறதென்றும், அதனால்தான் சீனி போட்டதும் போடாததும் தெரிந்து சொல்ல முடிகின்றது என்றும் சொன்னார்கள். நாம் இறந்தவர்களையும் சாப்பிடச்சொல்லிச் சாப்பிடுவதால், அவர்களுடைய ஆசீர்வாதத்தையும், அன்பையும் பெருக்கிக்கொள்ள ஏதுவா

## 26. இறந்தவர்களுக்குப் பதார்த்தங்களிலுள்ள விருப்பம் மாறாது இருத்தல்.

இவ்வுலகத்தில் வாழ்ந்திருந்தபொழுது, யார் யாருக்கு எந்த எந்த பதார்த்தத்தில் விருப்பம் இருந்ததோ, அதே பதார்த்தத்தில், அவர்கள் இறந்தபிறகும் விருப்பம் கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்பது, பலருடனும் கேட்டுத் தெரிந்த உண்மை. பிறவியற்ற உயர்ந்த நிலையிலுள்ளவர்கள், ஒரு பதார்த்தத்திலும் விருப்பமில்லையென்றும் சொல்லுகிறார்கள். பெரும்பாலும் பெண்கள், நல்ல சேலைகளின் பேரிலும், தின்பண்டங்கள் பேரிலும், பெரிதும் விருப்பமுடையவர்களாக இருக்கிறார்கள்.

நாம் இங்கே நன்றாக உண்டு உடுத்து இருப்பதை நேரே பார்க்கும் காரணத்தால் அவர்கள், தங்களைப்பற்றி நினைத்து, தங்களுக்கும் சேலை படைப்பு முதலியன அளிக்கின்றவர்பால் அன்புடையவர்களாகவும், மேன்மேலும் நன்றாக இருக்கட்டும் என்ற எண்ணமுடையவர்களாகவும் இருக்கின்றார்கள். அப்படிச் செய்யாதவர்களை, நன்றி கெட்டவர்களாகக் கருதி ஏங்கி வருந்துகின்ற காரணத்தால், வீட்டில் பலவிதச் சங்கடங்கள் விளைய அவர்கள் காரணமாகின்றார்கள். உலகத்தில் எல்லா தேசங்களிலும், எல்லா மதத்தினரும், இறந்தவர்களுக்கு அவரவர் விரும்பிப் பாவித்த பதார்த்தங்களையே படைத்து, வழிபாடு செய்தல் இயல்பாக இருக்கின்றது. அதுபோலவே இறைவனுக்கும், அதிதெய்வங்களாகிய அதிகார மூர்த்திகளுக்கும், படைக்கின்ற பழக்கம் தொன்று தொட்டு, உலகில் எல்லாப்பாகங்களிலும் இருந்து வந்த

## 27. பதார்த்தங்கள் ஆசாரமாகத் தயாரிக்க வேண்டியதின் அவசியம்.

ஒருநாள் எம் தமையனார் ஒருவர், ஆவி உலகத்திலுள்ள தந்தையாருடன் பேசிக்கொண்டிருந்தபொழுது, அவர்களுக்கு உளுந்தவடையில் விருப்பம் என்ற காரணத்தால் "அப்பா! இன்று இரவு உங்களுக்கு உளுந்தவடை சுட்டுவைக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்று சொல்ல, தந்தையாரும் சரி என்று சொல்லியிருந்தார்கள். தமையனார், வீட்டில் வடை சுட்டு வைக்கும்படி சொல்லிவிட்டு, ஆபீசுக்குப் போய்விட்டார்கள். இரவில் வடைகளைப் படைத்துத் தந்தையாரைச் சாப்பிடச் சொன்னபொழுது, அவர்கள் அவை ஆசாரமாகவும், நல்ல மனத்துடனும் தயாரிக்கப்படவில்லை; ஆகவே, அதைச் சாப்பிடமுடியாது என்று மறுத்துவிட்டார்கள். தமையனாருக்கு ஒன்றும் விளங்கவில்லை.

மனைவியைக் கூப்பிட்டு விசாரித்ததில்; வீட்டு வேலைக்காரியைக் கொண்டு தயார் செய்ததாக ஒப்புக்கொண்டது மல்லாமல், தன் மாமனார் சாப்பிட மறுத்ததையும், தான் ஆசாரமாகத் தயாரிக்காத விஷயத்தையும், வேலைக்காரியைக் கொண்டு தயாரித்த விஷயத்தையும், அவர்கள் அறியமுடிந்ததையும் நினைந்து வருந்தி, அவர்களிடம் மன்னிப்புக் கேட்டு, மறுநாள், தானே எல்லாம் தூய்மையாகத் தயார் செய்து, அன்று இரவு மாமனாருக்கும் படைத்து, அவர்கள் சாப்பிட்டதாகச் சொன்னதின் பின்னரே, மகிழ்ச்சியும் மன நிம்மதியும் அடைந்தனர். இறந்தவர்களுக்குப் படைக்கின்ற பதார்த்தங்களே தூய்மையாகவும், ஆசாரமாகவும் தயார் செய்யப்படாவிடில், அவர்கள் ஏற்றுக்கொள்ள மறுப்பார்களானால், ஆண்டவனுக்குப் படைக்கின்ற பதார்த்தங்கள், எவ்வளவு தூய்மையாகவும், ஆசார நியமங்களுடனும், தயாரிக்கப் பெறவேண்டுமென்று சிந்திக்க வேண்டாமா?

## 28. இறந்தவர்களின் சுவை அறியும் தன்மையை இலங்கையில் சோதித்தல்.

இலங்கையிலே இவற்றையெல்லாம் பற்றிப் பேசிய பொழுது, எங்களுடைய கம்பேனியிலேயே தயார் செய்கின்ற "நெர்விட்டோ" என்னும் ஷர்பத்தை, மூன்று கண்ணாடித்தம்ளர்களில் வெவ்வேறு அளவுகளில்விட்டு, ஒரே அளவில் தண்ணீரைவிட்டுப் பெருக்கி, அவற்றிற்கு ஒவ்வொரு எண் கொடுத்து, எதுவெதில் எத்தனை எத்தனை கரண்டி ஷர்பத் ஊற்றியிருக்கிறதென்று குறித்து வைத்துக் கொண்டு, ஆவி உலகத்திலுள்ள ஒரு நண்பரிடம், அவற்றுள் எந்தத்தம்ளரில் இனிப்புக்கூடுதலாயிருக்கிறது? அதற்கு

அடுத்தபடி எதில் இருக்கிறது? ஆகக்குறைவாக எதில் இருக்கிறது? என்று ருசிபார்த்துச் சொல்லவேண்டுமென்று கேட்டபொழுது, சரியாகச் சொல்லி விட்டார். ஆனதால் அவர்கள் ருசியை நன்ருக அறிய முடிகிறதென்று தெளிவாயிற்று.

## 29. இறந்தவர், 'மீடியமாக' இருப்பவருக்குத் தெரியாத பாஷையில் அறிவித்தல்.

தூத்துக்குடியில் 'வருமான வரி' ஆபீசராக இருந்த ஓர் இஸ்லாமியர், இறந்தவர்களோடு பேசுவதின் உண்மையை அறியவேண்டுமென்று, எமது தம்பியார் வீட்டிற்கு வந்திருந்தார். அவர், தாமும் பேசிப்பார்க்கவேண்டும்; ஆனுல் தமிழைத் தாய் பாஷையாகக் கொண்ட மீடியம் மூலம், அந்த மீடியத்திற்குக் கொஞ்சமும் பழக்கமில்லாத பாஷையாகவும், தமது தாய் பாஷையாகவும் இருந்த, உருது பாஷையில் கேள்வி கேட்டுப் பதிலும் உருது பாஷையில் வந்தால் தான், அது மீடியத்திருல் ஏற்பட்ட பதில் அல்ல; இறந்தவருடைய வாக்கே என்று உறுதியாகக் கூறமுடியுமென்று சொன்ஞர். தம்பியார், அவ்வாறு யாரும் இது வரை சோதித்துப் பார்க்கவில்லே; ஆபீசர் சொல்லுவது சரியான சோதனையே; சோதித்துப் பார்ப்போமே என்று பார்த்தார். 'உருது' ஒரு வார்த்தையும் தெரியாத பிராமணச் சிறுவன் மீடியமாகயிருக்க, அவன் மூலம் உருது பாஷையில் பதில் வரவே, ஆபீசரும் மற்றவர்களும் திகைத்துப்போஞர்கள்.

மேற்கொண்டு பேச வேண்டுமென்று ஆபீசர் விரும்பவே, ஆவி உலகத்திலிருந்த அவருடைய கொழுந்தியாள் "இப்பொழுது இங்கு மேற்கொண்டு பேசவேண்டாம்; இங்கு பேசுகின்ற முறையிலேயே வீட்டில் வைத்துப் பேசுங்கள்; வீட்டில் இருக்கிற மகள் மீடியமாக இருக்கிருன்" என்று அறிவித்துவிட்டாள். அதன்படி அவர் வீட்

டில் வைத்துப் பேசவும், அதன் உண்மையைப் பிறருக்கு எடுத்துச் சொல்லவும் ஆரம்பித்துவிட்டார். ஆனதால் நல்ல சக்திவாய்ந்த மீடியமாகயிருந்தால், மீடியத்திற்குத் தெரியாத பாஷைகளிலும் பேச்சு நிகழ்த்தலாமென்பதும், அதில் மீடியத்தினுடைய அறிவின் விளக்கமோ, மீடியம் கள்ளத்தனமாக, வேண்டுமென்று தன்னுடைய கருத்தை, ஆவி உலகக் கருத்தாக வெளிப்படுத்துகின்ற போலித்தனமோ, ஓர் அணுவளவும் கலக்கமுடியாதென்பதும் பெறப்படுகின்றதல்லவா?

## 30. மறதியாக பணம் வைக்கப்பட்ட இடத்தை இறந்தவர் அறிவித்தல்.

ஆவி உலகத்திலிருந்து அறிவித்தபடியே, அந்த வருமானவரி அதிகாரி, தன்னுடைய வீட்டில், உருது பாஷையில் தன்னுடைய சொந்த மகளை மீடியமாகவைத்துப் பேசியதில், அவருடைய மனைவியின் தங்கை, ஆவிவுலகத்திலிருந்து பல அரிய விஷயங்களை அறிவித்ததாகத் தெரிவித்தார். அவற்றுள் ஒன்றை மட்டும் இங்கு குறிப்பிடுகிறோம். ஒருநாள், அவருடைய சட்டைப்பையில் போட்டு வைத்திருந்த ஒரு ரூபாயைக் காணாத காரணத்தால், அவர் தம்முடைய வேலைக்காரன் திருடியிருக்கலாம் என்று கருதி, அவனைக் கடுமையாகக் கோபித்து அடித்துவிட்டார்.

மறுமுறை ஆவி உலகத்திலிருந்த தம்முடைய கொழுந்தியாளோடு பேசிய பொழுது, காணாமற்போன ரூபாயைக் குறித்து அவர் ஒன்றும் பேசாதிருக்க, அந்த அம்மையார், அதைக் குறித்துப் பேசியதாகவும், அந்த ரூபாய் மேல் பையில் இருப்பதாகவும், அவரே ஞாபகக் குறைவாக அதில் போட்டிருக்க கீழ்ப்பையில் போட்டதாக எண்ணிக் கொண்டதாகவும், அந்த வேலைக்காரனைப் பேசியதும், அடித்ததும், பாவமான காரியமென்றும், அந்தப் பாவத்தைப் போக்குவதற்கு, அவனிடம் உண்மை

மையைச் சொல்லி, அவனுக்கு ஒரு ரூபாய் வெகுமதி கொடுக்க வேண்டுமென்று அறிவித்ததாகவும், அவர் அந்தப்படியே நடந்து கொண்டதாகவும், அதிலிருந்து ஆவி உலகத்தில் புண்ணியப்பகுதியிலுள்ள சுற்றத்தார், தாங்கள் இருந்த வீட்டில் ஏதாவது விபரீதமான காரியங்கள் நடந்தால், அதை எவ்வளவு கருத்தோடு கவனித்து வருகிறார்கள் என்பதை அவர் உணர்ந்துகொள்ள முடிந்ததாகவும் அறிந்தார்.

## 31. இறந்த இஸ்லாமியர் தானாகவே வலிய வந்து தன் மகனது வியாகூலத்தை நீக்கல்.

ஈரோடு மார்க்கத்தில் கருருக்குச் சமீபமாயுள்ள புகழூரிலே, ஒரு நாள் இரவு 12 மணிக்கு, இறந்துபோன சுற்றத்தாரோடு பேசிக்கொண்டிருக்கையில், ஆவி உலகத்திலிருந்து ஓர் இஸ்லாமியர் வந்து, தாம் அவ்வூரிலுள்ள (Post Master) தபால் அதிகாரியினுடைய தகப்பனார் என்றும், தம்முடைய மகன் தூக்கம் வராமல் விழித்துக்கொண்டு, படுக்கையில் உட்கார்ந்துகொண்டு இருப்பதாகவும், அவன் அவனுடைய மனைவியின் உடல்நிலை விஷயமாகவும். அவளுடைய பிள்ளைப்பேறு விஷயமாகவும் நினைந்து கவலைப்பட்டுக் கொண்டு, தகப்பனாராகிய தம்மை நினைத்துக்கொண்டே இருப்பதாகவும், அவனைத் தயவு செய்து கூட்டிக்கொண்டு வந்து, தம்மோடு பேசவைக்க வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டார்.

இரவில் 12 மணிக்கு அவ்விதம் அவரைக் கூப்பிடுவது சரியல்லவே என்று கேட்டபொழுது, அவன் தூங்கிக் கொண்டிருப்பானானால் எழுப்பக் கூடாதுதான்; ஆனால், அவன் விழித்துக்கொண்டிருக்கும் பொழுது, தெருவாயில் கதவை இலேசாகத் தட்டினாலே அவன் வந்து திறந்துவிடுவான்; அதைப் பற்றி யாதும் யோசிக்க வேண்டாம்; அந்த உதவியைச் செய்து தரவேண்டுமென்று வேண்டிக்கொண்

டார். அதன்படி ஒருவேலைக்காரனை அனுப்பி, அவருடைய வீட்டுக்கதவைத் தட்டிப்பார்; விழித்திருந்து உடனே கதவண்டை வந்து யாரென்று கேட்டால் விபரம் சொல்லிக் கூட்டிவா; அல்லாவிடில் வந்துவிடு என்று அறிவித்திருந்தோம். அவனும் (போஸ்ட் மாஸ்டர்) தபால் அதிகாரி வீட்டுக்குச் சென்று, இலேசாகக் கதவைத்தட்ட, அவர் எழுந்து வந்து யாரென்று கேட்டு, விவரம் அறிந்து, தகப்பனாரிடம் பேச வந்துவிட்டார். நாங்கள் இறந்தவர்களோடு பேசும் பழக்கமுள்ளவர்கள் என்பது மாத்திரம், அவருக்கு முன்னமேயே தெரியும். ஆவி உலகத்திலுள்ள தந்தையார் தமது மகனிடம் கவலைப்படவேண்டாம்; மனைவிக்குச் சுகமான பிரசவம் நடைபெறும்; பிறக்கப்போவது ஆண்குழந்தை; என்று சொல்லி, குடும்ப சம்பந்தமாக எல்லா நலங்களும் உண்டாவதற்கு மேலுலகத்தில், தாமும் ஆண்டவனிடம் பிரார்த்தித்து வருவதாகவும், வேறு சில இடையூறுகளை வரவொட்டாமல் தாம் தடுத்துவிட்டதாகவும் சொல்லி, மகனை உற்சாகப்படுத்தி அனுப்பிவிட்டார்.

பின்னர், அதன்படியே மனைவிக்குச் சுகமான பிரசவம் நடந்து, ஆண் மகவு பெற்றெடுத்தாள் என்பதை அறிவோம். இதிலிருந்து ஆவி உலகத்திலுள்ளவர்கள் நாம் நினைத்தமாத்திரத்தில் அந்த இடத்திற்கு வந்து நம்முடைய நிலைகளை நன்றாக அறியமுடிகிறதென்பதை உணருகின்றோம். இதனை உபமானமாகக்கொண்டுவிட்டால், சர்வ வல்லமையுள்ள ஆண்டவன், நாம் நினைப்பதையும், பேசுவதையும், சொல்வதையும், அறிந்துகொண்டும், கேட்டுக்கொண்டும், பார்த்துக் கொண்டும் இருக்கமுடியும் என்பதை யாவரும் உய்த்துணர்ந்துகொள்ள முடியும்அல்லவா?

## 32. இறந்தவர் தன்தம்பியிடம் தனது மகனுடைய அந்தரங்கச் செயல்களை அறிவித்து மணம் முடிக்கச்செய்தல்.

ஒருநாள், மதுரைக்கு வந்திருந்த நாட்டுக்கோட்டைச் செட்டியார் ஒருவர், அம்மையநாயக்கனூருக்குத் தம்முடைய சொந்த மோட்டார் காரில் வந்து, காலஞ்சென்ற தம் தந்தையாருடன் பேசிப்பார்க்கவேண்டுமென்று விரும்பினார். அதன்படியே அவர் தம் தந்தையாருடன் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, தந்தையார் தம்முடன் ஆவி உலகத்தில் இருந்த மூத்த மகன் (மதுரையிலிருந்து வந்திருந்த செட்டியாருடைய காலஞ்சென்ற தமையன்) தம்பியுடன் அவசரமாகப் பேசவேண்டுமென்று, தம்முடன் வந்திருப்பதாக அறிவித்தார்.

அந்த அண்ணனைப் பேசச் சொன்னபொழுது, அவர் தம்முடைய மகன், காட்டுப்புத்தூரில் படித்துக்கொண்டிருப்பது போதுமென்றும், அவனைப்பற்றி அவ்வூரில் சில புகார்கள் வருகின்றனவென்றும், அவனும் இன்னொரு வயதுவந்த பெண்ணும், காதல் கடிதங்கள் வரைந்து கொண்டிருக்கிறார்களென்றும், காரியம் முற்றிவிடுவதன் முன், அவனை ஊருக்குக் கூட்டிக்கொண்டுபோய், வேறு பெண் பார்த்துக் கல்யாணம் செய்துவைத்துவிட வேண்டுமென்றும், இனி யாதொரு தாமதமும் செய்யக்கூடாதென்றும், அம்மையநாயக்கனூருக்குக் கொண்டுவந்திருக்கிற காரிலேயே, நேராகக் காட்டுப்புத்தூருக்குப் போய், அங்குள்ள தம் மகனைக் கூட்டிக்கொண்டு வந்துவிடவேண்டுமென்றும் தெரிவித்தார்.

பேசவந்த செட்டியாருக்கு ஒன்றும் புலப்படவில்லை. தாம் மதுரையில் அநேகரைக் காக்கவைத்துவிட்டு, இரவு திரும்பி வந்துவிடுவதாக அம்மையநாயக்கனூருக்கு வந்த

தாகவும், ஆனதால் நேரே மதுரைக்குத் திரும்பிப் போய், அங்குள்ள காரியங்களைப் பார்த்துவிட்டு, மறுநாள் காட்டுப் புத்தூர் போவதாகப் பதில் அளித்தார்.

ஆவி உலகத்திலிருந்து பேசிய தமையனார், மதுரைக் காரியத்தைப் பின்னால் பார்த்துக்கொள்ளலாம் என்றும், காட்டுப்புத்தூர்க் காரியம் மிகவும் அவசரமானது என்றும், மதுரைக்குத் தந்தியைக் கொடுத்துவிட்டு, நேரே காட்டுப் புத்தூருக்குச் சென்று, தன்னுடைய மகன் விஷயத்தைக் கொஞ்சமும் தாமதியாமல் கவனித்து, ஆவன செய்துவிட்டுத்தான் மறுவேலை பார்க்கவேண்டுமென்றும், திரும்பத் திரும்பச் சொன்னார். அதைப்பற்றித் தன் தந்தையாரிடம் செட்டியார் கேட்டபொழுது, அவரும் அது மிகவும் அவசரமான காரியந்தான் என்று சொல்லவே, மதுரைக்குத் திரும்பிவிடவேண்டுமென்று எண்ணியிருந்த செட்டியார், அந்த எண்ணத்தை மாற்றி, தந்தியில் தான் காட்டுப்புத்தூர் சென்று வருவதாக அறிவித்துவிட்டு, அம்மையநாயக்கனூரிலிருந்தே காரில் காட்டுப்புத்தூருக்குப் போய்விட்டார்.

அங்கு சென்று காரியங்களைப் பரிசீலனை செய்து பார்க்க, தன் தமையனார் சொன்னது முற்றிலும் உண்மையென்று புலனாயிற்று. ஆனதால் தன் தமையனார் தனக்கு அறிவித்ததுபோல, படித்துக்கொண்டிருந்த பையனுடைய படிப்புக்கு அன்றோடு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு, அவனைத் தன்னுடைய ஊருக்கு அழைத்துச் சென்று, கால தாமதமன்னியில் கல்யாணமும் செய்துவைத்துவிட்டார். நாங்களும் அக்கல்யாணத்திற்குச் சென்று சிறப்பித்தோம்.

ஆகவே, ஆவி உலகத்திலிருக்கிற தந்தை தம்முடைய மகனுடைய நடத்தைகளைக் கண்காணித்து வருகிறார் என்பதும், அதற்கு இன்ன செய்யவேண்டுமென்று அறிவிக்க, ஆத்திரத்துடன் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கியிருக்கிறார் என்பதும், இதிலிருந்து புலப்படுகின்றதல்லவா?

அல்லாமலும் அம்மையும் அப்பனுமாகிய சர்வ வல்லமை யுள்ள ஆண்டவனும், நாம் செய்கின்ற காரியங்களையெல்லாம் நமக்குத் தெரியாமலே கண்காணித்து வருகிறார் என்பதை ஊகித்து உணர்ந்துகொள்ளவும், நாம் நம்முடைய நடத்தைகளைத் திருத்தி அமைத்துக்கொள்ளவும் இச் சம்பவம் உள்ளத்தைத் தூண்டுகின்ற அளவுக்கு எத்தனை புத்தகப்படிப்பும் மக்களைத் தூண்ட முடியாதன்றோ?

## 33. பூலோகத்தில் நடப்பவற்றை இறந்தவர் பார்த்துக் கொண்டிருப்பதற்கு அத்தாட்சி.

1943-ம் வருஷத்தில் குலசேகரன்பட்டினத்திலிருந்து, நாம் கொழும்பிற்குப் புறப்பட்டுப் போகின்ற வழியில், திருச்செந்தூர் கோயிலுக்குச் சென்று வழிபாடுகளெல்லாம் முடித்து, இலை-விபூதிப் பிரசாதம் பெற்றுக்கொண்டு திருநெல்வேலிச் சந்திப்புக்கு வந்து சேர்ந்தோம். அங்கு, மதுரைக்குப் புறப்படுகிற வண்டியில் இரண்டாவது வகுப்பில், நாமும் பூர்வாஸ்ரம மனைவியாரும் உட்கார்ந்திருந்தோம். அப்பொழுது, திருநாவுக்கரசு நாயனார் அருளியிருக்கும் திருக்கைலாயப் போற்றித் திருப்பதிகத்தை, பாராயணம் செய்துகொண்டிருந்தோம். ஒரு முக்காணியப் பிராமணர் நாங்கள் இருந்த வண்டியில் ஏறி, எம்மிடம் வந்து, திருச்செந்தூர் பிரசாதம் என்று இரண்டு இலை விபூதியை நீட்டினார்.

அது சமயம், ரெயில் வண்டிகளில் பிரயாணிகள் தனிமையாக இருந்தால், களவு செய்கிறவர்கள் பலவிதத் தந்திரங்கள் செய்து, பலாத்காரமும் செய்து, தங்களுடைய காரியங்களைப் பார்த்துக்கொள்ளுகிறதாக ஒரு வதந்தி உலாவிக்கொண்டிருந்தது. நாம் கொழும்பிலிருந்து இந்தியாவுக்கு வந்தால், சில நாட்களே தங்குகிற பழக்கத்திலுள்ள காரணத்தால், திருச்செந்தூரில் ரெயில் ஏறும்பொழுது சொல்லப்பெற்ற எச்சரிக்கையே மனக்கண் முன் தோன்றி

யது. ஏற்கனவே திருச்செந்தூரிலிருந்து வருகிற வழியானதி றாலும், இலை விபூதிப் பிரசாதமும் ஒரு முழுக்கட்டு கையி லேயே இருந்ததாலும், பிராமணர் திருச்செந்தூர் பிரசாதம் என்று இலை விபூதியை நீட்டியபொழுது, நாம் திருச்செந் தூர் பிரசாதம் இதோ இருக்கின்றது என்று சொல்லி, விபூதிக்கட்டு வைத்திருந்ததைச் சுட்டிக் காட்டியதும், அவர் ஒன்றும் சொல்லாமல் திரும்பிப்போய்விட்டார்.

திரும்பவும் திருக்கைலாயப் போற்றிப் பாராயணத் தைத் தொடங்கிக் கொண்டோம். அன்று மாலை அம்மைய நாயக்கனூர் (கொடைக்கானல் ரோடு S. I) போய்ச் சேர்ந்தோம். மறுநாள் இரவு, காலஞ்சென்ற எம் தந்தை யாரிடம், கொழும்பிற்குப் போகுமுன் விடைபெற்றுக் கொள்கின்ற வழக்கப்படி பேசி, வழியனுப்பிக்கொடுக்கும் படியும், ஆசீர்வதிக்கும்படியும் கேட்டோம். அவர்கள் ஆசீர்வாதம் செய்துவிட்டு, ''நேற்று நீ என்ன காரியம் செய்தாய்?'' என்று கேட்டார்கள். ''நேற்று நான் ரெயிலில் இவ்விடம் வந்து சேர்ந்ததைத்தவிர வேறு என்ன காரியமும் செய்ய வில்லையே'' என்றோம் ''திருநெல்வேலிச் சந்திப் பிலே'' என்றார்கள். பிராமணர் ஒருவர் வந்ததும், அதற்குப் பதில் சொன்னதும் ஞாபகத்திலேயே இல்லாத காரணத் தால் ''திருநெல்வேலிச் சந்திப்பில் ஒன்றும் செய்ய வில்லையே'' என்றோம்.

''ஒரு பிராமணர் உனக்கு விபூதிப் பிரசாதம் தர வில்லையா?'' நீ அதை வாங்கித் தரித்துக் கொள்ளாமல் வேண்டாமென்று அசட்டைசெய்து விட்டாயே! அது இங் கிருந்து ஆண்டவனுடைய ஏவலால் உன்னிடம் அனுப்பப் பெற்றது! நீ அதைப் பெற்றுக்கொள்ளாது அவன் ஒரு கள்ளன் என்று பயந்துவிட்டாயே'' என்றார்கள் அச் செய்தி எம்மை பிரமிக்கும்படி செய்துவிட்டது. முதலாவ தாக, ஆண்டவனின் அதிட்டிப்பில் அல்லது ஏவலில் வந்த பிரசாதத்தை, வேண்டாமென்று மறுத்துவிட்டோமே

என்ற திகைப்பு. அடுத்தபடியாக, திருநெல்வேலி ஜங்ஷனில் நடந்த ஒரு சிறிய சம்பவம், மேலுலகத்திலுள்ள ஏவலால் நடைபெற்றிருக்கிறதே என்ற வியப்பு. அதற்கெல்லாம் மேலாக, நாம் செய்கின்ற காரியங்களை, ஆவி உலகத்திலுள்ள நம் சுற்றத்தார் எவ்வளவு உரித்தோடு கண்காணித்து வருகிறார்கள் என்ற பிரமிப்பு.

இவற்றின் காரணத்தால் "இனி நாம் என்ன செய்ய வேண்டும்" என்று தந்தையாரிடம் கேட்டோம். அவர்கள் "இனி என்ன செய்யமுடியும், யாராவது உன்னிடம் வந்து எதையாவது கொடுத்தால், அது அந்த மனிதன் கொடுத்ததாகக் கருதிக்கொள்ளக்கூடாது; ஆண்டவனுடைய ஏவலினால்தான் அவன் அதைக் கொடுக்கிறான் என்று கருதி, அதனைப் பெற்றுக்கொள்ளவேண்டும்; பயப்படவேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை; அவரவர் செய்த நல்வினைக்கும், தீவினைக்கும் தக்கபடியே தான் நன்மையோ, தீமையோ அவரவருக்கு வந்துசேரும்; அது நியாயம் தவறி, முறை தவறி, ஆண்டவனுடைய சட்டதிட்டங்களை மீறி வருவதில்லை என்பதை உணரவேண்டும்; வரவேண்டாத ஆபத்துக்கள் வராவண்ணம் காப்பதற்கு நாங்களும் ஆண்டவனும் இருக்கிறோம்" என்று சொன்னார்கள்.

அதிலிருந்து மனிதர்கள் கொடுக்கின்றவற்றையெல்லாம், ஆண்டவன்தான் கொடுக்கச்செய்கிறான் என்ற உணர்ச்சியும், எதையும் அலட்சியம் செய்யக்கூடாதுஎன்ற கொள்கையும் ஏற்படலாயிற்று. அல்லாமலும் மக்கள், எந்த எந்தப்பெயரால் ஆண்டவனை வழிபட்டு, அவரவர் குறைகளை விண்ணப்பிக்கின்றார்களோ, அவ் விண்ணப்பங்களையெல்லாம் ஆண்டவனும் ஏற்று, அந்த அந்தப் பெயர் தாங்கின மக்களைக்கொண்டே, அவரவருக்குச் செய்ய வேண்டிய உபகாரங்களைச் செய்துகொண்டிருக்கிறான் என்ற, பெரியதோர் இரகசியத்தையும், உணர்த்தப் பெற்றோம். இந்த இரகசியத்தையும், உண்மைத் தத்துவத்தையும்

உதாரணம் கூறி விளக்கினலன்றி, மக்கள் விளங்கிக் கொள்ள முடியாதாகையால், எமது சொந்த அனுபவம் ஒன்றை பக்தர்களின் பொது நன்மையைக் குறித்து விளக்கமாகக் கூறுகின்றேம்.

## 34. வழிபடுகிற மூர்த்திகள் தம் பெயர் தாங்கின மனிதர்கள் மூலமாக அனுகூலம் செய்தல்.

நாம் இலங்கையில், ஸ்ரீ சிவசுப்பிரமணியசுவாமி கோவிலின் நிர்வாகத் தலைவராகப் பல வருஷங்கள் தொண்டு புரிந்து வந்திருக்கிறேம். எம்முடைய நட்சத்திரம் விசாகம். மேலே சொல்லியிருக்கும் நிகழ்ச்சிக்கு இரண்டு ஆண்டுகள் கழித்து, மறுமுறை திருச்செந்தூர் முருகப் பெருமானை தரிசிக்கச் சென்றபொழுது, அங்கு சண்முக விலாசத்தில் வைத்து, சாமியாரம்மா என்று அழைக்கப்பெறும் வள்ளியம்மை அம்மையார், ஓர் அழகான செம்பொன் வேலும், ஓர் எலுமிச்சம்பழமும், ஒரு மஞ்சள் துண்டும் கையில் கொடுத்தார்கள். நாம் அதை ஸ்ரீ முருகப் பொருனின் தேவியே கொடுத்ததாகப் பாவித்துப் பெற்று, விபூதிப்பையில் வைத்துக்கொண்டோம்.

அதே அம்மையார், மறு வருஷம் கதிர்காம யாத்திரை செய்துவந்தபொழுது, கொழும்பில் வைத்து மற்றெரு வெள்ளிவேலும் தந்தார்கள். அதையும் முந்தின வேலோடு சேர்த்து வைத்துக்கொண்டோம். இனி, வெற்றி வேலாயுதம் இரண்டு தந்தருளிய முருகப்பெருமான் என்ன செய்தார் என்பதைக் கவனிக்கவும்.

இலங்கையில் வியாபாரத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தபொழுது, பொருள் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு நாம் நடந்துவந்த வருஷங்களும் பல உண்டு. பொருளும் அருளும், இரண்டும் ஒன்றுபோல் ஈட்டப்பெறல் வேண்டுமென்று உழைத்த காலமும் உண்டு. பொருள் எத்தனை

லக்ஷம் இருந்தாலும், இன்பம் அனுபவிக்கும் ஊழ் இருந்தாலன்றி இன்பம் துய்க்க முடியாது என்ற அனுபவ உணர்வும், ஆவியுலகத் தொடர்பும் வந்ததின்பின், அருள் ஈட்டத்தில் நாட்டம் அதிகமாகவும், பொருள் ஈட்டத்தில் ஊக்கம் குறையவும் ஏற்படலாயிற்று.

அதன் விளைவாக ஆண்டவன் கொடுத்த பொருளில், குடும்பத்தாருக்குக் கொடுக்க வேண்டியதை யெல்லாம் கொடுத்து, அவர்களைத் திருப்தி செய்துவிட்டு, நாம் நிறுவியிருக்கிற திருவருள் உயர்நிலைப் பள்ளியின் மூலதனத்தையும் ஒரு லெக்ஷமாக உயர்த்திவிட்டு, மீதமுள்ள பொருளைத் தானதருமம் செய்துகொண்டு, சமயப்பணியிலும் இறை பணியிலும் நின்று, நாம் எடுத்த பிறவியின் பயனை எய்த வேண்டுமென்ற எண்ணம் திண்ணப்படலாயிற்று.

கொழும்பிற்கு அடிக்கடி சொற்பொழிவாற்ற வந்து கொண்டிருந்த "திருப்புகழமிர்தம்" ஆசிரியர் திருமுக கிருபானந்தவாரி அவர்களிடமும், தொண்டன் ஆசிரியர் மகாவித்வான் ஆறுமுக நாவலர் அவர்களிடமும், எம்முடைய உள்ளக்கிடக்கையை வெளியிட்டு, ஒரு காரியத்தைத் தொடங்குவதற்குத் தேவையான இடம்-பொருள்—ஏவல் என்ற மூன்றில், பொருளும் ஏவலும் திருவருளால் இருக்கின்றன. ஒரு சரியான இடம் மாத்திரம் இந்தியாவில் அமையவேண்டுமென்று சொல்லியிருந்தோம். தினமும் பாடி உருகிப் பிரார்த்தனையும் செய்துவந்தோம்.

அந்தப் பிரார்த்தனையைக் கேட்டு, வெற்றி வேலாயுதப் பெருமான் என்னென்னபெயர் தாங்கினவர்களைக்கொண்டு, எந்தெந்தவித உதவிகளைச் செய்தருளினர் என்பதைக் கவனிக்கவும். மதுரையிலிருந்தே பணியாற்ற வேண்டு மென்று உறுதிப்படுத்துவதற்கு உறுதுணையாகவிருந்தது, தென்னிந்தியா முழுவதும் ஊர் ஊராகச்சென்று சமய

விரிவுரை நிகழ்த்தி, சிறந்த சமயப்பணியாற்றிவரும் நமது திருவருள் தவநெறி மன்றத்தின் நிரந்தரச் செயலாளர், திருமுருக. கிருபானந்தவாரி அவர்கள்.

மதுரையில் திருஞானசம்பந்தசுவாமிகள் ஆதீனத்திற்குச் சொந்தமான பல கட்டிடங்கள் இருக்கின்றனவென்று அறிவித்தது, தென்னிந்தியாவில் ஊர்ஊராகச் சென்று சமய சந்தேகங்களுக்குத் தக்க விடையிறுத்து, இந்துமதத்திலிருந்து வேற்று மதம் புகாமல் தடுத்தும், அப்படிப் புகுந்தவர்களை இந்துவாக மாற்றியும், அரிய சமயப்பணி புரிந்து வரும், நமது திருவருள் தவநெறி மன்றத்தின் நிரந்தரத் துணைச் செயலாளர் ஆறுமுக நாவலர் அவர்கள்.

இனி, மதுரை ஆதீனத்திலேயே இளவரசாகவிருந்து பணியாற்றலாமென்று அறிவித்தது, மதுரை ஆதீனத்திலுள்ள திரு. சுப்பையா ஓதுவார் அவர்கள். எம்மை மதுரை ஆதீன இளவரசாகப் பட்டாபிடேகம் செய்துவித்துச் சமயப்பணியும், இறைபணியும் முட்டின்றி ஆற்றும்படி செய்தது, எமது குருநாதரும், மதுரை ஆதீன மகா சந்நிதானமுமாகிய, ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாததேசிக பரமாசாரிய சுவாமிகள். மதுரை ஆதீனத் தொடர்பிற்குப் பக்கபலமாக யிருந்து, காரியங்களைக் கவனித்து வந்தது, ஆதீன அட்வகேட் திரு. M. சண்முகசுப்பிரமணியம் அவர்களும், விவேகானந்தா அச்சக உரிமையாளர் திரு. K. பழனியப்பபிள்ளை அவர்களும்.

இனி, இலங்கையில் வந்து எம்மை இங்கு ஆதீனச் சார்பில் அழைக்க வந்தவர்கள், மகாவித்வான் ஆறுமுக நாவலர் அவர்களும், திரு. வீரசிவசுப்பிரமணியம் அவர்களும். நாம் இந்தியாவிற்குப் புறப்படுமுன், திருச்செந்தூரிலிருந்து கொழும்பிற்கு வந்து கந்தபுராண விரிவுரை நிகழ்த்தி, வள்ளி திருமணத்தை முடித்துவிட வேண்டு

மென்று வந்தவர்கள், குலசேகரன்பட்டினம் திரு. S. முத்துக்குமாரசாமிபிள்ளை அவர்கள். அவர்களுடன் வந்திருந்தவர்கள், திருச்செந்தூர் தேவஸ்தானம் திரு. R. நெல்லை வடிவேலுப்பிள்ளை அவர்கள்.

இதற்கெல்லாம் மேலாக, விழுப்புரத்திலிருந்து மோட்டார்கார் வாங்கி அனுப்பியது, சென்னை திரு. R. S. வேலாயுதம்பிள்ளை அவர்கள். சென்னையிலிருந்து வேலைக்கு அமர்த்திவந்த டிரைவர் (Driver) பெயர் ஆறுமுகம். எல்லாப் பெயர்களும் முருகப் பெருமானின் பெயராக அமைந்திருப்பதின் காரணத்தை நுணுகிப் பார்த்தால், இவர்கள் மூலமாக முருகப்பெருமான் நமக்கு அங்கங்கே நின்று உதவியிருக்கும் அருளிப்பாடு நன்ருக விளங்கும். தெய்வத்தின் திருவருளை பிரத்தியட்சமாக கண்டுகொள்ள அகக் கண்கொண்டு நோக்குதல்வேண்டும். அப்படி நோக்கும் பொழுது அவரவர் வழிபடுகின்ற தெய்வத்தின் பெயர் தாங்கின மக்கள் மூலமாக அவரவரின் பிரார்த்தனைகளை ஆண்டவன் பூர்த்திசெய்து உதவிபுரிந்து வருகிருன் என்பது தெளிவாகும்.

பல பெரியார்கள் இந்த அபூர்வமான உண்மையைத் தங்களுடைய அனுபவத்தோடு ஒத்துப்பார்த்து, அதிசயமும் ஆனந்தமும் பக்திப் பரவசமும் அடைந்திருக்கிருர்கள். அதில் மதுரை ஆதீனம் எமது குருமூர்த்திகளான குருமகா சந்நிதானம் அவர்கள், உட்காரும்பொழுதும், எழுந்திருக்கும்பொழுதும், சோமசுந்தரம், சோமசுந்தரம் என்றே தம் ஆன்மார்த்த மூர்த்தியை நினைத்துச் சொல்லிவந்த தமக்கு, சோமசுந்தரம் என்ற பெயர் கொண்ட ஒருவரை, இளவரசாக வரும்படியாக அமைத்த ஆலவாய் அண்ணலின் கருணையை நினைந்து நினைந்து, மட்டற்ற மகிழ்ச்சி தெரிவித்தார்கள்.

## 35. இறந்துபோன மருத்துவர் (Doctor) வியாதியைத் தீர்த்தல்.

எமது பூர்வாஸ்ரம அண்ணு அவர்களின் மனைவிக்கு ஒருவித சித்தப்பிரேமை போன்ற வியாதி ஏற்பட்டு, குழந்தையைத்தூக்கி எறிவதும், யாரையும் அடிப்பதும் பேசுவதும், கணவனுரைக்கூட அடிப்பதும் பேசுவதும், வீட்டு வேலையைப் பற்றியோ குடும்பத்தைப்பற்றியோ ஒன்றும் கவனியாதிருப்பதுமாகிய ஒருவித கோளாறு ஏற்பட்டிருந்தது. வைத்தியரிடம் கேட்டால் அதைப் பைத்தியம் என்ருர். மாந்திரீகர் அதைப் பேய்க்குணம் என்ருர். ஜோதிடர் அதைக் கிரகதோஷம் என்ருர்.

தமையனுருக்கு என்ன செய்வதென்று புலப்படவில்லை. அவருக்கு, தான் வீட்டைவிட்டு வெளியிற்போனுல், பிள்ளைகளுக்கு ஏதும் ஏற்பட்டு விடுமோ என்ற அச்சமும், மனைவியைக் காவல்புரிய வேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்பட்டு அல்லல்பட்டுக்கொண்டிருக்கும்பொழுது, ஆவி உலகத்திலுள்ளவர்களிடம் இதைப்பற்றிச் சொல்லி, அவர்கள் இதற்கு என்ன ஆறுதல் சொல்லுகிருர்கள் என்று பார்ப்போம் என்னும் சிந்தனை உண்டாகவும், அவர்களுடைய மூத்த மகளே அதற்கு நல்ல மீடியமாக அமையவும் அவ்வாறு பேசத் தொடங்கினுர்கள்.

ஆவி உலகத்திலுள்ள உறவினர் அவ்வியாதியைப் பற்றிச் சிந்தித்து, அதற்கு என்ன செய்யவேண்டுமென்பதை ஆவி உலகத்திலுள்ள வைத்தியர்களிடம் (Doctors) கலந்திருப்பதாகவும், சிகிச்சை செய்வதற்கு (Dutch Doctor Mr. Honey Comb) டச்சு டாக்டர் Mr. ஹனி கோம்பு என்பவரைக் கூட்டிவந்திருப்பதாகவும், அவரிடம் நேரில் பேசிக்கொள்ளலாமென்றும் அறிவித்தார்கள்.

அதன்படி Dr. "ஹனிகோம்பு" விடம் கேட்ட பொழுது, அது பைத்தியமுமல்ல, பேய்க்குணமுமல்ல, அவற்றிற்குப் பரிகாரம் பண்ணுவதால் பயனும் இல்லை என்று சொல்லி, அதற்குச் செய்யவேண்டிய சிகிச்சை இன்னவென்று சொல்ல, தினமும் ஆவி உலகத்திலிருந்த அவரிடம் கேட்டு, அவர் சொல்லியபடியே செய்து, வேறு யாருடைய உதவியுமின்றி, அந்த வியாதி வெகு விரைவில் குணமாக்கப்பட்டது. நல்ல பதவியில் உள்ள உற்ருர் உறவினர். ஆவி உலகத்திலிருந்து நம்முடைய நன்மைக்காக, எவ்வளவு முயற்சியும் சிரத்தையும் எடுத்துக்கொள்ளுகிருர்கள் என்பதற்கு வேறு சான்றுகளும் வேண்டுமோ?

36. இங்கு பாவனையால் கொண்டாடப்பெறும் பண்டிகையான சரஸ்வதிபூஜை மேலுலகத்தில் உண்மையாகவே கொண்டாடப்பெறுகின்ற அதிசயம்.

நாம் கொழும்பிலிருந்து அம்மையநாயக்கனூர் வந்திருந்தபொழுது, சரஸ்வதி பூஜை நடத்திஞேம். அன்று பிற்பகல், ஆவி உலகத்தாரோடு உரையாடிக்கொண்டிருக்கும் பொழுது, அங்கிருந்த எமது குழந்தை "அப்பா! பிரம்மலோகத்தில் இருக்கிற சரஸ்வதி அம்மனுக்கு இன்று சிறப்பாகப் பூசை நடந்தது; புண்ணியப் பகுதியிலிருந்து மேல் உலகங்களுக்குச் செல்லுகின்ற அதிகாரம் பெற்றவர்களும், தேவர்களும், மகாவிஷ்ணுவும், சிவபெருமானும் வந்திருந்தார்கள்" என்று அறிவித்தாள்.

அப்பொழுது எமக்கு ஒன்றும் புரிந்துகொள்ள முடியவில்லை. மேலுலகங்களும் தேவர்களும், அவர்களுக்கு அதிபதிகளும் உண்டு என்பதை, புத்தகங்களில் படித்திருந்தபோதிலும், உண்மையாகவே அவ்வாறு சொல்லப்பெறுகிற உலகங்களும், அங்கு வாழ்கின்ற தேவர்களும், அவர்களுக்கு அதிபதிகளும் இருந்து ஆட்சிபுரிகிருர்கள் என்பதை, நாம் யாரிடமும் கேட்டு அறியாத காரணத்தால்,

அந்தக் குழந்தை சொன்ன இச்செய்தி, எமக்கு மிக்கதோர் வியப்பையும், அதன் முழு விவரமும் அறியவேண்டுமென்ற ஆர்வத்தையும் உண்டாக்கியது.

37. எமலோகம், பிரம்மலோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் முதலியனவும் அவற்றின் அதிகார மூர்த்திகளும் இருந்துவருகின்ற உண்மை.

ஆவி உலகத்தவர்கள் இருக்கின்ற இருள்பகுதி, மத்திபப் பகுதி, அருள்பகுதி (புண்ணியப்பகுதி) இவற்றிற்கு மேலாக என்னென்ன உலகங்கள் இருக்கின்றனவென்று கேட்டோம். அதற்கு அவள் இவ்வுலகத்தில் வாழ்ந்து இறந்தவர்கள், ஆவிஉடலோடு வாழுகின்ற ஆவிஉலகத்திற்கு மேலே, எமலோகமும், அதற்குமேல் பிரம்மலோகமும், அதற்குமேலே விஷ்ணுலோகமும், அதற்குமேலே சிவலோகமும் இருக்கின்றனவென்றும், அங்கு அததற்குரிய அதிபதிகளும், தேவர்களும் இருக்கிறார்கள் என்றும் சொன்னாள்.

மற்ற உலகங்களும், அங்கு வாழ்கின்றவர்களும் உண்டென்ற விவரம் புத்தகங்களில் படித்திருக்கிறோம். ஆனால், எமலோகம் இருக்கின்றதாகச் சொல்கின்றாயே, அங்கு ஏமன், காலன், தூதன் என்பவர்கள் மட்டும் வாழ்ந்து, ஆவி உடலைத் தூல உடலிலிருந்து பிரிப்பதற்கு, ஓர்உலகம் தேவையில்லையே? எமலோகத்தில் வேறு யாரும் இருக்கிறார்களோ? என்று கேட்டோம்

இந்த உலகத்திலுண்டான ஜீவராசிகளின் ஆவிகள் அத்தனையையும், அந்தந்த வேளையிலே பிரிப்பதற்கு மூன்று பேரால் முடியாதல்லவா? ஆதலால், எமதர்மராஜாவுக்கு கணங்கள் என்றும், பூதங்கள் என்றும், நாகங்கள் என்றும், பரிவாரங்கள் உண்டு; அவர்கள்தான் மிருகங்கள் உடலிலும், மனிதர்கள் உடலிலும் புகுந்து, வெறிக்கும்படியும், வெகுளும்படியும் செய்து, அநேக நிகழ்ச்சிகளைச் செய்

வித்து, அதன் மூலமாக மரணத்தை உண்டு பண்ணுகிறார்கள் என்றும் அறிவித்தாள்.

எமலோகத்தில் நடக்கிற காரியங்களைக் குறித்தும், எமதர்மனின் செயல்களைக் குறித்தும், ஆவிகளைத் தூல உடலிலிருந்து பிரித்து, முதலில் எங்கே கொண்டு போகப்பெற்று, புண்ணியம் செய்ததும், பாவம் செய்ததும், தீர்மானிக்கப்பெறுகிறதென்ற விவரங்களைக் குறித்தும், அதேபோல பிரம்மலோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் முதலியவற்றைப் பற்றிய, முழுவிவரங்களைக்குறித்தும் கேட்டபொழுது, தெய்வலோக இரகசியங்களைப் பற்றிய விவரங்கள் பூலோகத்தில் வசிக்கப்பட்டவர்களுக்கு விளங்கிக் கொள்ளவும் முடியாது, சொல்லவும் கூடாதென்ற கட்டுப்பாடு இருப்பதாகவும் அறிவித்தாள்.

அவ்விதக் கட்டுப்பாட்டிற்கு அதிபதி யாரென்று கேட்டபொழுது, சிவலோகத்திலிருந்து ஆண்டுவருகின்ற சிவபெருமான்தான் என்று பதில் கிடைக்கவே, அவரோடு பேசுந்தன்மையிலுள்ள குழந்தையாகத் திருவருள் அதை அமைத்திருந்ததாலும், நாமும் உண்மை என்னவென்பதைச் சந்தேகத்திற்கு இடமின்றி அறிந்து, உணர்ந்து கொள்ளவேண்டுமென்று, உண்மையாகவே பிரார்த்தித்துப் பூசைசெய்து வந்ததாலும், எமக்கு இரகசியங்களை அறிவிக்கலாமாவென்பதைச் சிவபெருமானிடத்தில் கேட்டு, அவர் உத்தரவு கொடுத்தால் தெரிவிக்கலாமாவென்று கேட்டோம்.

சரியென்று சொல்லி, அவரிடம் உத்தரவு கேட்கவே, எம்பெருமானும், எம்மையும் ஒரு பொருட்படுத்தி, தெய்வ இரகசியங்களை நாம் அறியும் தகுதியுடையேம் என்றும், அறிவிக்கலாமென்றும், உத்தரவு கொடுக்கவே, அந்த அருமைக் குழந்தையும், அங்குள்ள பல இரகசியங்களையும், பல நிகழ்ச்சிகளின் விளக்கங்களையும் அறிவித்தாள். அவற்றுள் சொல்லக் கூடாதனவற்றை நீக்கி, பலரும் அறியச்

சொல்லலாமென்ற இரண்டொரு காரியங்களைமட்டும், இங்கே உணர்த்துகின்றோம்.

சரஸ்வதி பூசை தினத்தன்று, நாம் சரஸ்வதி அம்மனின் ஒரு படத்தை வைத்தோ அல்லது ஓர் உருவத்தைச் செய்தோ, இந்நிலவுலகில் வழிபாடுசெய்து வருகின்றோம். ஆனால், எமலோகத்திற்கு மேலேயுள்ள பிரம்மலோகத்தில், உண்மையாகவே இருக்கிற சரஸ்வதி அம்மனுக்கு, அதே தினத்தில்தான் தேவர்களெல்லாம் நேரில் வழிபாடு செய்து, கல்வியறிவு மேம்படும்படியான அனுக்கிரகத்தைப் பெறுகிறார்கள் என்ற விவரம் அறியாதிருந்தோம். தேவலோகங்களில் நடக்கிற வைபவங்களில் கலந்துகொள்ளும் பேறு பெற்ற புண்ணியப்பகுதியிலுள்ள ஆவிகள், பூலோகத்திலுள்ள மக்களுக்கு இந்த இந்த மாதத்தில், இந்த இந்த நட்சத்திரத்தில், இந்த இந்த விழாக்கள், இந்த இந்த மூர்த்திக்கு நடைபெறுகிறதென்ற விவரத்தை அறிவித்தே, நாம் அவ்வைபவங்களைக் கொண்டாடும் பேறு பெற்றிருக்கிறோம் என்பதை அறியும்பொழுது, நமக்கு ஒரு புத்துணர்ச்சி ஏற்படுகிறது.

இப்பூவுலகில் நம்மை ஆளுகின்ற தலைவர்களுக்கு, தலைநகரத்தில் ஏதாவது கொண்டாட்டம் இருந்தால், தலைநகரில் உள்ளவர்கள் அதில் நேரடியாகப் பங்கு பெறவும், நேரில் பார்வையிடவும், நேரில் கொண்டாடவும் முடிவது போல், மற்றவர்கள் நேர்முகமாகக் கொண்டாடமுடியாது என்பதை அறிவோம். நேரில் சென்று கலந்துகொள்ள முடியாதவர்களும், மற்றைய ஊர்களிலுள்ள மக்களும், அதே தினத்தில் அந்தத் தலைவருடைய படத்தையோ, உருவத்தையோ, தங்கள் தங்கள் இடங்களிலேயே வைத்து, தலைவருக்குச் செய்ய வேண்டிய உபசாரங்களையெல்லாம், அந்தப்படத்திற்கோ, உருவத்திற்கோதான் செய்கிறார்கள்.

தலைநகரில் நடைபெறுகிற வைபவத்தில் அங்குச் செல்ல இயலாத மக்கள், அவ்விதமாகச் செய்து பங்கு பெற்றுக் கலந்துகொள்ளுகிறார்களே தவிர, வேறு எந்த விதத்தாலும் அந்தத் தினத்தைக் கொண்டாடவோ, அந்தச் சிறந்த காரியத்தில் தங்களுக்குள்ள ஈடுபாட்டை வெளிப் படுத்தவோ முடியாது என்பது யாவரும் அறிந்ததே. இவ் வுலகிலுள்ள தலைவர்களுக்கு, நேரில்வந்து கலந்துகொண்ட வர்களில், பிரதானமாக முன்னணியில் நின்றுகொண்டி ருந்த ஒரு சிலரையும், தன்னுடைய கண்களில் தென்பட்ட ஒரு குறிப்பிட்ட அளவினரையே, தெரிந்துகொள்ள முடி யுமே தவிர, பங்குபெற்ற எல்லோரையும், எல்லோருடைய அன்பின் ஆழத்தையும், அளந்து அறிந்துகொள்ள முடிவ தில்லை.

நேரில் வர இயலாத தன் சொந்த ஊரிலுள்ள மக்களின் உள்ளத்தையும், பிற ஊர்களிலுள்ளவர்கள் தன்மீது காட் டிய பேரன்பையும், அவர்கள் மனத்தினாலும், வாக்கினா லும் வேண்டிக்கொண்டவற்றை, தாங்கள் தாமே தெரிந்துகொள்ளவும், அறிந்துகொள்ளவும் முடிவதில்லை. பத்திரிகைகள் வாயிலாகவும், அதிகார வட்டங்களின் அறி விப்பின் மூலமாகவும், ஏதோ ஓரளவு அறியத்தக்கதாகவே, நம் தலைவர்களின் தன்மை அமைந்திருக்கிறது.

ஆனால், நம்மை உண்மையில் ஆண்டுவருகிற அதிபர் களும், அவர்களுடைய பலதரப்பட்ட இலாகாக்களின் அதிகாரிகளும், மேலுலகங்களிலேயே இருக்கிறார்கள். அவர் களுடைய ஆணைப்படியே நாம் இங்கே வாழ்ந்து வருகி றோம் உதாரணமாக:—

(1) நாம் நம்முடைய விருப்பப்படி, நம்முடைய பெற்றோர்களைத் தேடிப் புகுந்துகொள்ள முடிவதில்லை. முடியுமானால், ஏழைகள் வீட்டில் பிறக்காமல் பணக்காரர்

கள் வீட்டிலேயே வந்து பிறக்கப் பார்த்திருப்போம். ஆண்டவனின் ஆணைப்படியே பெற்றோர் அமைகிறார்கள்.

(2) நம்முடைய விருப்பப்படியோ அல்லது நம்முடைய பெற்றோர்களின் விருப்பப்படியோ, நாம் ஆணாகவும், பெண்ணாகவும் பிறக்கவில்லை. எவ்விதம் பிறக்கும்படி ஆண்டவன் செய்கின்றாரோ, அவ்விதமே ஆணாகவோ, பெண்ணாகவோ பிறக்கிறோம்.

(3) நம்முடைய உடலின் அமைப்பில் கூன், குருடு, செவிடு, பேடு, ஊமை, நொண்டி, நெட்டை, குட்டை, அழகு, ஆற்றல், குரல் முதலியவற்றில் நமக்கும், நம்முடைய பெற்றோருக்கும் யாதொரு அதிகாரமும் இல்லை. எவ்விதம் பிறக்கும்படி ஆண்டவன் செய்கின்றாரோ, அவ்விதமே பிறந்து, உள்ளதைக்கொண்டு எவ்வளவு நேரம் எவ்வளவு அழகுபடுத்திக்கொள்ளமுடிகின்றதோ, அதைத்தான் செய்துகொள்ளுகின்றோமே தவிர, மாற்றியமைக்க முடிவதில்லை.

(4) இன்பமும், துன்பமும், பிணி, மூப்புச்சாக்காடு முதலியனவும் பிறக்கின்ற சூழ்நிலையும் (ஊரும், தேசமும், பாஷையும் பிறவும்) நம்முடைய விருப்பத்திலும், பெற்றோர்களது விருப்பத்திலும், அல்லது இதர வல்லுனர்கள் ஆற்றலிலும் அடங்காமல், ஆண்டவனுடைய ஆணைப்படியே நிகழ்கின்றன.

(5) நாம் வாழ்வதற்கு இன்றியமையாததாக அமைந்த உணவுஉற்பத்தியும், நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் முதலியவற்றின் உபகாரமும், நம்மால், பெற்றோரால், பிற விஞ்ஞானிகளால், அரசாங்கத்தாரால் ஏற்படவில்லை; கருணையே உருவான ஆண்டவனாலேயே அவை நடைபெறுகின்றன.

ஆகவே நம்மை உண்மையில் ஆண்டு, நமக்கு வேண்டிய உபகாரம் செய்து வருகிற அரசாங்கமும் அதிகாரிகளும், மேலுலகங்களில் உண்மையில் இருக்கின்ற விவரம், நம்முடைய சிந்தனைக்குச் சாதாரணமாக வருவதில்லை.

எல்லாம் வல்ல ஆண்டவன், எங்கும் செறிந்த ஆண்டவன், உருவமேயில்லாத ஆண்டவன், உருவமேயில்லாத உயிர்வர்க்கம் (ஜீவான்மாக்கள்) கடைத்தேறும் பொருட்டு, அவைகளுக்கு உடல் கொடுக்கவேண்டிய காரணத்திற்காகவும், உலகத்தை உற்பத்திசெய்வதற்காகவும், நினைந்ததொரு வடிவத்தைத் தானே எடுத்து, பல அதிகாரிகளை நியமித்து, அவர்களுக்கும் குறித்ததொரு வடிவத்தையும், குறித்ததொரு இலாகாவையும் அமைத்து, நம்மை ஆண்டு வருகிற விவரமும், சாமானியமானவர்களின் சிந்தனைக்கு வருவதில்லை; அப்படிப்பட்ட ஆண்டவனும், அவரது அதிகாரம் பெற்ற ஆட்சியாளர்களும், நாம் தனித்தனியே நினைப்பதையும், சொல்லுவதையும், செய்வதையும், தெரிந்துகொள்ளும் ஆற்றல் பெற்றவர்களாக இருக்கின்றார்கள்.

அதன் காரணத்தால், நாம் மேல் உலகங்களில் நடக்கின்ற வைபவங்களில், நேரில் கலந்துகொள்ள முடியாத நிலையில் இருந்தாலும், இப் பூலோகத்தில், அந்த அந்த தினத்தில், அந்த அந்த அதிகாரிகளை நினைத்து ஏதும் செய்தால், அவர்கள் அதனை அறிந்துகொள்ள முடிகின்றது. இறந்துபோன நமது சுற்றத்தார்கள், ஆவி உலகத்தில் புண்ணியப் பகுதியில் இருப்பார்களானால், அவர்கள் நாம் நினைத்த உடனேயே தெரிந்துகொள்ள முடிகிறதென்றும், உடனே நம்மிடம் வந்து ஏன் நினைத்தோம் என்று கவனிக்க முடிகிறதென்றும் சொல்வதனாலே, அவர்களுக்கு மேலான நிலையில் இருக்கும் அதிகார மூர்த்திகள் நாம் நினைப்பதையும், சொல்வதையும், செய்வதையும் அறியவும், தெரியவும் முடியுமாவென்ற சந்தேகத்திற்கு இடமில்லை.

அல்லாமலும், ஆவிஉடலில் இருக்கின்ற நண்பர்களும் சுற்றத்தார்களும், இவ்வுலகத்திலுள்ள பலர் நினைக்கும் பொழுது, ஏககாலத்தில் எல்லா இடங்களுக்கும் சென்று, எல்லோருடைய காரியங்களையும் கவனித்துக் கொள்ள முடியாமலிருக்கிறார்கள். ஓர் இடத்தில் ஒன்றைக் கவனித்துக்கொண்டிருக்கும்பொழுது, மற்ற இடத்தில் மற்றொன்றைக் கவனிக்கமுடியாது.

ஆனால், மேல் உலகத்திலுள்ள அதிகார மூர்த்திகள், ஏககாலத்தில் பலர் நினைப்பதையும், சொல்வதையும், செய்வதையும் அறிந்துகொள்கின்ற ஆற்றல் பெற்றவர்களாக இருக்கிறார்கள். எப்படி ஓரிடத்தில் பேசுகின்ற ரேடியோப் பேச்சு, கோடிக்கணக்கான ரேடியோப் பெட்டிகளின் வாயிலாக, கோடிக்கணக்கான மக்கள் அறிந்து அனுபவிக்கவும், அதனால் அது பாதிக்கப்படாமலும் இருக்கின்றதோ, அதேபோலக் கோடிக்கணக்கான மக்கள் நினைப்பதையும், சொல்வதையும், செய்வதையும் அறியும் ஆற்றல்பெற்ற அதிகார மூர்த்திகளும், அவர்களின் எண்ணிக்கையின் அதிகத்தால் பாதிக்கப்படாமல் இருக்கமுடிகிறதென்று அறிவிக்கப்படுகிறது.

மேலே சொல்லிய காரண காரியங்களை நன்றாய் உணர்ந்த நம் முன்னோர்கள், மேலுலகங்களில் நம்மை ஆளுகின்ற மூர்த்திகளுக்கு நடைபெறுகின்ற வைபவங்களையெல்லாம், ஆவி உலகத் தொடர்பினாலும், ஆத்மீக வளர்ச்சியின் பக்குவத்தாலும், அதிகார மூர்த்திகளின் அருளினாலும் அறிந்து, அதே நாட்களில் (மாதங்களையும் நட்சத்திரங்களையும் கொண்டு தீர்மானித்து) நாமும் அவ்வைபவங்களை இப்பூலோகத்தில் கொண்டாடக்கூடியதாகப் பஞ்சாங்கங்கள் வாயிலாக அமைத்து, மேலுலகங்களிலுள்ளவர்கள் பெறுகின்ற பேற்றை, நாமும் பெறும்படியாகச் செய்திருக்கிறார்களென்பதை உணர உணர, மட்டில்லா மகிழ்ச்சி ஏற்படுகின்றது. அவர்களுக்கு நாம் பெரி

தும் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதையும் நன்கு உண ரக்கூடியதாக இருக்கிறது.

நேரில் வழிபாடு செய்வதையும், தூரத்திலேயிருந்து வழிபாடு செய்வதையும், ஒருங்கே அறியும் ஆற்றல் பெற்ற மூர்த்திகளாக மேலுலக அதிகாரிகள் அமைந்திருக்கும் கார ணத்தால், மேலுலகங்களில் நேரே வழிபாடு செய்கின்றவர் களுக்கும், இந்நில உலகில் ஒரு படத்தையோ, உருவத் தையோ வைத்து வழிபாடு செய்கின்றவர்களுக்கும், ஒரே விதமான பலன் கிட்டுகின்றதென்பதை உணர்ந்துகொள்வ தால், ஒரு படத்தையோ, ஓர் உருவத்தையோ வைத்து, இங்கு நாம் வழிபடும்பொழுது, நம்முடைய அகக் கண் களுக்கு மேலுலகங்களிலிருக்கும் அந்தந்த மூர்த்திக்கே, நேரில் வழிபாடு பண்ணுகின்ற தோற்றமும் உணர்ச்சியும் ஏற்பட ஏதுவாகின்றது

ஆகவே, இவற்றிலிருந்து சரசுவதி பூசையன்று நாம் ஒரு படத்தையோ, ஓர் உருவத்தையோ வைத்துப் பூசை செய்வதால், நாம் பிரம்மலோகத்தில் கல்விக்கு அரசியாக விளங்கும் சரசுவதி அம்மனுக்கு, நேரே பூசைசெய்த பேற் றையும் அதற்குரிய அனுக்கிரகத்தையும் உண்மையில் பெறு கிறோம் என்பது உறுதிப்படுத்தப்படுகிறதல்லவா?

கொழும்பில் 1943-ம் ஆண்டு பங்குனிமீ ஒருநாள், எமது நண்பர் Dr. T. நல்லைநாதன் L. R. C. P. (London) M. R. C. S. (England) அவர்கள் காலஞ்சென்ற திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகளுடன், நம் சமய சம்பந்தமான சில சந்தேகங்களைக் கேட்கவேண்டுமென்று வந்திருந்தார்கள். பேச ஆரம்பித்து ஞானியார் சுவாமிகளை அழைத்தபொழுது, பதில்வரக் கொஞ்சம் தாமதமாயிற்று. மேலுலகங்களில் உள்ள ஆவிகள், வேறு என்ன செய்து கொண்டிருந்தாலும், மூன்று முறை அழைத்தால் கட்டா யம் வந்துவிடுகின்றனர் என்பதை, நாம் முன்னரே அறிந்

திருந்ததால், மூன்று முறை ஞானியார்சாமிகளை அழைத்தோம். அவர்கள் வந்து "இன்று பங்குனி உத்திரம் என்பது தெரியுமா? இங்கு நடராசப்பெருமான் நடனம்புரியும் நாள்; விசேடமாகப் பூசனைசெய்கின்ற நாள்; யாம் இன்று பேச முடியாது; வருகிறோம்" என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார்கள்.

அதுசமயம் அங்கு வீற்றிருந்த யாருக்கும் அன்று பங்குனி உத்திரம் என்பது தெரியாது இதுபோன்று பல தடவைகளில், மேலுலகங்களில் நடைபெறுகின்ற விசேடங்களை, ஆவி உலகத்திலுள்ள அன்பர்கள் அறிவித்திருக்கிறார்கள். பஞ்சாங்கத்தைப் பார்த்தால் அவையெல்லாம் சரியாக இருக்கின்றன. சதுர்த்தி தினத்தன்று இப்புவனத்திற்கு ஸ்ரீகண்ட ருத்திரர் விநாயகராகக் காட்சி கொடுப்பதும், கிருத்திகையன்று முருகப் பெருமானாகக் காட்சி கொடுப்பதும், கோயில்களில் நடைபெறுகின்ற விசேட வைபவங்களெல்லாம், மேலுலகங்களின் வைபவங்களின் சின்னங்களாகவே அமைந்திருக்கின்றன என்பதும் அறிவிக்கப்பெற்றன.

## 38. அவற்றிற்குரிய மேல்நாட்டு மேற்கோள்கள்.

ஆங்கிலம் படித்த எங்களுக்கு, மேலுலகங்கள் சம்பந்தமாகவும், அங்குள்ள அதிபதிகளின் சம்பந்தமாகவும், ஆங்கிலேயர்களில் ஆவி உலகத்தோடு தொடர்புடையவர்களின் கருத்து, இதற்கு மாறுபட்டிருக்கிறதா? அல்லது ஆவி உலகத்திலுள்ள இந்துக்கள் சொல்வனவற்றை வலியுறுத்துகின்றனவா? என்று அறியவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. ஆகவே, ஆங்கிலேயர்களுடைய ஆவி உலக அனுபவங்கள் அடங்கிய, அநேக புத்தகங்களைப் பார்வையிட்டோம். எல்லோருடைய அனுபவமும் ஒன்றை ஒன்று உறுதிப்படுத்துகின்றனவே தவிர, மாறுபட்டனவாக இல்லை. உதாரணமாக, இரண்டொன்று இங்கே குறிப்பிடுகிறோம்

1874 முதல் 1918-ம் வருடம் முடிய இங்கிலாந்தில், ஆவி உலகத்தோடு பேசியவர்கள் வெளியிட்ட 19 முக்கிய புத்தகங்களிலிருந்து, (Harold Bayley) ஹேரால்டு பெயிலி என்பவர், 1918ம் வருடத்தில் ("The undiscovered country"-A Sequence of spirit messages describing Death & the after world) "கண்டுபிடியாத பிரதேசம்"-மரணத்தையும், மரணத்திற்குப் பின்னுள்ள உலகத்தையும் அறிவிக்கின்ற ஆவி உலக அறிவிப்புகளின் தொகுப்பு என்ற, 270 பக்கங்கள் கொண்ட புத்தகத்தை வெளியிட்டிருக்கிருர். அதில் குறிப்பிட்டிருக்கிற 19 புத்தகங்களும், 1876 முதல் 1918 வரை வெளியானவை. ஒவ்வொன்றும் நூற்றுக்கணக்கான பக்கங்கள் கொண்டவை. அவற்றின் பெயர்களும், விவரங்களும் வருமாறு:-

## DETAILS OF THE 19 BOOKS.

1. Life beyond the grave-by E. W. Allen (London) 1876—168 pages.
2. Spirit teachings—by London Spiritualist Alliance 1912—
3. Hafed, Prince of Persia—by Hay Nisbet & Co., (Glasgow) 1893—580 pages.
4. A wanderer in the Spirit Lands,-by W. J. Sinkins (London) 1896—308 pages
5. Letters from Julia or Light from the Borderland by Grant Richards (London) 1898—188 pages.
6. Truths from the Spirit world—by A Wooderson (London) 1907—144 pages.

7. Teachings—by H. M. R. Derny—192 pages undated.

8. A celestial Message—by Lee & Shepard (Boston U. S. A.) 1902—134 pages.

9. Realities of the future Life—by Holywell Press (Oxford) 1908—88 pages.

10. Christ in you—by J. M. Watkins 1910-196 pages.

11 Not Silent- if dead-by A. L. Fernie (Kensington) 1916—196 pages.

12. Letters from a living dead man—by Elsa Barker (London) 1916—[illegible]0 pages.

13. Private Dowding—by J. M. Watkins (London) 1917—108 pages.

14. Speaking Across the Border line—by Chas Taylor (London) 1917—162 pages.

15. Thought lectures—by Father Stephano (London) 1917—122 pages.

16. War letters from the living dead man—by Elsa Barker (London) 1917—320 pages.

17. Messages from Meslom-by Elliot stock (London) 1918—102 pages.

18. Gone West—by William Rider & Son (London) 1917—354 pages.

19. Teachings of Love—by Wm Brendon & Son (Plymouth) 1917—96 pages.

Page 142—All life and all development are consequent on the operation of spiritual energy, obeying the dictates of the will of spiritual beings. This once grasped, blind force disappears, and intention takes its place- intention of intelligent and powerful spiritual workers of various grades, operating according to certain fixed laws but within the bounds of those laws, free and mighty.

அந்தப் புத்தகத்தில் 142-ம் பக்கத்தில் "எல்லா வாழ்வும் எல்லா அபிவிருத்தியும் ஆவி ரூபத்திலுள்ளவர்களின் ஆணைகளின் வண்ணம் அடங்கி நடக்கும் சக்தியின் தொழிற்பாட்டாலேயே நிகழ்கின்றன. இதைக் கிரகித்து விளங்கிக்கொள்ளவே, அது அறிவற்ற சக்தி என்பது நீங்கி விடும். எண்ணம் என்பது அதில் பதில் இடம்பெறும். அந்த எண்ணமும் சில சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு அவற்றோடு பொருந்த நடத்திவரும், சுதந்தரமும், பேராற்றலும், அறிவும், அதிகாரமும் வாய்ந்த, பல்வேறு தரங்களிலுள்ள ஆவி ரூப ஏவலாளர்களிலிருந்து வெளிப்படுவதாகும்" என்று கூறுகிறது.

Page 147. These beings are of many grades and many species. They are not all of the same order, nor all of the same form. But their work is controlled by those above them, as these are controlled by powers of higher grade and sublimity still.

But what of the other Gods? you ask; for there are many in the world's pantheons. Well, the realities exist out here.

What! you say again, can man create the Gods of his imagination and give them a place in the invisible? No! They existed here first, and man became aware of them long ago, through his own psychic and spiritual perception of them. Man did not create them and the materialists who say that he did, know little of the laws of being. Man, primitive man perceived them through his own spiritual affinities with and nearness to them. When you have read folk-tales of this God and that, you have perhaps spoken patronisingly of the old myth-makers and thanked your lucky stars that you lived in a more enlightened age. But those old story-tellers were the really enlightened ones, for they saw into the other world and recorded what they saw.

We hear much of the laws of Nature. Who enforces them? The term "NATURAL LAW" is in every man's mouth, but the law has executors in heaven as on earth.

147-ம் பக்கத்தில் "இவர்களெல்லாம் பலதரப்பட்ட அதிகாரமுள்ளவர்களாகவும், பலவகையினராகவும் இருக்கிறார்கள். அவர்களெல்லாம் ஒரே தன்மையிலும், ஒரே ரூபத்திலும் இல்லை. ஆனால் அவர்களுடைய தொழில், அவர்களுக்கு மேலுள்ளவர்களின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாகவும், மேலுள்ள அவர்களின் செயல், அவர்களுக்கும் மேலேயுள்ள மேன்மையாளரின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாகவும் இருக்கிறது. உலகத்திலுள்ள கோயில்களில் அநேக உருவங்கள் இருக்கின்றனவே? பிற கடவுள்

கொள்கைகளைப் பற்றி என்னவென்று கேட்கிறீர்கள்? அவ்வுருவங்களின் உண்மைக் கர்த்தாக்கள் இங்கே (மேலுலகங்களில்) இருக்கின்றனர்.''

ஆச்சரியப்பட்டு என்ன! என்று திரும்பவும் கேட்கின்றீர்கள். பூவுலகிலுள்ள மனிதன், தன்னுடைய கற்பனையினால் கடவுள்களின் உருவங்களைச் சிருட்டித்து உண்டாக்கியிருந்தால், அவர்களுக்கு, கண்ணுக்குத் தெரியாத மேலுலகங்களில் இருக்கும் தன்மையையும், அவன் கொடுக்க முடியுமா? முடியாதல்லவா! அவ்வடிவினர் முதலில் இங்கு (மேலுலகத்தில்) இருந்தவர்களே. மனிதன் வெகு காலத்திற்கு முன்பே. தன்னுடைய சொந்த மானதக் காட்சியினாலும், ஆவியுலகத் தொடர்பினாலும், அவர்களை அறிந்திருந்தான். மனிதன், அவர்களின் உருவங்களை உண்டாக்கவோ, சிருட்டிக்கவோ இல்லை. மனிதனே சிருஷ்டித்திருக்கிறான் என்று சொல்லுகின்ற சில உலகத்தவர், வாழ்வின் சட்ட திட்டங்களை அறியாதவராவர். மனிதன் அதிலும் பண்டைக் காலத்து மனிதனே, தன்னுடைய ஆவி உலகத்தவரோடு கொண்ட உறவினாலும், நெருங்கிய தொடர்பினாலும் அவற்றைத் தெரிந்துகொண்டான்.

இந்தக்கடவுள் அந்தக்கடவுள் என்றெல்லாம் பழைய காலத்துக் கதைகளைப் படிக்கும்பொழுது. நீங்கள் உண்மையை உணர்ந்த மெய்ஞ்ஞானிகள் வாழும்படியான காலத்தில் வாழ்கின்ற வாய்ப்பைப் பெற்றிருக்கிறோம் என்று எண்ணி, பண்டைக் காலத்து மக்கள், கட்டுக்கதைகளை நம்பிக்கொள்கின்ற அஞ்ஞானிகள் என்று பேசிக்கொண்டிருக்கிறீர்கள் ஆனால் அந்தப் பழங்கதை சொல்லுகின்ற பண்டைக் காலத்தவரே, உண்மையில் மெஞ்ஞானிகள் ஆவார்கள். ஏனென்றால் அவர்கள்தான் பூவுலகத்தில் இருந்துகொண்டே மேலுலகங்களில் உள்ளவற்றைப் பார்க்கவும், பார்த்தவற்றைப் பதிவுசெய்து வைக்கவும் தலைப்பட்டவர்கள்.

இயற்கைச் சட்டங்களைப் பற்றி அதிகமாகக் கேள்விப் படுகிறோம். அந்தச் சட்டங்களை நிறைவேற்றுகிறவர்கள் யார் என்று தெரியுமா? "இயற்கைச் சட்டம் என்ற பதம், ஒவ்வொரு மனிதனுடைய வாயிலும் தொனிக்கின்றது. ஆனால், உலகச் சட்டங்களை நிறைவேற்றும் நிர்வாக அதிகாரிகள், உலகத்தில் இருப்பதுபோல, இயற்கையின் சட்டங்களை நிறைவேற்றும் நிர்வாக அதிகாரிகள், மேலுல கங்களிலும் இருக்கிறார்கள்" என்று குறிப்பிடப்பட்டிருக் கின்றது. (குறிப்பு:- இயற்கை என்பது ஆண்டவனையே குறிக்கின்ற ஒரு பதமாகும்) அதனாலேயே, மாணிக்கவாச கப் பெருமான்:-

"வேறு வேறு உருவும், வேறு வேறு இயற்கையும்,
நூறு நூறு ஆயிரம் இயல்பினதாகி, ஏறுடை ஈசன்"

என்று கூறியிருக்கிறார்.

Page 161. And so the earth is enveloped by, and included in and affected by the spiritual powers, of varying degrees and kind, entrusted by the creater-God to all these ministers of all these spheres which are around it.

Page 165. All these Zones, of which we have spoken, are inhabited by beings according to their degree, who progress from one sphere to a higher, as they accumulate knowledge within themselves.

161-ம் பக்கத்தில் "இந்த உலகமானது, பற்பல உலகங்களால் சூழப்பட்டு, அவ்வவ்வுலகங்களிலுள்ள பலதரப்பட்ட அதிகாரமும், பலவிதமான பொறுப்பு வாய்ந்த அதிகாரிகளின் ஆணைக்குட்பட்டதாக இருக்கிறது. அந்த அதிகாரமும், பொறுப்பும், முழுமுதல் சிருஷ்டி

கர்த்தாவால் கொடுக்கப்பெற்றதாகும்,'' என்று குறிப்பிட்டிருக்கிறது.

165-ம் பக்கத்தில் "நாங்கள் சொல்லுகின்ற உலகங்களிலெல்லாம், அந்தந்த இடத்திற்குப் போகக்கூடிய அறிவாற்றலும், தகுதியும் உடையவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். அவர்கள் கீழ்நிலையிலிருந்து மேல்நிலைக்குப் படிப்படியாகச் செல்லக்கூடியவர்களாக இருக்கிறார்கள்'' என்று குறிப்பிட்டிருக்கிறது.

Page 181. The myths which have centered round the plain truths of revelation, owe their origin to India.

Page 182. "You must know that Egypt, Persia, Greece, Rome, the great Kingdoms of the world, owed their philosophy and religion very largely to India. Manu, the great Indian, reformer and teacher, reappears as the Manes of Egypt, the minos of Greece, the Moses of Hebrew story. The name is impersonal."

181-ம் பக்கத்தில் "மேலுலக அறிவிப்புக்களின் உண்மையை உள்ளவாறு வெளிப்படுத்துகின்ற, பழைய காலத்துக் கதைகள் இந்தியாவிலேயே தோன்றின'' என்றும், 182-ம் பக்கத்தில் "எகிப்து (Egypt) பெர்சியா (Persia) கிரீஸ் (Greece) ரோம் (Rome) முதலிய நாடுகளும், உலகிலுள்ள பிற புகழ்பெற்ற தேசங்களும், தங்கள் தங்களுடைய மதக்கோட்பாட்டிற்கும், தத்துவ ஆராய்ச்சிக்கும், இந்தியாவிற்குப் பெரிதும் கடமைப்பட்டனவாகும். இந்தியாவில் பெரிய புரட்சிகரமான போதிப்பைச் செய்த மனு, (Manu) எகிப்து (Egypt) தேசத்தில் "மனஸ்'' (Manes) என்றும், கிரீஸ் (Greece) தேசத்தில்

"மினோஸ்" (Minos) என்றும், ஹிப்ரு (Hebrew) நாட்டில் "மோசஸ்" (Moses) என்றும் வழங்கப்பெற்றுத் தோன்றியிருக்கிறார். ஒரே பொருளை ஒவ்வொரு பாஷையாளரும், ஒவ்வொரு பெயர் சொல்லி வழங்குதல் இயல்பே" என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

மேலும் பக்குவமுள்ளவர்கள், மேலுலகத்தில் ஆண்டவனைக் காண்கின்றார்கள் என்பதற்கு, கிறிஸ்தவர்களுடைய வேதப் புத்தகத்தின் (Bible) முதல் அதிகாரத்தின் (Genesis; Chapt 1) கீழ்கண்ட வசனங்களில்:—

(26) கடவுள், மனித வர்க்கத்தைத் தன்னுடைய உருவத்திலும், தன்மையிலும் உண்டாக்குவோம்; அவர்கள் உலகத்திலுள்ள எல்லா ஜீவராசிகளின் மேலும் அதிகாரம் செலுத்திவரட்டும் என்று சொன்னார்.

(27) அதன்படி, கடவுள் மனிதரை ஆணாகவும் பெண்ணாகவும் தன்னுடைய உருவத்திலேயே படைத்தார்.

(28) கடவுள், அவர்களை ஆசீர்வதித்து நீங்கள் பல்கிப் பெருகி, உலகத்தில் விருத்தி பெற்று, உலகத்தையும் அதில் உள்ள எல்லா ஜீவராசிகளையும் அடக்கி ஆண்டு களாக என்று சொன்னார்"—என்பதாகக் குறிப்பிட்டிருக்

(St, Mark Chapt 16–19) "இயேசுநாதர் அவ்விதம் சொல்லிவிட்டுப் பரலோகம் சென்று, கடவுளின் வலது கரத்தில் உட்கார்ந்தார்" என்று கூறுகிறது.

இஸ்லாமியர்களுடைய பரிசுத்த குர்ஆன் (சூ. 59 ரு. 3) "வான மண்டலங்களிலும் பூமியிலும் உள்ளவர்கள், ஆண்டவனை மகிமைப்படுத்தியும் வாழ்த்தியும் வருகின்றனர். அவனே சர்வ வல்லவனாகவும் சர்வ ஞானியாகவுமிருக்

கின்றான்'' என்று கூறுகிறது. (சூ 2. ரு 23-25) அவன் பிரார்த்திப்பவர்களின் பிரார்த்தனைகளைக்கேட்டு அங்கீ கரித்து, உத்தரங் கொடுப்பவன். இறைவன் பாதையில் முற்றாய், தன் வாழ்க்கையை அர்ப்பணம் செய்து, அவனுக்கே முற்ற முற்ற அடிபணிந்து, திருமறையின் முக்கிய அத்தியாயமான "பாத்திஹா'' என்ற பிரார்த்தனையை இடைவிடாது ஓதிவருகிற அடியான், தன் ஆண்டவனின் திருமுகத்தைக் காண்கின்றான்'' என்று கூறுகின்றது.

இவற்றிலிருந்து ஆவி உலகத்தொடர்பின் மேன்மையும், மேலுலகங்களின் உண்மையும், அங்கு அதிகாரம் பெற்ற அதிகாரிகள் இருந்து, ஏதோ சில சட்ட திட்டங்களின்படி, நம்மை ஆண்டுவருகின்ற தன்மையும், மேலுலகங்களில் பக்குவத்திற்கேற்றவாறு, மக்களும், தேவர்களும் வாழ்ந்துவருகிறார்கள் என்ற உண்மையும் தெளிவாகின்றதல்லவா?

**39. இறந்துபோன ஆண்மகனின் ஆவிஉடல் அவ்வுலகத்தில் அழிக்கப்பெற்று, இப்பூவுலகில் பெண்ணாகப் பிறந்திருப்பதை அறிவிக்கப்பெற்று, அது உண்மையாக இருந்த விந்தை.**

அம்மையநாயக்கனூரில் ஒருநாள் நாம், ஆவி உலகத்திலிருந்த தந்தையாருடன் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, நிலக்கோட்டையிலிருந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டர் (Circle Inspector) ஒருவர் வந்திருந்தார். அவர் தன்னுடைய 13 வயதுள்ள மகன் ஒருவன், 16 வருஷங்களுக்கு முன் இறந்துவிட்டதாகவும், அவனுடன் பேசவேண்டுமென்றும் விவரங்கள் கொடுத்தார். அவற்றை, அப்பொழுது பேசிக்கொண்டிருந்த தந்தையார் அவர்களிடம் சொன்னோம்.

அவர்கள், ஆவி உலகத்தில் அவருடைய மகன் ஒரு பகுதியிலும் இல்லை; மறு பிறவி எடுத்துவிட்டான்; மறு

பிறவி எடுப்பதற்கு முன்னதாக, ஆவி உலகத்தில் வாழ்ந்தும் வளர்ந்தும் வருகின்ற, யாதனு சரீரமானது அழிக்கப் பெற்று, அணுப்பிரமாணமுள்ள காரண சரீரத்தோடு, இன்னொரு கருவில் புகுந்து, வினைகளுக்குரிய சரீரம் பெற்று, ஆண் உருவத்திலோ, பெண் உருவத்திலோ, அலி உருவத்திலோ, எந்த எந்த நிலையில் பிறக்கவேண்டுமோ, அந்த அந்த நிலையில் ஆண்டவன் ஆணைப்படி பிறந்து விடுவதால், அதற்குரிய, பழைய உருவமும், பழைய பெயரும், பழைய உறவினர் தொடர்பும், அறவே அற்று விடுகிறது: ஆகவே ஆவி உலகத்தைவிட்டு நில உலகத்தில் பிறந்துவிட்ட அவன், இந்நில உலகில், எங்கு என்னவிதமாகப் பிறந்திருக்கின்றான் என்ற விவரம் வேண்டுமானால், மேலேயுள்ள அதிபதிகளிடம் கேட்டுச் சொல்லலாமென்று அறிவித்தார்கள்.

அவ்விதமே கேட்டுச் சொல்லும்படியாக வேண்டிக் கொண்டோம். ஐந்து நிமிடநேரத்தில் அவர் இப்பொழுது, நிலக்கோட்டைத் தாலுக்காவைச் சேர்ந்த. ஐயம்பாளையம் என்ற ஊரில் பொடிக்கடைச் சுப்பையாபிள்ளைக்கு, இலட்சுமி என்ற பெயருடைய பெண் குழந்தையாகப் பிறந்து, ஐந்து வருடங்களாகின்றன என்பதாக அறிவித்தார்கள். அந்தச் சர்க்கிள் இன்ஸ்பெக்டர், அதன் விவரத்தைக் குறித்துக் கொண்டு, காரிலே சென்று சரிபார்க்க, அந்தப்படியே இருந்ததை அறிந்து, அந்தப் பெண் குழந்தை கையில் ஐந்து ரூபாயும் இனாம் கொடுத்துவிட்டு வந்ததாக, எங்களிடம் ஆச்சரியத்தோடு தெரிவித்தார்.

அவருடைய மகன் இறந்து 16 வருடங்கள் ஆகியிருந்தன என்று முன்னரே குறித்திருக்கின்றோம். ஆனதால் ஆவி உலகத்தில் அவன், ஆவி உடலோடு, 10 வருடகாலம் தங்கியிருந்து, அது அங்கு அழிக்கப்பெற்ற பின், காரண சரீரத்தோடு, கருவாகத் தந்தையாரிடத்திலே இரண்டு மாதமும், தாயார் கருப்பத்திலே பத்துமாதமும், ஆக ஒரு வருடம், ஆனுக இருந்த அவன், பெண் குழந்தையாக உருவா

வதில் சென்றதுபோக, இப்பூலோகத்திற்கு வந்து 5 வருடங்கள் ஆகின்றன என்று தெரிந்து கொள்ளவேண்டும். மேலும் தூல உடலோடு கூடி, இவ்வுலகில் 13 வருடங்கள் வாழ்ந்த ஒருவன், ஆவி உலகத்தில் 10 வருடங்கள் ஆவி உடலோடு மாத்திரம் வாழ்ந்து வந்திருப்பதால், அவனுக்கு ஆண்டவன் கொடுத்த வயது மொத்தம் 23-என்று அறிந்து கொள்ள வேண்டும்.

## 40. பெயர்விட்டிருப்பது உயிருக்கும் தூலஉடலுக்கும் அல்ல, ஆவிஉடலுக்கே என்பதன் உண்மை.

நமக்குக் கொடுக்கப் பெற்றிருக்கும் பெயர்கள், நம்முடைய உண்மையான உள்ளுடல்களாகிய ஆவி உடல்களுக்கே உரித்தானவை; அவை தங்கியிருக்கும் கூடு, குரம்பை, யாக்கை என்று அழைக்கப்பெறுகிற, தூல உடம்புகளுக்கு உரித்தானவையல்ல, என்பதையும் நாம் உணர்ந்திருத்தல் வேண்டும். அதனுலேயே, ஆவி பிரிந்தபின் கிடக்கும் தூல உடலை, யாரும் பெயர் சொல்லி அழைக்காமல் பிணம், சவம், கட்டை என்ற பொதுப் பெயரால் அழைக்கின்ருேம் என்று முன்னரேயே கூறியிருக்கிருேம். இறந்தவர், ஆவி உடலோடு சென்று ஆவி உலகத்தில் வாழ்ந்தும் வளர்ந்தும் வருவதனுலேயே, அவருடைய பெயரைச் சொல்லி, இந்துக்கள் 'சிவலோக பிராப்தி' ஆனுர், சிவலோகம் அடைந்தார் என்றும், இறைவனடி சேர்ந்தார் என்றும், வைகுண்டபதவி அடைந்தார் என்றும் சொல்லுகிருர்கள்.

கிறிஸ்தவர்கள், பரலோகத்திற்குச் சென்று விட்டதாகவும், முகம்மதியர்கள், "ஆஹரம்" சேர்ந்து விட்டதாகவும் சொல்லுகிருர்கள். எல்லா மதத்திலும் இறந்தவர், இந்த இடத்தைவிட்டு வேறு இடத்திற்குச் சென்றுவிட்டதாக உணர்ந்திருந்ததினுலேயே, அவ்விதம் சொல்லுகின்ற பழக்கம் ஏற்பட்டிருக்கிறதென்று தெரிகிறது. இப்பொழுது,

நாம் அதன் உண்மையைச் சோதித்துத் தெளிந்து கொள்ளக்கூடியதாக இருக்கிறது.

ஆகவே, ஆவி உலகத்திலுள்ள ஆவி உடல் தாங்கிய ஒருவர், அவர் தூல உடலோடு பொருந்தியிருந்த பொழுது இவ்வுலகத்தில் என்ன பெயர் தாங்கியிருந்தாரோ, அதே பெயரைத்தான் ஆவி உலகத்தில் இருக்கும் வரை, தாங்கியிருக்கிறாரென்றும், அதே பெயரைச் சொல்லித்தான் நாம் ஆவி உலகத்தவரை அழைக்க வேண்டியதிருக்கிறதென்றும் தெளிவாகின்றது.

**41. மனிதருக்குரிய வயது பூலோகத்திலும், ஆவி லோகத்திலும் வாழுகின்ற வருஷங்களைப் பொருத்ததே என்பதன் உண்மையும், ஆவி உலகத்தில் ஆவி உடல் அழிக்கப்பெற்று, மறு பிறவி எடுப்பதன் உண்மையும், பிறவியற்ற மேல் நிலை எய்துவதின் உண்மையும்.**

ஒருவருக்கு ஆண்டவன் நியமித்த வயதும், இப்பூவுலகத்தில் வாழுகின்ற வருடமும், இறந்தபின் ஆவி உலகத்தில் வாழுகின்ற வருடமும் சேர்ந்ததாகின்றது என்று, முன்னரே சொல்லியிருக்கிறோம். அந்த வயது எல்லோருக்கும் ஒன்றுபோல் இருப்பதாகத் தெரியவில்லை. 39-வது அத்தியாயத்தில் சொன்ன, சர்க்கிள் இன்ஸ்பெக்டருடைய மகனுடைய பூரணவயது, 23 என்று முன்னர் குறிப்பிட்டிருக்கிறோம். எம்முடைய தந்தையாருடைய தாயார் 84 வயதில் இறந்து, ஆவி உலகத்தில் 20 வருடங்கள் வாழ்ந்திருந்து, அதன்பிறகு திண்டுக்கல்லில், ஒரு பலகாரக்கடை ஐயர் வீட்டில் ஆண்குழந்தையாகப் பிறந்திருப்பதாக அறிந்தோம். ஆகவே, அவளுடைய பூரண வயது 104 ஆகிறது.

இவ்விதம், பலருடைய பிறப்புக்களைச் சோதனைசெய்து பார்த்திருக்கிறோம். பெரும்பாலோர் ஆண்கள் பெண்களாக

வும், பெண்கள் ஆண்களாகவும், பிறப்பதாக அறிவிக்கப் படுகிறது. ஒரு சிலரே ஆண்கள் ஆண்களாகவும், பெண் கள் பெண்களாகவும் பிறப்பதாகத் தெரியவருகிறது. இவை கூர்ந்து கவனிக்கவேண்டிய காரியங்களாகும். எம்முடைய தந்தையார், 73-வது வயதில் இறந்து, ஆவி உலகத்தில் 1½ வருடமே யிருந்து, மேல்பதவி அடைந்தார்கள். ஆக, பூரண வயது 74½ ஆகின்றது. குழந்தை 5 நாள் இப்பூலோ கத்தில் இருந்து, 9½ வருடங்கள் ஆவி உலகத்தில் இருந்து மேல் பதவியடைந்துவிட்டது. ஆகவே, அதன் பூரண வயது 9½ தான் ஆகிறது.

அனுபவ அறிவு உண்டாகின்ற, இந்தப் பூலோக பள் ளிக்கூடத்திலும், பரலோகப் பள்ளிக்கூடத்திலும் தேறின வர்கள், மிருகத்தன்மையையும், மனிதத் தன்மையையும் விட்டு, தெய்வத்தன்மையடைந்தவர்களாகின்றார்கள். ஆண் டவன், தனக்கென்று வாழாமல், பிற உயிர்களை கடைத் தேற்றுவதற்கான உபகாரங்களையே செய்து வருகிறான் அல்லவா?

அதேபோல, தனக்கென்று உழைக்கின்ற உழைப்பை விடுத்து, பிறருக்கென்று உழைக்கின்ற உழைப்பைக் கைக் கொண்டு வாழ்ந்துவருகிறவர்கள், மனிதர்களில் தெய்வத் தன்மையடைந்தவர்களாகிறார்கள். அவர்கள் மனித உல கில் தேறினவர்களாகத் தேர்வு செய்யப்பெற்று, மேல்பதவி கொடுக்கப்பெறுகிறார்கள்.

அவ்விதம் மேல் பதவியடைகின்றவர்களுடைய ஆவி உடலும், ஆவி உலகத்தில் அழிக்கப்பெற்று, அணுப்பிர மாணமுள்ள காரண உடம்போடு, மேல் நிலைகள் அடை கிறார்கள் என்று அறிவிக்கப்படுகிறது. ஆகவே, மேல்நிலை எய்திய பிறகும் நாம் அவர்களுடன் பழைய முறைகளைக் கொண்டாடவோ, சாமான்யமாகப் பேசவோ முடிகிற தில்லை என்று தெரியவருகின்றது.

ஆவி உலகத்தில், இறந்தபின் வாழ்ந்தும் வளர்ந்தும் வருகின்ற, சூக்கும சரீரமாகிய ஆவி உடலை விட்டு விட்டு, அணுப்பிரமாணமுள்ள காரண சரீரத்தோடு, (பள்ளிக் கூடத்தில் தேருத மாணவர்கள், திரும்பவும் அதே வகுப் பில் சேர்க்கப் பெறுவது போல) இந்த நில உலகப் பள்ளிக் கூடத்தில் தேருதவர்கள் முன்னிருந்த வகுப்பிலேயே திரும்பவும் சேர்க்கப்பெறுவதற்கான பிறவியைப் பெறுவ தற்கும், தேறினவர்கள் (மேல்வகுப்பில் சேர்க்கப்பெறுவது போல) பிறவியற்ற மேற் பதவி பெறுவதற்கும், சாத்திர மேற்கோள் ஏதாவது இருக்கிறதாவென்று பார்த்த பொழுது, திருமூலர் அருளியிருக்கிற திருமந்திரத்தில் இரண்டு பாட்டுக்கள் கிடைத்தன:—

''உண்டு, நரக சுவர்க்கத்தி லுள்ளன
கண்டு, விடும் சூக்கங், காரணமாச் செல்லப்
பண்டு தொடரப் பரகாய யோகி போல்
பிண்ட மெடுக்கும் பிறப்பு இறப்பு எய்தியே''

திருமந்திரம்-2133.

இதன் பொருள்:— நரகமென்னும் இருள் உலகத்திலும், சுவர்க்கம் என்னும் அருள் உலகத்திலும் உள்ளனவற்றை, அறிந்து அனுபவித்து, சூக்குமசரீரத்தை விடும். பின்னர் (அணுப் பிரமாணமுள்ள) காரண சரீரத்தோடு செல்ல, நல் வினை தீவினையாகிய இரண்டும் அதனேடு தொடர, மற்ெருரு உடலில் புகுந்து தொழிற்படுத்துகிற, பரகாயப்பிரவேசம் செய்யும் யோகிகள் போல, மற்ெருரு பிண்ட சரீரமெடுத்து பிறப்பு இறப்பு எய்தும் என்பதாகும்.

''தான் அவனுகிய தற்பரம் தாங்கினேன்
ஆனவை மாற்றி பரமத் தடைந்திடும்
ஏனைஉயிர், வினைக்கெய்து மிடம் சென்றும்
வானும், நிலனும், புகுந்தும் வருந்துமே''

திருமந்திரம்-2134.

இதன் பொருள்:— "தான், ஆண்டவனுடைய தெய்வத் தன்மையைத் தாங்கத் தலைப்பட்டபொழுது, மனிதத் தன்மை மாற்றப்பெற்று, மோட்சத் தன்மை அடைந்திடுவான். மற்றைய ஜீவர்களெல்லாம், அவரவருடைய வினைகளுக்கேற்ற இடங்களாகிய வானுலகமும், நில உலகமும், புகுந்து இன்ப துன்பங்களை அனுபவிக்கும்" என்பதாகும்.

இவற்றிலிருந்து, இகலோக வாழ்விலிருந்து நாம் பரலோக வாழ்வுபெற்று வாழ்கின்ற தன்மையும், அங்கிருந்து திரும்பவும் இப்பூலோகத்தில் பிறக்கின்றவர்களின் தன்மையும், பிறவியற்று மேல் பதவியடைகின்றவர்களின் தன்மையும், நன்கு விளங்குமென்று கருதுகின்றோம்.

**42. ஆவிஉடல் வளர்ச்சியே தூல உடல்வளர்வதற்கு ஆதாரமாயிருத்தலும், தூலஉடலிலுள்ள சூடும் வலிமையும் ஆவிஉடலுக்குரிய சூட்டையும் வலிமையையும் பொறுத்ததே என்ற உண்மையும்.**

பிறந்த ஐந்தாம் நாள் இறந்துபோன குழந்தை, 9-வருஷங்கள் கழிந்தபின் 9வயதுக் குழந்தையாக ஆவி உலகத்தில், ஆவி உடலுடன் வசிப்பதாக அறிவிக்கப் பெற்றது. அந்த அறிவிப்பே, ஆவி உலகத்திலுள்ள ஆவி உடல், வளர்ந்து வருகிறதென்பதை, முதன் முறையாக உணரச் செய்து, அது பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடச் செய்ததாகும். உயிர் உருவமில்லாதது; புகுக்கப்பெற்ற உடல் முழுதும் வியாபித்திருப்பது; ஆனல் ஆவி உடல் உருவமும், சாயலும், நிறமும், அவயவங்களும் கொண்டு தொழிற்படுகின்ற தன்மையுடையது என்று, முன்னரேயே விளக்கியிருக்கிறோம்.

பொதுவாக பெரும்பாலோர், தூல உடல் வளருகிறதிலிருந்தே ஆவி உடலின் வளர்ச்சியும் பிற உறுப்புகளின் வளர்ச்சிகளும் ஏற்படக் கூடுமென்று கருதியிருக்கின்றனர்.

ஆனால் உண்மையை உற்று நோக்குமிடத்து, கனவு காணு கின்ற ஆவி உடல் வளர்ச்சியடைய வளர்ச்சியடையத்தான் அதனோடு சம்பந்தப்பட்ட தூல உடல் வளர்ச்சி அடை கிறது. ஆவி உடல் பிரிந்துவிட்டால், தூல உடலிலுள்ள நாற்றத்தை, ஓரளவு போக்கிக்கொண்டிருந்த அதன் சூடு தணிந்து, நேரம் செல்லச்செல்ல, அது பக்கத்தில் வைத்திருக்க முடியாத பாண்டமாகி விடுகிறது. இதிலிருந்து, தூலஉடலி லுள்ள (98.4 டிகிரி) சூடு (temperature) ஆவி உடலி லுள்ள சூட்டினால் உண்டாகிறதே தவிர, தூல உடலுக்கு தனித்த முறையில் சூடு கிடையாது என்பது தெளிவாகும்.

அல்லாமலும் சூரிய உஷ்ணத்தால் ஏற்படுகின்ற வெளியிலுள்ள சூடு ஆப்ரிக்கா போன்ற இடங்களில் 120 டிகிரிக்கு மேலும், வடதுருவம் தென்துருவம் போன்ற பனிக்கட்டியுள்ள இடங்களில், 0 டிகிரியிலிருந்து 30 டிகிரி வரை பலதரப்பட்டு இருந்தாலும், உலகத்தில் வாழுகின்ற எந்த மனிதனுக்கும், மிருகத்திற்கும், பறவைக்கும், உடம் பின் சூடு, எல்லா இடங்களிலும் 98.4 டிகிரி இருக்கிறது என்ற உண்மைக்கு, மனித வைத்தியர்களும் மிருக வைத்தி யர்களும் சான்று தருவார்கள். அதற்குக் காரணம், ஆவி உடல்களிலுள்ள 98.4 டிகிரிச் சூடானது, வெளியேயுள்ள சீதோஷ்ண நிலை வேறுபாட்டால், பாதிக்கப்படாத தன்மை யுடையது என்பது ஒன்று; அவ்விதம் பாதிக்கப்படாத தன்மையுடைய ஆவி உடலானது, தூலஉடலினுள்ளே இருக்கும்வரை, தன்னுடைய இயல்பான சூட்டை, தூல உடலுக்குக் கொடுத்துக்கொண்டே இருக்கும் தன்மை யுடையதென்பது மற்றொன்று.

அல்லாமலும், நம் எல்லோருக்கும் உள்ள சாமர்த்திய மும், தைரியமும், வலிமையும், தூல உடலில் உள்ளது போலத் தோன்றினாலும், உண்மையில் நமக்குரிய தைரிய மும் சாமர்த்தியமும் வலிமையும் ஆவி உடலிலேயே அமைந்திருக்கின்றன என்பதை அறிந்து கொள்ளவேண்

டும். ஒரு மோட்டார் வண்டியின் சக்தியும், வேகமும், அதை இயக்குகின்ற இயந்திரத்திலுள்ள குதிரைப்பவரின் (Horse power) கூடுதல் குறைவைப் பொறுத்ததேயல்லாமல், வெளியிலிருக்கின்ற "பாடி" (Body) என்கிற மேல் அமைப்பைப் பொறுத்ததல்ல, என்பதை யாவரும் ஒப்புக்கொள்ளுவர். இயக்குகிற இயந்திரத்தின் வலிமையைத் தாங்கக்கூடிய முறையில், வண்டிகளின் வெளியமைப்புக்கள் செய்யப் பெறுவதையும் யாவரும் அறிவர்.

ஒரு குதிரை வண்டியோ, மாட்டுவண்டியோ துச் செல்லும் பாரமும் ஓடும் வேகமும், அந்தந்த வண்டியில் பூட்டப் பெற்றிருக்கும் குதிரையின் அல்லது மாட்டின், திறமையைப் பொறுத்ததே அல்லாமல், வெற்று வண்டியைப் பொறுத்ததல்ல அல்லவா? அதுபோல நம்முடைய தைரியமும், வலிமையும் நம்முடைய வெளி உடம்பாகிய தூல உடம்பைப் பொறுத்ததல்ல; அதை இயக்குகின்ற ஆவி உடலிலுள்ள ஆற்றலையும், வலிமையையும் பொறுத்ததேயாகும் என்பதை நம் முன்னோர் அறிந்திருந்தனர். அதனாலேயே ஒருவனுக்கு ஒரு சாமானைத் தூக்கமுடியாவிட்டால் "ஏன் அப்பா அதைத் தூக்கக்கூட உனக்கு ஆவி இல்லையா?" என்று கேட்கின்ற தன்மை, இன்றும் நடைமுறையில், காரணம் விளங்கியோ, விளங்காமலோ, பழக்கத்தில் இருந்துவருகிறது.

ஒருவன் களைப்பின் காரணமாகப் படுத்திருக்கும் பொழுது, இன்னொரு வேலையைச் செய்யும்படி சொன்னால் "நான் ஆவியற்றுக் கிடக்கிறேன் என்னால் முடியாது" என்கிறான். ஒருவனுக்கு நடக்க முடியாத உடல் நடுக்கமும் தடுமாற்றமும் ஏற்படும் பொழுது, தனக்கு "ஆவி சோர்கின்றது" என்கிறான். ஆவி சோர்ந்தால், தூல உடலும் சோர்ந்து, நிலத்தில் நிற்கவும் முடியாதநிலை ஏற்பட்டு விடுகிறதைப் பார்க்கிறோம். இவற்றின் உண்மையை அறிந்த

வர்களே, மரணம் ஏற்பட்ட பொழுது "ஆவி பிரிந்துவிட்டது" என்று கூறுகிறார்கள்.

ஆவி உடலினுள்ளேயே உயிர் தங்கியிருக்கிறதென்பதை முற்பகுதியில் விளக்கியிருக்கிறோம். அதனாலேயே மாணிக்கவாசகரும் "அன்றே என்றன் (உயிரின்) ஆவியும், உடலும் உடைமை யெல்லாமும்" என்று உயிர் பெற்றிருக்கும் ஆவி உடலையும், தூல உடலையும், பிரித்து ஓதியிருக்கிறார்.

அப்பர் பெருமானும் "உருவாகி என்னைப் படைத்தாய் போற்றி, உள் ஆவி வாங்கி ஒளித்தாய் போற்றி" என்று கூறுகிறார். இதில் உருவாகி என்பது தூல உடலையும், என்னை என்பது உயிரினையும், உள் ஆவி என்பது ஆவிஉடலையும், வாங்கி ஒளித்தாய் என்பது ஆவி உடலைப் பிரித்துக்கொண்டுபோய், (வானுலகில்) மறைத்தாய் என்பதையும் குறிக்கும்.

மேலும் மணிவாசகர் கோயில் திருப்பதிகத்தில் "அன்பினால் அடியேன் ஆவியோடு ஆக்கை ஆனந்தமாய்க் கசிந்து உருக, என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்" என்கிறார். இதில் அன்பினால் தனது (உயிரினது) ஆவிஉடல் ஆனந்தமாய்க் கசிந்துருகவே, அதனோடு ஆக்கையாகிய தூல உடலும் ஆனந்தமாய்க் கசிந்துருகுகின்ற தன்மையை விளக்கியிருக்கிறார். அடுத்தபடியாக "அரைசனே அன்பர்க்கு அடியனேனுடைய அப்பனே, ஆவியோடு ஆக்கை புரை புரை கனியப் புகுந்து நின்றுருக்கிப் பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே" என்கிறார். இதிலும் தன்னுடைய ஆவி உடலின் ஒவ்வொரு துவாரமும் குழையும்படி புகுந்து நின்றுருகவே, அதனோடு ஆக்கையாகிய தூல உடலின் ஒவ்வொரு துவாரமும், குழைந்து நின்று உருகுகின்ற தன்மையை விளக்கியிருக்கிறார்.

திருச்சதகம் 40-வது பாடலில் "ஊனில் ஆவியை ஓம்புதற் பொருட்டினும் உண்டு உடுத்து இருந்தேன்" என்கிருர். இதில் நாம் உணவு உண்பதில், அவ்வுணவி லுள்ள சத்துக்களின் கிரகிப்பால், ஆவி உடல் ஓம்பப் பெறுவதும், ஆவி உடல் ஓம்பப்பெறவே ஊனுடம்பு ஓம் பப் பெறுகிறதென்பதும், நாம் உண்டு உடுத்து இருப்ப தெல்லாம் ஆவி உடலைப் பேணிக்கொள்வதற்காகவே என் பதும், தெளிவாகக் கூறியிருக்கிருர். ஔவைப் பிராட்டி யாரும்:—

"பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்து
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டு இங்கு
ஆவிதான் போயினபின்பு யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்" என்கிருள்.

இதில் முக்கியமாக, தூல உடலைக் கூடு என்றும், அதி லிருந்து ஒருவருடைய ஆவி பிரிந்து போயின பின்பு, அவர் பாடுபட்டுத் தேடிய பணத்தை அனுபவிக்க முடியாதென் றும், அனுபவிப்பும் இன்பதுன்பமும், ஆவி உடலிற் குரியதே என்றும் அறிவிக்கிருள்.

முற்றத் துறந்த பட்டினத்தடிகள்:—

"ஆவியோடு காயம் அழிந்தாலும் மேதினியில்
பாவியென்ற நாமம் படையாதே—மேவியசீர்
வித்தாரமும் கடம்பும் வேண்டாம் மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி" என்கிருர்.

இதில் முக்கியமாக, உயிர் என்றும் அழியாததாக இருந்தாலும், அது தங்கியிருக்கிற ஆவி உடலும், காயம் என்று சொல்லுகிற தூல உடலும், அழியும் தன்மையது என்று தெரிவிக்கிருர்.

திருநாவுக்கரசர் "ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெல்லாம் நான் நிலாவி இருப்பன் என்நாதனை" என்கிறார். இதில் "ஊனுடம்பாகிய தூல உடலில் ஆவி உடல் மூச்சு விட்டுக் கொண்டிருக்கும் பொழுதெல்லாம், நான் என் நாதனாகிய ஆண்டவனுடைய கீர்த்தியைப் பரப்பிக்கொண்டிருப்பேன்" என்று மூச்சுவிடுவதற்கு ஆதாரமாயிருப்பது ஆவி உடல் என்கிறார். மேலும் "ஐயினால் மிடறு அடைப்புண்டு ஆக்கை விட்டு, ஆவியார் போவதுமே, அகத்தார் கூடி, மையினால் கண்ணெழுதி மாலை சூட்டி மயானத்தில் இடுவதன் முன் மதியம் சூடும் ஐயனார்க்கு ஆளாகி" என்கிறார்.

இதிலும் (சிலேற்பன நிலையில்) கோழை தொண்டையை அடைத்துக்கொள்ள, ஆக்கையாகிய தூல உடலை விட்டு, ஆவி உடலார் பிரிந்து போகவே, வீட்டிலுள்ளவர்கள் கூடி மையினால் கண்ணெழுதி, மாலை சூட்டி, கட்டையை மயானத்திலிடுவதற்கு முன்னரே, ஆண்டவனுக்கு ஆட்படவேண்டுமென்று, ஆவி உடல் தூல உடலைவிட்டுப் பிரிந்துபோவதை விவரித்திருக்கிறார். இன்னும் பல மேற்கோள்கள் இருக்கின்றன. விரிவு அஞ்சி அமைகின்றோம்.

பெரிய புராணத்தில், திருஞான சம்பந்த சுவாமிகள் பூம்பாவையை மண்குடத்திலிருந்து வருவித்தபோது, இறந்தபொழுது இருந்த வயதிலும் வடிவிலும் வராமல், எத்தனை வருஷங்கள் கழித்து வரவழைத்தாரோ, அத்தனை வருடங்களுக்குரிய வளர்ச்சியுடன் தோன்றினாள் என்பதும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலையுண்ட பாலனை வருவித்த போதும், அப்பாலகன், இறந்து சென்ற ஆண்டுகளுக்குரிய வளர்ச்சியோடு வந்தான் என்பதும், ஆவியுடல் வளர்ந்து கொண்டிருக்கும் தன்மையது என்று நாம் உணர்ந்து கொள்ள, போதிய சான்றுகளாகும்.

தூல உடலை ஆவி உடல் இயக்குவதற்கும், ஆவி உடலை உருவமில்லாத ஜீவான்மா இயக்குவதற்கும், எல்லோருக்கும் விளங்கக்கூடிய ஒரு உதாரணம் கூறலாம். எல்லோருக்கும் காற்று அடைத்து விளையாடுகின்ற கால் பந்து (Foot ball) துள்ளுகிற தன்மையுடையது என்பது தெரியும். காற்று அடைத்து ஓடும் மோட்டார் டயர் (Motor tyre) கார் வேகமாக ஓடும் பொழுது, ரோடிகளில் நமக்கு அதிகமான அசைவு ஏற்படாமல், துள்ளித் தாங்கிக்கொள்வதும் தெரியும்.

பந்திலும், டயரிலும், மூன்று பொருள்கள் உண்டு. மேலே தெரிகிற கடினமான கவர் ஒன்று, உள்ளே இருக்கின்ற விரிந்துகொடுக்கும் தன்மையுடைய ரப்பர் பிளாடர் (Bladder) ஒன்று, அதனுள் அடைக்கப்படுகின்ற காற்று ஒன்று. காற்று இல்லாவிட்டால், உள்ளிருக்கும் பிளாடர் விரியவும், சுருங்கவும், துள்ளவும் முடியாது. காற்று அடைத்த பிளாடர் உள்ளே இல்லாவிட்டால், கவர் வட்டமாகவும், விறைப்பாகவும் இருக்கவோ, துள்ளும் தன்மையைப் பெறவோ முடியாது. ஆனால் மேலே உள்ள கவருக்கு, துள்ளுந் தன்மையும் விறைப்பும் எதைப் பொருத்திருக்கிறது? என்றால், அது உள்ளே இருக்கும் பிளாடரின் தன்மையைப் பொருத்தே இருக்கிறது. இனி பிளாடரின் தன்மையோ, அதனுள்ளிருக்கும் காற்றைப் பொருத்திருக்கிறது.

காற்று மேலே இருக்கும் கவரை நேராகத் தொழிற்படுத்தாமல், உள்ளே இருக்கும் பிளாடரைத் தொழிற்படுத்தி, அதன் மூலமாக மேலே இருக்கும் கவரைத் தொழிற்படுத்துவது போலவே, நமது ஜீவான்மாவும், தூல உடம்பை நேரே தொழிற்படுத்தாமல், உள்ளிருக்கும் ஆவி உடலைத் தொழிற்படுத்தி, அதன் மூலமாகவே தூல உடலைத் தொழிற்படுத்துகிறது.

கல்வியறிவு உடையவர்கள், மின்சார சக்தியினால் (Electricity) தொழிற்படுகின்ற எந்தக் கருவியை எடுத்துக்கொண்டாலும், அந்த மின்சார சக்தி, உள்ளே இருக்கின்ற செம்புக் கம்பியினால் செய்யப்பட்ட 'காயில்' (Coil) என்று கூறப்படும் உட்கருவியாகிய இயந்திரம் ஒன்றை இயக்கி, அதன் மூலமாகவே வெளியேயிருக்கும் கைகளையோ, கருவிகளையோ, தொழிற்படும்படி செய்கின்றதென்பதை அறிவார்கள்.

அதேபோல, அறிவித்தால் அறியும் தன்மையும், அறிவின் பக்குவத்திற்கேற்ப ஒன்றில் விருப்பும், ஒன்றில் வெறுப்பும் கொள்ளுகின்ற குணமும், தகுந்த உடம்பு கிடைத்தால் அதை இயக்கும் ஆற்றலும் உடைய ஜீவான்மா, சொப்பனத்தில் தொழிற்படுகின்ற ஆவி உடம்பின் அவயவங்களை இயக்கியே, அந்த உடலோடு இணைக்கப்பட்டிருக்கும் தூல உடம்பின் அவயவங்களைத் தொழிற்படுத்துகின்றது. அப்படிப்பட்ட ஆவி உடல் இவ்வுலகிலுள்ள ஆயுதங்களாலும் குண்டுகளாலும், நெருப்பாலும், இடியாலும், நீராலும் மற்றும் எதனாலும் அழிக்கப்பட முடியாத தன்மையில் அமைந்திருக்கிறதென்பதை முன்னரே விளக்கிக் கூறியிருக்கிறோம்.

## 43. உலகத்திற்கு முதற்காரணமாயுள்ள மாயையினாலேயே ஆவிஉடல் ஆக்கப்பட்டிருக்கிற உண்மை.

இந்த உலகம் மாயையிலிருந்து உண்டாக்கப் பெற்றதென்றும், மாயையிலிருந்து தோன்றி, மாயையிலேயே ஒடுங்குகிறதென்றும் சாத்திரங்கள் சொல்லுகின்றன. அதேபோல, நம்முடைய ஆவி உடம்பும் மாயையிலிருந்து தோன்றி, மாயையிலேயே ஒடுங்குகின்றதாகச் சொல்லப் பெறுகின்றது. மாயை என்பது கண்ணுக்குத் தெரியாத நுண்மையும், ஐம்பூதங்களாலும் அழிக்கப்படாத தன்மையும் உடைய, சூக்குமமான உள்பொருள் என்றும், சொல்லப்பெறுகின்றது.

தூல உடலையும் தூலமான இவ்வுலகத்தையும் பார்ப்பதற்கு, தூலக்கண்கள் கொண்டு காண்பதுபோல, மாயையினால் ஆக்கப்பட்ட ஆவி உடலையும் ஆவி உலகத்தையும், ஆவி உடலிலுள்ள கண்கள் கொண்டு நாம் காணக்கூடியதாகவே ஆண்டவன் அமைத்திருக்கிறான் என்பது, எமது ஆராய்ச்சியால் கண்ட உண்மையாகும். நமது ஆவி உடலையும், அது தொழிற்படுகின்ற உலகத்தையும், அனுபவிக்கின்ற பொருள்களையும் நாம் அவரவருடைய சொப்பன நிகழ்ச்சியில் நன்ருகக் காண்கிரேம். கனவில் காணப்படுகின்ற உடலும், உலகமும், சாமான்களும் எந்தப் பொருளைக் கொண்டு, ஆண்டவன் உண்டாக்கி இருக்கிருனே, அதுவே மாயை என்று சொல்லப்பெறுகின்ற பொருள் என்பதும், அதன் பரிணுமமே, நமது தூல உடலும், தூல உலகமும், தூலப் பொருள்களும் என்பதுமே, இந்த ஆராய்ச்சியினுல் ஏற்படும் முடிந்த முடிவாகும்.

அதனுலேயே, சித்தாந்த சாத்திரங்களில் முதன்மையான சிவஞானபோதம் என்ற நூலின், மூன்ருவது சூத்திரத்தில்,

"உளது இலது என்றலின், எனது உடல் என்றலின்,
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின், கண்படில்
உண்டிவினை இன்மையின், உணர்த்த உணர்தலின்,
மாயா இயந்திர தநுவினுள் ஆன்மா"

என்று மெய்கண்டதேவர் அருளியிருக்கிருர் என்பது எமது கருத்து. இந்தச் சூத்திரத்தில், மாயை என்பதோர் பொருளால், செய்யப்பெற்ற இயந்திரமாகிய ஆவி உடலினுள்ளே ஜீவான்மா என்ற ஒன்று உண்டு என்பதைக் காரண காரியங்களால் நிரூபித்திருக்கிருர்.

இவற்றிலிருந்து ஒருவருக்குத் தூல உடம்பிலுள்ள ஊக்கமும், சோர்வும், வலிமையுடைமையும், வலிமையின்

மையும், வளர்ச்சியும், பிறதன்மைகளும் உள்ளிருக்கும் ஆவி உடலில் உண்டாவதின் பிரதிபலிப்பே என்பதையும், உயிர் தூல உடலை நேரே இயக்காமல் ஆவி உடலை இயக்கியே தூல உடலை இயங்கும்படி செய்கின்றது என்பதையும், நாம் நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

**44. இறந்தவர்களில் நாம் ஒருவரை அழைக்க, இன்னொருவர் வலியவந்து பேசுவதைத் தடுப்பதற்குரிய உபாயம்.**

ஒருநாள் எமது பூர்வாஸ்ரமத் தமையனார் திரு V. உலகநாதபிள்ளை அவர்கள் புகளூரில் சீனி ஆலையின் மேலாளாக இருந்தபொழுது, அவர்களைப் பார்க்க வேண்டுமென்றும், அவர்கள் இறந்தவர்களோடு பேசுவதைப் பார்க்க வேண்டுமென்றும், தானும் இரண்டொரு சுற்றத்தாரோடு பேசிப் பார்க்கவேண்டுமென்றும், நாங்குநேரியிலிருந்து ஒரு அன்பர் வந்திருந்தார்.

இரவு மணி 9-க்கு மேல் பேசத் தொடங்கினார்கள். வழமையாக எங்களுடைய ஆவி உலகச் சுற்றத்தார்களுக்கு நமஸ்காரம் சொல்லி, அவர்களை வரவழைத்துக்கொண்டே, அவர்கள் மூலம், பிற ஆவி உலகத்தவர்களை அழைத்துப் பேசுவோம். அதேபோல அன்றும், இறந்திருந்த தந்தையார் அவர்களுக்கும், மற்றைய உறவினர்களுக்கும், நமஸ்காரஞ் சொல்லவே, அவர்களும் நமஸ்காரம் என்று சொல்லுகின்ற முறையில் பதில் வரவில்லை. "Good night Sirs God abiding people" என்று ஆங்கிலத்தில் "கடவுளை மனதில் உறைவிடமாகக் கொண்ட உங்களுக்கு நல் இரவு ஆகுக" என்று பொருள் படும்படியாகப் பதில்வந்தது.

ஆங்கிலத்தில் பதில் வந்தபடியால் ஆங்கிலத்தில் "who is speaking" "பேசுகின்றது யார்" என்று கேட்டபொழுது "S. S. speaking" "S. S. பேசுகின்றேன்"

என்ற பதில் கிடைத்தது. S. S. என்றால் யார் என்று ஆங்கிலத்தில் கேட்டபொழுது "selfless servant of God" "தன்னலமற்ற கடவுளின் ஏவலாளன்" என்று பதில் வந்தது. உம்முடைய பெயர் என்ன? என்று ஆங்கிலத்திலேயே பேச ஆரம்பித்த உடன் "My name is Rash Bihari Ghosh" தன்பெயர் "ராஷ் பீஹாரிகோஷ்" என்றும், தான் ஒரு வங்காள தேசத்தவன் என்றும், 8 வருஷங்களுக்கு முன், தான் இறந்துபோனதாகவும், ஆவி உலகத்தவர்களோடு பேசும் தொடர்பு வைத்துப் பேசிக்கொண்டிருப்பது, தனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுப்பதாகவும், ஆவி உலகத்திலிருக்கப்பட்டவர்களில் பலர் பூலோகத்தாரோடு தொடர்பு கொண்டு, தாங்கள் சாகாமல் உயிரோடு அங்கு நடத்திக்கொண்டிருக்கின்ற வாழ்க்கையைப்பற்றி, அறிவிக்க ஆத்திரமுள்ளவர்களாகயிருப்பதாகவும், தானும் அவ்வித ஆத்திரங்கொண்ட காரணத்தினல், பேசுவதற்கு வாய்ப்புக் கிடைத்தவுடன், தான் பேசுவதற்கு முன்வந்திருப்பதாகவும் சொன்னர்.

இந்த மாதிரியான அனுபவம், அதற்குமுன் ஏற்படாத காரணத்தால், எப்படி அவரோடு பேசி, அவரைச் சமாதானப்படுத்தி, மேற்கொண்டு நம்முடைய சுற்றத்தாருடன் பேசவேண்டுமென்பது தெரியாதிருந்தது. ஆதலால் நாங்கள் உங்களோடு பேசவேண்டியதில்லை. நாங்கள் எங்கள் தந்தையாருடன் பேசவேண்டும் என்று சொன்ன பொழுது, நீங்கள் எந்தநேரமும் உங்கள் தந்தையாருடனும் சுற்றத்தாருடனும்தானே பேசிக்கொண்டிருக்கிறீர்கள், என்னுடன் பேசினல் என்ன? உங்களுக்கு என்னிடம் பேச விருப்பமில்லாவிட்டாலும், எனக்கு பக்தியுள்ளம் கொண்ட உங்களிடத்தில் பேச மிகுந்த விருப்பம் ஏற்பட்டிருக்கிறது. ஆனதால் என்னிடம் பேசிவிட்டு உங்கள் தந்தையாருடன் பேசலாமே என்று சொன்னர்.

நாங்குநேரியிலிருந்து வந்த அன்பர், ஆவி உலகத்தி லிருந்த தந்தையாரைத் தெரிந்தவர் ஆனதினாலும், அதற் கென்றே வெகுதூரத்திலிருந்து வந்திருந்த காரணத்தினாலும், அவரைத் தந்தையாருடன் சுணக்கமின்றி பேசச்செய்ய வேண்டுமென்ற ஆத்திரம் காரணமாக, தமையனாருக்குக் கோபம் வரவே, "நாங்கள் மேல் நிலையிலிருக்கிற தந்தையா ருடன் பேசவேண்டுமென்று அவர்களுக்கு நமஸ்காரம் சொல்லியிருக்க, நீர் ஏனையா அழைப்பு ஒன்றும் இல்லா மலே ஆஜராகி, எங்கள் பேச்சுக்கு இடையூருகக் குறுக்கே நின்றுகொண்டு, என்னுடன் பேசுங்கள் என்கிறீர்? உம்மி டம் எங்களுக்கு ஒரு அலுவலும் இல்லை; உம்முடன் நாங் கள் பேசவேண்டியதில்லை; நீர் போகலாம்" என்று தமைய ஞர் சொல்லவே, அவர் சாந்தமாக "Respected Sirs, don't get annoyed" "மதிப்பிற்குரிய ஐயா வருத்தம் கொள்ளாதீர்கள்" என்று பதில் சொல்லவே, தமையனு ருக்கு இன்னும் கோபம் அதிகரித்துவிட்டது.

"You damn Fool. we don't want to speak to you, get away" "ஏ! அடிமுட்டாளே! நாங்கள் உம்மு டன் பேசவேண்டியதில்லை. வெளியே போம்" என்று சொல்லவும், அவர் "Hold your tongue, don't get upset" "நாவை அடக்குதல் வேண்டும், தடுமாற்றம் கொள்ளக்கூடாது" என்று பதில் அளித்தார். தமையனு ருக்கு அது இன்னும் கோபத்தை உண்டாக்கவே, தாறு மாருக வைய ஆரம்பித்துவிட்டார்கள். அதற்கு அவர், நாவை அடக்குதல் வேண்டும் என்று திரும்பவும் சொல்லி, என்னுடன் பேசினாலன்றி, உங்களுடைய தந்தையாருடன் பேச விடமாட்டேன் என்ருர்.

அது கேட்ட தமையனுர், "நாங்கள் ஐந்து இடங்களில் ஒரே நேரத்தில் பேசினால், நீர் என்ன செய்ய முடியும்; உம் முடன் பேச எங்களுக்கு விருப்பம் இல்லை; நீர் போய்விட லாம்" என்ருர்கள். அதற்கு அவர் "நீங்கள் ஐந்து இடங்

களில் ஒரே நேரத்தில் வைத்தால் என்ன செய்யமுடியுமென்றல்லவா கேட்கிறீர்கள்? ஐந்நூறு இடங்களில் வைத்துப் பாருங்கள்; நாங்கள் இவ்விடம் ஆயிரக்கணக்கான பேர்கள் இருக்கிறோம்; நாங்கள் விரும்பினால், ஒரு இடத்திலும் உங்கள் தந்தையாரோடு பேசவிடாமல் செய்துவிட முடியும்; ஆனால் நாங்கள் அப்படிச்செய்ய விரும்புவதில்லை; நீங்கள் ஆவி உலகத்தாரோடு வைத்திருக்கிற அபிமானத்தைப் பெரிதாக மதித்தே, நான் உங்களுடன் பேசவேண்டுமென்று விரும்பி வந்தேன்; நான் உங்களுக்கு எவ்வளவோ விஷயங்கள் சொல்லவும், இயன்ற அளவு உதவி புரியவுமே கருதியிருக்கிறேன்; ஆனதால் என்னுடன் கொஞ்சம் பேசிவிட்டு, அதன் பின்னர் உங்கள் தந்தையாருடன் பேசலாமே" என்றார்.

தலைமயனார் அவர்களுக்கு இது ஒரு புது அனுபவமானதாலும், தந்தையார் ஆவி உலகத்தில் நல்ல மேலான நிலையில் இருந்த காரணத்தாலும், அவர்களைப் பேசவிடாமல் தடுப்பதற்கு, வேறொருவராலும் முடியாதென்று கருதி, அவருடன் பேச மறுத்துவிட்டு, அன்றைய பேச்சை அத்தோடு நிறுத்திக்கொண்டு, மறுநாள் இரவு திரும்பவும் பேச ஆரம்பித்தார்கள். அப்பொழுதும் "S. S. Speaking" "S. S பேசுகிறேன்" என்று அவர் திரும்பவும் வந்துவிட்டார். தலைமயனார் அவருடன் பேச மறுக்க,அன்றும் பேச்சு பயனின்றிப் போய்விட்டது. நாங்குநேரியிலிருந்து வந்த அன்பர், நடந்தவற்றையெல்லாம் கவனித்துக்கொண்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்.

மூன்றாம்நாள் இரவு, வழமையாக வைக்கிற 9-மணிக்கு வைக்காமல், இரவு 12 மணிக்கு வைத்துப் பேச ஆரம்பித்தார்கள். உடனே பாப்பா என்ற குழந்தை வந்து, தலைமயனாரிடம் "S. S. என்பவர் ஒரு நல்ல மனிதர்; அவருடன் பேசும்பொழுது மரியாதையாகப் பேசவேண்டும்; அது சம்பந்தமாக விபரம் சொல்லவேண்டுமானால், நீங்கள் அம்மைய

நாயக்கனூருக்கு இப்பொழுதே புறப்பட்டுப் போய், காலை 8-மணிக்குள் தாத்தாவிடம் பேசுங்கள்; நாளைக் காலையில் 8-மணிவரை அவர் வரமாட்டார்'' என்று சொல்ல, இரவில் எப்படிப் புறப்படுவது? என்று தலைமையனூர் கேட்க, காரில் புறப்படுங்கள்; நான் கூடவே துணையாக வருகிறேன் என்று அவள் சொல்லிமுடித்ததும், "S. S பேசுகிறேன்'' என்று அவர் வந்து குறுக்கிட்டுவிட்டார்.

ஆனதினாலே பேச்சை நிறுத்திக்கொண்டு, காரில் புறப்பட்டு காலை 7-மணிக்கெல்லாம், அம்மையநாயக்கனூர் வந்து சேர்ந்தார்கள். அவ்விடம் வசித்து வந்த மூத்த தலைமையனூர் ஸ்ரீ V. K. சபாபதிபிள்ளை அவர்களிடம், நடந்த விருத்தாந்தங்களைச் சொல்லவே, அவர்களுக்கு அந்தச் சம்பவம் மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுத்ததினால், அதைப்பற்றி வாக்குவாதம் செய்யத் தொடங்கினார்கள். 8-மணிக்குள் தந்தையாரிடம் பேசும்படி அறிவித்திருந்ததால், மற்றைய காரியங்களைப் பின்னர் பார்ப்போம், முதலில் தந்தையாருடன் பேசிவிடுவோம் என்று, மேல் மாடிக்குச் சென்று பேசத் தொடங்கினார்கள்.

தந்தையார் வந்து "S. S. என்று சொல்லிக்கொள்ளுகிற "ராஷ் பிஹாரி கோஷ்'' என்பவர், ஆவி உலகத்தில் நல்ல மேல் நிலையில் இருப்பவர்தான்; ஆவி உலகத்தவரோடு பேசி உண்மையை அறிவதில், நம் குடும்பத்தார் காட்டும் ஆர்வத்தைப் பாராட்டுவதற்கே, அவர் பேசவேண்டுமென்று வந்தார்; நீ கோபங்கொண்டு அவரைத் தாறுமாருகப் பேசி வைதுவிட்டாய்; அப்படி யாரிடமும் பேசக் கூடாது; நாவடக்கம், மற்ற எல்லா அடக்கங்களையும்விட முதன்மையானது; பொதுவாக, ஆவிஉலகத்தவரோடு பேச வேண்டுமென்றால், அவரவர் வீட்டில் பூஜைசெய்கின்ற இடத்தில் வைத்துப் பேசவேண்டும்; அப்படிப் பேசினால், அந்த இடத்திற்கு அழைத்தவர்களைத் தவிர, பிற ஆவிகள் வருவது கிடையாது; வேறு இடங்களில் பேசவேண்டிய

அவசியம் ஏற்பட்டபொழுது, அவரவர் வழிபடுகின்ற முறையில் வழிபாடு செய்து ஆரம்பிக்கவேண்டும்; அப்படி ஆரம்பித்தால், பெரும்பாலும் வெற்றிகரமாகப் பேசிக் கொள்ள ஏதுவாகும்.'' என்று சொன்னார்கள்.

மேலும் அவர்கள், நாம் ஒருவரை அழைத்தபொழுது, இன்னொருவர் வந்து பேசுவாரானால், அவருடன் இனிமையான வார்த்தைகளில் பேசி, அவருக்கு என்ன சொல்ல வேண்டியதிருக்கிறதென்று கேட்டு, அவரைத் திருப்தி செய்துகொண்டால், அவர் நமக்கு வேண்டிய நண்பராகி விடுவார்; காரணமின்றி யாராவது பிடிவாதமாகத் தன்னிடமே பேசவேண்டும் என்று சொல்லுவதில்லை; அப்படி யாராவது பிடிவாதமாகப் பேசினாலோ, நாம் கூப்பிட்ட ஆவி உடலிலுள்ள நபர் வராதிருந்தாலோ, அவருடைய உருவத்தை நினைத்து மூன்று முறை கூப்பிடவேண்டும்; மூன்று முறை கூப்பிட்டு விட்டாலும் எதையும் மூன்று முறை சொல்லிவிட்டாலும் அது சத்தியம் செய்ததோடு ஒக்கும்; மூன்று முறை கூப்பிட்டால், கூப்பிடப்பட்டவர்கள் வேறு என்ன காரியம் செய்துகொண்டிருந்தாலும், அதை விட்டு விட்டு வந்து விடுவார்கள்.

நாம் அழையாமலே வந்து பேசிக்கொண்டிருப்பவரில் யாராவது, வேண்டுமென்றே பிறரைப் பேசவிடாமல் தடுத்துக்கொண்டிருந்தால், நடராஜப் பெருமானுடையபடத்தை வைத்துக் கற்பூரம்காட்டி, தோத்திரங்கள் சொல்லி, வழிபாடு செய்து வேண்டிக்கொண்டால், கூத்தப் பெருமானுடைய ஆணையால் அந்த ஆவியின் தடை உடனடியாக நீங்கப்பெறும்'' என்று அறிவித்து முடிய, மணியும் 8 ஆகி விட்டது. S. S. என்பவரும் அந்நேரம் வந்து "S. S. speaking" "S. S. பேசுகிறேன்" என்று சொல்லவும், மூத்த தமையனார் அவருடன் பேசிப்பார்ப்போம் என்று ஆரம்பித்தார்கள்.

அவர்கள் அவர்களால் இயன்ற அளவு, எவ்வளவோ நேரம் பேசியும், S. S. போவதாகவும் இல்லை, தந்தையாரை அவர் பேசவிடுவதாகவும் இல்லை. அதன் மேல் மூன்று முறை தந்தையாரைக் கூப்பிட்டுப் பார்த்தும் S. S. என்பவரின் பதிலே கிடைத்ததால், முன் அறிவித்திருந்தது போல் நடராஜர் படத்தைவைத்து, வழிபாடு செய்து வேண்டிக்கொண்டார்கள். S. S. என்பவரின் ஆவி, மேல் உலகத்திற்கு அழைத்துக்கொள்ளப்பட்டு, அவரால் ஏற்பட்ட தடை நீங்கப்பெற்று, தந்தையார் பேச ஆரம்பித்துவிட்டார்கள்.

## 45. இறைவழிபாட்டிற்குள்ள சக்தியும், சிவலிங்கத்தின் தத்துவமும் சிவபூஜையின் பெருமையும்.

புகலூரிலிருந்து வந்த தலைமயனார் இதைக் கண்ணுற்றதும், ஒரு படத்தைவைத்து வழிபாடு செய்வதற்கே இவ்வளவு சக்தி உண்டு என்றால், தினமும் காலையில் தூய்மையாகவும், முறையாகவும் சிவபூஜை செய்துவந்தால் அது எவ்வளவோ நன்மையைக் கொடுக்குமே; இவ்வளவு காலமும் நாம் சிவபூஜையை மேற்கொள்ளாமல், வீண்காலம் கழித்துவிட்டோமே என்பதை உணர்ந்து, தந்தையாரிடம் மறு சிவஇராத்திரி தினத்தன்று, தான் சிவபூஜையை மேற்கொள்ளுவதாக, உறுதி கூறினார்கள். அவ்வாறு அவர்கள் தந்தையாரிடம் சொன்னதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு.

1929-ம் வருஷத்தில் தந்தையாருக்கு அறுபதாவது ஆண்டு நிறைவு விழா வந்தது. அவர்கள் அதற்குரிய நாளைக் குறிப்பிட்டு, இலங்கையில் வியாபாரம் செய்துகொண்டிருந்த எமக்கு, எழுதியிருந்தார்கள். அதற்கு நாம் அதை சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று பதில் எழுதியிருந்தோம். தந்தையார் அதற்குப் பதில் எழுதும்பொழுது, தனக்கு “சஷ்டியப்தபூர்த்தி” மதுரையில் மீனாக்ஷிசுந்தரேசுவரர் சந்நிதியில் நடைபெறும் என்றும், தன்னுடைய ஐந்து

ஆண் மக்களும், தனது சஷ்டியப்த பூர்த்தியை சிறப்பிக்கக் கருதினால், அவர்கள் ஒவ்வொருவரும், கூடிய சீக்கிரம் சிவ பூஜையை ஏற்றுக்கொள்ளுவதாகத் தனக்கு வாக்குறுதி கொடுக்கவேண்டும் என்றும், எழுதியிருந்தார்கள்.

மேலும், அவர்கள் அவ்வித வாக்குறுதி கேட்டதற் குரிய முக்கிய காரணமாக அதில், தான் இருபத்தெட்டாவது தலைமுறையாக சிவபூஜைசெய்து, திருவருட்பேறு பெற்று, பல அரிய காரியங்களைச் செய்து முடிக்க முடிந்ததாகவும், அந்தச் சீரிய தொடர்பு விட்டுப் போகக்கூடாது என்பதாக வும், குறிப்பிட்டிருந்தார்கள். அந்தக் கடிதத்தைப் பார்த்த தும், அவர்களுடைய விருப்பப்படியே நாம் மறுமுறை இந்தியாவிற்கு வரும் பொழுது, சிவபூஜையை ஏற்றுக் கொள்ளுவதாக வாக்குறுதி கொடுத்து எழுதிவிட்டோம்.

அதன்படி, மறுமுறை இந்தியாவிற்கு வந்திருந்த பொழுது, நாம் சிவபூஜை ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருக் கிற விபரத்தைத் தந்தையாரிடம் தெரிவித்தோம். அப்பொ ழுது அவர்கள், எமது மூத்த சகோதரர் இருவரிடமும் அவரவர்களுடைய கருத்தைக் கேட்டபொழுது, முதல் சகோதரர் தனக்கு உடல் நலமில்லை யென்பதாகவும் அதற்கு மருந்தாக, அதிகாலையில் நீத்தண்ணீரும், காலை வேளையிலும் இரவிலும் பழையது சாப்பிட வேண்டியதிருப்பதாகவும், சிவபூஜைக்கு வேண்டிய ஆசாரத்திற்கும், தனது உடல் நிலைக்கும், அவ்வளவு பொருத்தமாகத் தெரியவில்லை யென் றும், அதற்கு மேல் தந்தையார் எப்படிச் சொன்னாலும் அதன்படி செய்யச் சித்தமாக யிருப்பதாகவும், சொல்லி விட்டார்கள்.

அதற்குத் தந்தையார், அவர்கள் நீத்தண்ணீர் குடிப்ப தும், பழையது சாப்பிடுவதும் சிவபூசைக்கு இடையூறாக மாட்டாது. பண்டைய வைதீக மக்கள் அனைவரும், தென்னாட்டிலே காலையிலும் இரவிலும் பழையது சாப்

பிட்டு வந்தவர்களே என்றும், திருவருள் சம்மதம் எப்படியென்று, தான் கவனித்துச் சொல்லுவதாகவும் சொல்லி, திருவிளையாடற் புராணத்தில் திருக்கயிறு சாற்றினார்கள். அதன் பிறகு, அதில் நல்ல உத்திரவு கிடைத்திருக்கிறது என்றும், ஆனதால் சிவபூஜையை ஏற்றுக்கொள்ளலாமென்றும் தந்தையார் கூறவே, மூத்த தமையனார் அவர்களும் அதற்கு சம்மதித்துவிட்டார்கள்.

ஆனால் மேலே குறிப்பிட்ட இரண்டாவது சகோதரராகிய உலகநாத பிள்ளை அவர்களிடம் தந்தையார் கேட்டபொழுது, அவர்கள் நீங்கள் எல்லோரும் பூஜை மணி அடித்தால் அதற்கு உதவிசெய்ய, ஒருவராவது பணம் என்ற (Money) 'மணி' அடிக்கவேண்டாமா? பணம் சம்பாதிப்பதில் ஈடுபடவேண்டாமா? ஆனதால், தாம் நிம்மதியாகப் பூஜை செய்வதற்குத் தேவையான பொருளை ஈட்டிய பிறகே, சிவபூஜை ஏற்கமுடியுமென்றார்கள்.

அதற்குத் தந்தையார், மனம் நிம்மதியுண்டான பிறகு என்றும், தேவையான பணம் ஈட்டிய பிறகு என்றும் சொல்வது, கடலிலுள்ள அலை நின்ற பிறகு செல்கிறேன் என்று சொல்வதை ஒக்கும்; ஒருவன் எவ்வளவு பணத்தைத் தேடிக்கொண்டாலும், தேவையான அளவு பெற்றுவிட்டேன்; போதும் என்று சொல்லப்போவதும் கிடையாது; எவ்வளவு பணம் படைத்தவர்களும், மனம் நிம்மதி அடைந்துவிடவும் முடியாது; உண்மையான மன நிம்மதி உண்டாகவேண்டுமென்றால், உண்மையாகவே ஈட்டியது போதுமென்ற எண்ணம் ஒருவனுக்கு உண்டாக வேண்டுமென்றால், அது பற்றற்ற பரம்பொருளைப் பற்றுவதாகிய, சிவபூஜையினால்தான் ஏற்படமுடியுமே தவிர, வேறு எதனாலும் ஏற்படமுடியாது; நீ நினைக்கின்ற அளவு பணம் சம்பாதிக்கும்வரை, நீயே வாழ்ந்திருப்பாய் என்பதுதான் என்ன நிச்சயம்? என்று கேட்டார்கள்.

அதற்குத் தமையனார், அதுவரை நான் வாழ்ந்து இருக்காவிட்டால், அடுத்த ஜென்மத்தில்தான் பார்த்துக் கொள்ளவேண்டுமென்று பதில் அளித்தார்கள். அதற்குத் தந்தையார், ஓரளவு பணம் சம்பாதித்த பிறகாவது, நீ சிவ பூஜை செய்வதாக வாக்குறுதி கொடு என்றார்கள். தமையனாரும் "சரி அந்தப்படியே செய்கிறேன்" என்று வாக்குக் கொடுத்தார்கள்.

ஆனதால் நாமும், மூத்த அண்ணாவும் மாத்திரமே அவ்வருஷத்திய, மகா சிவராத்திரி தினத்திலே, சிவபூஜையை ஏற்றுக் கொண்டோம். இரண்டாவது சகோதரர் பதின்மூன்று ஆண்டுகள் அதில் ஈடுபடாதிருந்த காரணத்தினாலும், வழிபாட்டிற்கு ஒரு சக்தியிருக்கிறதென்ற விபரத்தை, S. S. என்பவரின் அனுபவத்தால் ஓரளவு உணர்ந்துகொண்ட காரணத்தினாலும், காலஞ்சென்ற தந்தையார் அவர்கள் சொற்படி, தாம் பல வருஷங்கள் பூஜை செய்யாமல் கழித்துவிட்டோமே என்பதை மனதில் எண்ணி வருந்தி, மறு சிவராத்திரி தினத்தில், தவறாமல் சிவபூஜையை ஏற்றுக்கொள்ளுவதாக அவர்களாகவே தந்தையாரி சொல்லவேண்டியதாயிற்று.

அதைக்கேட்ட தந்தையார், "நான் பூலோகத்திலிருக்கும்பொழுது உனக்குச் சொன்ன சொல்லை, நான் ஆவி உலகத்திலிருக்கும்பொழுதாவது, நிறைவேற்றிவிடுகிறதாக நீ அறிவித்து, அதற்குரிய நாளையும் குறிப்பிட்டுச் சொல்லிவிட்டாய்; அதுகேட்டு மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்; சிவபூஜையில் பெறுகிறபேறு, வேறு எந்தப் பூஜையிலும் கிடையாது என்ற உண்மை, நான் பூலோகத்திலிருக்கும் பொழுது எவ்வளவு அழுத்தமாகயிருந்ததோ, அது இப்பொழுது, ஆவி உலகத்தில் ஆயிரம் மடங்கு அதிகப்பட்டிருக்கிறது; நான் இங்கு வந்து, நேரில் பல உலகங்களுக்கும் சென்று, ஆங்காங்குள்ள அதிபதிகளை நேரில் பார்வையிட்டு, அவரவர்கள் செய்கின்ற காரியங்களையும், அவரவர்

களுக்குள்ள அதிகாரங்களையும், உற்று நோக்கினபொழுது தான், சிவபூஜையின் மகிமையையும், சிவலிங்கத்தின் தத்துவத்தையும் உள்ளவாறு உணரமுடிந்தது.

சிவலிங்கத்தின் அடிப்பாகத்தில் நாற்கோணமாக இருக்கிற பாகமானது பிரம்மபாகம் எனப்படும்; அது பிரம்மாவைக் குறிப்பதாகும்; சிவலிங்கத்தின் மத்தியிலே, அட்ட (எட்டு) கோணமாகவும், அதைச் சுற்றி வட்டமான ஆவுடையாராகவும், இருக்கிற ஒன்பதும் சேர்ந்து, விஷ்ணு பாகம் எனப்படும்; அது மகாவிஷ்ணுவைக் குறிப்பதாகும்; மகாவிஷ்ணு நவசக்திகளாகத் தொழிற்படுவதால் "அரி அல்லால் தேவியில்லை, ஐயன் ஐயாரனார்க்கே" என்று தேவாரத்தில் கூறப்பட்டிருக்கிறது; மேலும் சிவலிங்கத்தின் மேலேயுள்ள பாகமானது சிவ பாகம் எனப்படும்; அது உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் சிவ பாகத்தைக் குறிப்பதாகும்.

அதுபோலவே ஆவி உலகத்திற்கும் எமலோகத்திற்கும் மேலே, பிரம்மலோகமும், அதற்குமேலே விஷ்ணுலோகமும், அதற்குமேலே சிவலோகமும், ஆங்காங்கு, அதற்குரிய மூர்த்திகளும், தேவர்களும் இருக்கிறார்கள்; ஆனதால் நீ தவறாமல் வருகிற சிவராத்திரியன்று சிவபூஜையை ஏற்று வழிபாடு செய்து, எல்லா நலங்களையும் எய்துவாயாக" என்று ஆசீர்வதித்துச் சென்றார்கள்.

இவற்றிலிருந்து ஆவி உலகத்தவர், அவர்கள் அங்கு இருக்கும்வரை, பூலோகத்திலுள்ளவர்களோடு பேச வேண்டுமென்று எவ்வளவு விருப்பமுள்ளவர்களாக இருக்கிறார்கள் என்பதும், நாம் என்ன காரணத்திற்காகப் பூஜை செய்கின்ற இடங்களில், இறைவழிபாடுசெய்து, இறந்தவர்களோடு தொடர்புகொள்ள வேண்டுமென்பதும், நமக்கு வேண்டாதவர்கள் பேச முற்பட்டால், நாம் கோபங்கொள்ளாது எவ்விதமாக அதைச் சமாளித்தல் வேண்டுமென்பதும் தெளிவாகும்.

**இரண்டாம் பதிப்பாகிய இப் புத்தகத்தில், முதல் பதிப்பில் கூறியிருக்கும் உண்மைகளை, பண்டிதரும், பாமரரும் ஒத்துக்கொள்ளுமாறு செய்வதற்கு புதிதாகச் சேர்த்திருக்கும் தலைப்புக்களும், விளக்கங்களும்.**

## 46. அறிவுடைய எவரும் ஆழ்ந்து சிந்தித்து, தெளிவு பெறவேண்டிய கேள்விகள்.

நம்மில் ஒவ்வொருவருக்கும் பெயரிடப் பெற்றிருக்கிறது. அந்தப் பெயர் உயிருக்குரியதா? ஸ்தூல உடலுக்கு உரியதா? இரண்டும் சேர்ந்திருக்கிற நிலைக்கு உரியதா? அல்லது ஆவி உடம்பு எனப்படும் சூக்கும உடம்பிற்கு உரியதா?

நாம் ஒவ்வொருவரும் தினமும் தூங்குகின்றோம். தூங்குவது உயிரா? ஸ்தூல உடலா? அல்லது ஆவி உடலா?

நாம் ஒவ்வொருவரும் சொப்பனம் காண்கின்றோம். சொப்பனம் என்பது வெறும் மனோ நிகழ்ச்சியா? அல்லது ஆவி உடலின் அனுபவமா? ஆவி உடல் என்பது யாது? அதன் தத்துவங்கள் என்ன? அந்த உடலைத் தந்தது யார்?

நாம் ஒவ்வொருவரும் என்றாவது ஒரு நாள் இப்பூவுலகை விட்டுப் பிரியத்தான் போகிறோம். அந்தப் பிரிவு, ஸ்தூல உடலை விட்டு உயிர் பிரிதலா? அல்லது ஸ்தூல உடலைவிட்டு ஆவி உடம்பு பிரிதலா? உயிரில் ஆண் உயிர் பெண் உயிர் உண்டா? ஆவி உடலில் ஆண் பெண் பாகுபாடு உண்டா? ஆவி உடம்பு பிரிதலே சாவாகுமானல் அவ்வுடம்போடு நாம் தொடர்ந்து வாழப்போகிறோமா?

எங்கு வாழப்போகிறோம்? அவ்வாழ்வு சிறந்து விளங்க இங்கு நாம் என்ன செய்ய வேண்டும்? அவ்வாழ்வு முடிந்ததும், ஆவி உடம்பு அங்கு அழிக்கப் பெறுகின்றதா? அது அழிந்தபின் அதை இயக்கிக் கொண்டிருந்த உயிரின் நிலை என்ன? அவ்வுயிர் மறு பிறவி பெறுகின்றதா? அல்லது பிறவா நிலை எய்துகின்றதா?

இக்கேள்விகள் மக்களாய்ப் பிறந்திருக்கிற அனைவருக்கும் பொதுவானவை. எம்மதத்தவராயினும் ஆழ்ந்து சிந்தித்து உணர்ந்து கொள்ளவேண்டியவை. இக்கேள்விகளுக்குரிய உண்மையான விடைகளைச் சந்தேக விபரீதமின்றி விளங்கிக் கொண்டால் இவ்வுலகவாழ்வு முடிந்ததும், நாம் தொடர்ந்து வாழ்ந்தும், வளர்ந்தும், வரப்போகிறோம் என்ற உண்மையையும், எந்த உடலோடு அங்கு வாழப்போகிறோமோ. அந்த உடல் நாம் இவ்வுலகத்திலிருக்கும்பொழுதே காணக் கூடியதாக ஆண்டவன் அமைத்திருக்கின்ற தன்மையையும் புரிந்துகொள்ளலாம். இங்கு நாம் நன்றாக வாழ்வதற்குப் பாடுபடுவதுபோல இவ்வுலகை விட்டுப் பிரிந்து நாம் அங்கு சென்றபிறகும், நமது வாழ்வு சிறந்து விளங்குவதற்கு இங்கு நாம் முன்கூட்டியே என்னென்ன விதமாக நடந்து கொள்ளவேண்டும் என்பதையும், முன்னதாகவே அறிந்து, திருந்தி நடந்து கொள்வதே அறிவுடைமையாகும்.

ஆதலால், எம்மதத்தவராகயிருந்தாலும் இதில் சொல்லப் பெற்றிருக்கும் உண்மைகளை நன்றாக ஆராய்ச்சி செய்து, அனுபவமுள்ளவர்களிடம் கேட்டுத் தெளிந்து, ஒரு முடிவுக்கு வரவேண்டுமே தவிர, இதுவரை அவரவர்கள் கற்ற கல்வியினாலும் கேட்ட கேள்வியினாலும் கொண்டிருக்கும் கொள்கைகளுக்கும், மதக் கோட்பாடுகளுக்கும் அவை விரோதமாயிருக்கின்றன என்று எண்ணுவதும், இகழ்வதும், புறக்கணிப்பதும் அறிவுடைமை ஆகாது.

எப்பொழுதும் உண்மை ஒன்ருகவே இருக்குமே தவிர இரண்டாகமாக இருக்க முடியாது. எந்த உண்மையும், காட்சிப் பிரமாணத்திற்கும், அனுமானப் பிரமாணத்திற்கும், ஆன்ருேர் எழுதிய பிரமாணத்திற்கும் ஒத்திருக்க வேண்டும். அதாவது முன்ஞேரது அனுபவத்திற்கும், யுக்திக்கும் நமது அனுபவத்திற்கும், யுக்திக்கும் ... ருத்த ... ம்.

**47.** ... வம் இல்லாதது; பெயர் இல்லாதது; அழிவு இல்லாதது. ஆவி உருவம் உடையது; பெயர் உடையது; அழிவு உடையது.

உயிர் ... அது அறிவித்தால் அறியும் ஆற்றலுடையது. ... ம் காணமுடியாத உருவமற்ற சிற்சக்தி ... உருவமுள்ளதும், பாரமில்லாததுமான சூக்கும ... ஆவி உடம்பு சொப்பன நிலையில் யாவரும் க... து. ஆனதால் ஆவியை உயிர் என்று எண்ண ... ாது. அவ்விதத் தவறு உள்ளத்தில் ஏற்படக் ... என்பதற்காகவே ஆவி என்று மட்டும் குறிப்பிட ... எல்லா இடங்களிலும் ஆவி உடம்பு அல்லது ... டல் என்றே குறிப்பிட்டிருக்கிறேம்.

பெயரிட ... பெற்றிருப்பது உருவமில்லாத உயிருக்குமல்ல. ... பாரமும் உள்ள ஸ்தூல சரீரத்திற்குமல்ல. உயிரும் ஸ்தூல சரீரமும் சேர்ந்து ஜீவிக்கும் நிலைக்கும் அல்ல. சொப்பனத்தில் சகலவிதமான இன்பதுன்பங்களையும் அனுபவிக்கின்ற பாரமில்லாத ஆவி ரூபத்திலுள்ள ஆவி உடம்பிற்கே பெயரிடப் பெற்றிருக்கிறது. அந்த ஆவி உடம்பையே, யாதனசரீரம், சூக்கும சரீரம், பிராணமய கோசம், உள்ளுடம்பு, புகமுடம்பு, சொப்பன உடல் என்றும் கூறுவர். ஆங்கிலத்தில் நல்ல ஆவிகளாக இருந்தால் "Ghost", "Spirit", "Apparition", "Spectre", என்றும், கெட்ட ஆவிகளாக இருந்தால் "Demon" "Devil", என்றும், கூறுவர்.

48. ஆவி உடம்பு பிரியாதிருக்கும்வரை ஸ்தூல உடம்பும் அந்தப் பெயரையே பெற்றிருப்பதின் காரணம்.

பெயரிடப் பெற்றிருக்கிற அந்த ஆவி உடல் நமது பாரமுள்ள சரீரத்தில் இருக்கும்வரை இந்தச் சடலமும், உள்ளிருக்கின்ற அந்த ஆவி உடம்பின் பெயரையே பெற்றிருக்கிறது. அதனாலேயே ஆவி உடம்பு பிரிந்தபின் அசைவற்றுக் கிடக்கின்ற சடலத்திற்கு, பிணம், சவம், கட்டை என்ற பொதுப் பெயர் கொடுக்கப் பெறுகின்றது. பிரிந்துபோன ஆவி உடலுக்குப் பெயரும், ஆண் பெண் உருவமும், அவயவங்களும், தொடர்ந்த வாழ்வும் இருப்பதால், அதற்குரிய பெயரைச் சொல்லி இன்னார் சிவலோகம் அல்லது வைகுண்டம் சேர்ந்தார் அல்லது சேர்ந்தாள் என்று சொல்லுகின்றோம். உற்றார் உறவினருக்கு அவ்வாறே கடிதம் எழுதி அறிவிக்கின்றோம். இவ்வுலகில் யாரும் இறந்துவிட்டதாக எழுதுவதே கிடையாது.

இதனை விளக்க இரண்டு உதாரணங்கள் சொல்லலாம். ஒன்று பாம்புகளின் சட்டையும், மற்றது பறவைகளின் முட்டையுமாகும். ஒரு இடத்தில் ஒரு நல்ல பாம்பு, ஒரு சாரைப்பாம்பு, ஒரு விரியன் பாம்பு, இருப்பதாக வைத்துக்கொள்வோம். அவை மூன்றும் சட்டை கழட்டாமல் இருந்தபொழுது அந்தச் சட்டையையும், உள்ளிருந்த பாம்பின் பெயரையும் சேர்த்தே, இன்ன பாம்பு என்று சொல்லுகின்றோம். அவை சட்டைகளைக் கழட்டிப் போட்டுவிட்டுப் போய்விடுமானால், வெளியேறிப்போன பாம்புகளுக்குத்தான் அந்தந்தப் பெயர் உண்டு. தவிரவும் கழட்டிக்கிடக்கிற சட்டைகளுக்குப் பொதுவான "சட்டை" என்ற பெயர் தான் வழங்கப் பெறுகிறது. உள்ளிருந்த பாம்பின் பெயரை அவற்றிற்குச் சொல்லிக் கொள்வதுகிடையாது. அதுபோலவே பலவித பெயருடைய பறவைகள், முட்டைகளிலிருந்து வெளிப்பட்டுவிட்டால், வெளியே வந்த பறவைகளுக்குத்தான் தனித்தனிப்

பெயர் சொல்வோமே தவிர, அம் முட்டைகள், உள்ளிருந்த பறவைகளின் பெயரைப் பெருமல், பொதுவாக முட்டை என்றே அழைக்கப் பெறும். குஞ்சு வெளியாவதன்முன் அப்பறவையின் பெயர் சொல்லியே, அது காக்கா முட்டை, குயில் முட்டை, மயில் முட்டை என்று சொல்லப் பெறும்.

49. அயர்ந்த தூக்கத்திலும், விழிப்பு நிலையிலும், சொப்பன நிலையிலும் ஆவி உடலின் சம்பந்தா சமபந்தம்.

நான்குபேர் தூக்கவேண்டிய பாரமுள்ள நமது சடலத்தைப் பாரமில்லாத நமது ஆவி உடல் தூக்கித் திரிய வேண்டியதிருக்கிறது. அதனுல் ஏற்படும் அலுப்புத் தீர, ஆவி உடலுக்குத் தூக்கம் இன்றியமையாததாக இருக்கிறது. பல நாட்கள் உணவில்லாமல்கூட வாழலாம். ஆனுல் இரண்டு நாட்கள் சேர்ந்தாற்போல் தூக்கமின்றி வாழமுடியாது. உயிரானது ஆவி உடலின் புருவ மத்தியாகிய லலாடஸ்தானத்தில் தொடர்புகொண்டு தொழிற்படும் பொழுது நமது பாரமுள்ள உடலின் மூலம் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றது. நமது சரீரத்திற்குள்ள தோலுணர்வுக்கு மூலஸ்தானம் தலையின் பின்புறம் இருப்பதாலும், நாக்கு, மூக்கு, கண், காது முதலிய கருவிகள் முகத்தில் இருப்பதாலும், அவற்றின் மூலம் ருசி, வாசனை, உருவம், சப்தம் முதலியவற்றை உணர வேண்டியதிருப்பதாலும், விழிப்பு நிலையில் புருவ மத்தியின் தொடர்பினுல், ஆவி உடலானது ஸ்தூல உடல் மூலம் சகல காரியங்களையும் செய்கின்றது.

சொப்பனம் காணும் பொழுது, உயிரானது ஆவி உடம்பின் புருவ மத்தியிலிருந்து கண்டஸ்தானமெனப் படும் கழுத்திற்கு இறங்கி, அந்த ஆவி உடலை மட்டும் தொழிற்படுத்தி இன்பதுன்பங்களை நுகர்கின்றது. ஸ்தூல

உடலிலுள்ள உணர்வு அப்பொழுது இருப்பதில்லை. அதற்குக்காரணம் ஸ்தூல உடலுக்கு உணர்ச்சி தருகின்ற ஆவி உடம்பின் தொடர்பு ஓரளவு நீங்கியதேயாகும். அந்த நிலையில் ஸ்தூல உடல் தொழிற்படாமல் ஓய்வு பெறுகின்றது. ஆனால் ஆவி உடல் சொப்பனத்தில் தனித்துத் தொழிற்பட்டுப் பல காரியங்களையும் செய்து கொண்டிருப்பதால், அந்த உடல் முழு ஓய்வு பெற்றுக் கொள்ள முடிவதில்லை. பாரமுள்ள சடலத்தைத் தூக்கித் திரிய வேண்டியதாகவுள்ள சுமையானது, சொப்பன நிலையில், ஆவி உடலுக்கு நீங்கப் பெறுகின்றதே தவிர, பாரமில்லாத அந்த ஆவி உடல் தொழிற்படாமலில்லை. அதுவும் தொழிற்படாமல் இருக்க வேண்டுமானால், உயிரானது மேலே சொன்ன கண்ட ஸ்தானத்திலிருந்து இறங்கி, ஆவி உடம்பின் இருதய ஸ்தானத்தில் தனது சம்பந்தத்தை வைத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுது ஆவி உடலும் தொழிற்படாமல் முழு ஓய்வு பெற்றுக் கொள்ளுகிறது. அதைத்தான் உண்மையான, நிம்மதியான தூக்க நிலை அல்லது சுழுத்தி நிலை என்கிறோம்.

இன்னும் அதற்குக் கீழே உயிரானது நாபியில் (தொப்புளில்) நிற்கும்பொழுதுள்ள துரிய நிலையையும், மூலாதாரத்தில் நிற்கும்பொழுதுள்ள துரியாதீத நிலையையும் சொல்லவும், எழுதவும் முடியாது. சொப்பனத்தில் தொழிற்படுகின்ற ஆவி உடல், விழிப்பு நிலையில் ஸ்தூல உடல் மூலம் இன்ப துன்பம் அனுபவிக்கின்றதை ஜாக்கிரம் என்று வடமொழியிலும், நனவு என்று தமிழிலும் சொல்லுகின்றோம். ஆவி உடலும் தொழிற்படாமல் இன்ப துன்பம் ஒன்றும் அனுபவியாமல் நிம்மதியாகத் தூங்குவதை சுழுத்தி என்று வடமொழியிலும், ஆழ்ந்த தூக்கம் என்று தமிழிலும் சொல்லுகின்றோம்.

ஆகவே உயிர் எப்பொழுதும் தூங்குவதில்லை. ஆவி உடல்தான் நிம்மதியாகத் தூங்குகின்றது. தூங்கும்

பொழுது ஸ்தூல உடலின் உதவியின்றி சொப்பனத்தில் உயிரானது ஆவி உடல் மூலம் இன்பதுன்பம் அனுபவிக்கின்றது. விழிப்பு நிலையில் உயிரானது ஆவி உடலைக் கொண்டே ஸ்தூல உடலை இயக்கி அதன் மூலம் இன்ப துன்பம் அனுபவிக்கின்றது.

50. சொப்பனம் மனோநிகழ்ச்சி மட்டுமல்ல; அது ஆவி உடம்பின் அனுபவமே என்பதற்குப் பிரமாணம்.

தூல உடல் உணர்ச்சியற்றிருப்பதுவே தூக்கம் என்றும், அதன் மூளை வேலை செய்யாதிருக்கிற நிலையே தூக்கம் என்றும் பலரும் எண்ணுவர். சொல்லவும் செய்வர். உயிரானது உடலினுள் இருந்து, இருதயத் துடிப்பும் இரத்த ஓட்டமும் சுவாசமும் நடைபெற்றுக் கொண்டிருக்கும் வரை, தூல உடலில் உணர்ச்சி இருக்க வேண்டுமே? உயிர், உடலில் இருக்கவும், இருதயத் துடிப்பும் இரத்த ஓட்டமும், சுவாசமும் நடைபெற்றுக்கொண்டிருக்கவும், தூங்கும் நிலையில், உடலைத் தொட்டால் அதில் இருக்கவேண்டிய தோலுணர்ச்சி இல்லையல்லவா? காதுகள் திறந்திருந்தும் வெளியிலுள்ள சப்தம் காதுகளில் விழுவது இல்லையல்லவா? குழந்தைகளுக்குத் தூக்கத்தில் உணவு கொடுத்தால் மறுநாள் காலையில் உணவு உண்டதாக அவற்றிற்குத் தெரியவில்லையல்லவா? அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கும் ஒரு மாணவனையோ, மாணவியையோ, வீட்டில் ஒரு இடத்திலிருந்து அடுத்த இடத்திற்கு நடத்திக் கூட்டிக்கொண்டுபோனால், மறுநாள் காலையில், தான் முதலில் படுத்திருந்த இடத்திலிருந்து மற்ற இடத்திற்குத் தானே நடந்து சென்றதாக நினைவில்லையல்லவா?

பின் சொன்ன இரண்டு நிலைகளிலும், உயிர் உடலிலிருக்க, தூக்கத்தில் நமது தூல உடல் உணர்ச்சியற்றிருப்பதற்கும், மூளை வேலை செய்யாதிருப்பதற்கும் காரணம் கேட்

கும்பொழுது, அப்படியிருக்கிற நிலைதான் தூக்க நிலை என்பது பதில் ஆகமாட்டாது. தூங்குவதே தூக்கம் என்பது போலவேயாகும். மேலும் தூக்கத்தில் தூல உடல் உணர்ச்சியற்று அதிலுள்ள மூளையும் மனமும் தொழிற்படாதிருக்கும்பொழுது, சொப்பனத்தில் உணர்ச்சி[illegible] சரீரம் ஒன்று தொழிற்படவும், அதில் மூளையும், மனமும் நன்றுகத் தொழிற்பட்டு, இன்பம் அனுபவிக்கவும், துன்பம் அனுபவிக்கவும், பயப்படவும், உறவாடவும், உரையாடவும், உலாவவும், அழவும், சிரிக்கவும், ஓடவும், ஆடவும், ஏன், தூல உடல்கொண்டு செய்கின்ற காரியங்கள் அத்தனையும், அதில் செய்ய முடியாத பல காரியங்களையும் செய்கின்றோம் அல்லவா?

உயிரானது அந்தச் சொப்பன சரீரத்துக்குள்ளேயிருந்தால்தானே, அதைத் தொழிற்படுத்தமுடியும் என்று கேட்டால், பலர் சொப்பனம் காண்பது ஒரு உண்மையல்ல; அது வெறும் மனோபாவமே என்கின்றன[illegible]லே அல்லது விழிப்பு நிலையிலே, தூல உடல் [illegible] அனுபவிக்கின்ற சகலவற்றையும், தூல உடலின் உதவியின்றி சொப்பனம் காணுகின்ற உடல் அனுபவி[illegible]வதை அனுபவ வாயிலாக அறிந்திருந்தும், சொப்பனம் காணும்பொழுது சொப்பனம் காணுகிறோம் என்ற உணர்ச்சி ஒரு சிறிதுமின்றி, விழிப்பில் தூல உடலில் அனுபவிக்கின்ற அனுபவமாகவே சகல அனுபவங்களும் [illegible]ளும், அதில் உண்டாவதை உணர்ந்திருந்தும், சொப்பன அனுபவமும் ஒரு உடல் கொண்டே நடைபெறுகின்றதென்பதை ஒத்துக் கொள்ளாவிட்டால், அப்படிப்பட்டவர்களை நாம் என்னதான் செய்ய முடியும்? தூல உடலி[illegible]ட்ட அனுபவத்தின் மனோபாவமே சொப்பனம் என்று கருதியும், சொல்லியும் வருபவர்களுக்கு, அது அப்படியல்ல என்பதை நிரூபிக்க வேண்டியதே நமது கடமையாகும். தூல உடலில் மனதின் தொழிற்பாடும், உடலுணர்ச்சியும் இருப்பதே போன்று கனவு காணுகின்ற உடலிலும், மன

தின் தொழிற்பாடும், உடல் உணர்ச்சியும், புலன்களால் அனுபவிக்கின்ற இன்பதுன்பங்களும் இருப்பதை நாம் எல்லோரும் அனுபவ வாயிலாக அறிவதாலும், கீழே விவரித்திருக்கின்ற பல ஏதுக்களாலும், சொப்பனம் காண்பது ஒரு உடல்கொண்டே என்பதை யாரும் மறுக்க முடியாத முறையில் நிரூபித்துவிடலாம்.

சொப்பனம் கண்டுகொண்டிருக்கும்பொழுது சொப்பனத்தில் தொழிற்படுகின்ற உடல், முழு உணர்ச்சியுடையதாக இருக்கக் காண்கிறோம். அதே சமயத்தில் தூல உடல் குறட்டை விட்டுக்கொண்டு உணர்ச்சியற்றிருப்பதையும் காண்கிறோம். சொப்பனம் காணுகின்ற சமயத்தில், இவ்வுலக நினைவு சிறிதளவும் இல்லாதிருப்பதையும் உணர்கின்றோம். திடீரென்று விழித்துவிட்டால், சொப்பனம் காணுகின்ற உடலிலுள்ள சொப்பன உணர்ச்சி தடைப்பட்டுநின்று, தூல உடலில் உணர்ச்சி வருவதையும் காண்கின்றோம். தூல உடல் உணர்ச்சியின்றிக் கிடக்கும்பொழுது, சொப்பன உடல் உணர்ச்சியுடையதாக இருப்பதை உணர்கின்றோம். அப்படி உணர்ந்தபிறகும், உணர்ச்சியற்றுக் கிடக்கும் தன்மையுடைய தூல உடலினால், உணர்ச்சி உடைய சொப்பன உடல் உணர்ச்சி பெற்றதென்று சொல்வது முறையாகுமா? சொப்பனம் காணுகின்ற ஆவி உடலிலுள்ள உறுப்புக்களின் தொழிற்பாடும், உணர்ச்சியுமே, தூல உடலிலுள்ள உறுப்புக்களின் தொழிற்பாட்டிற்கும், உணர்ச்சிக்கும் காரணம் என்பதைக் கண்டுகொண்டால், சொப்பன உடலே தூல உடலின் இயக்கத்திற்கும் உணர்ச்சிக்கும் ஆதாரமாக அமைந்திருக்கிறதென்பதை சந்தேக விபரீதமின்றி யாரும் உணர்ந்துகொள்ளலாம்.

51. ஆவி உடம்பிலுள்ள ஒருவர், வேறு ஒருவருடைய ஸ்தூல உடலைப் பயன்படுத்தி, அதன் மூலம் தனது கருத்தைத் தன் தாய்மொழியில் வெளிப்படுத்திக் கொள்ளும் உண்மை.

இந்த உண்மையை வலியுறுத்துவதற்கு, மறுக்கமுடியாத சில அனுபவங்களும், ஆதாரங்களும் தருகின்றோம். காமாட்சி என்ற ஒரு நாயுடுப் பெண், அடுப்பில் வேலை செய்துகொண்டிருக்கும் பொழுது குழந்தை பின்புறம் வந்து அழுவதைக் கண்டு திரும்பி, அதற்குச் சமாதானம் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது, பின்புறம் தொங்கிக் கொண்டிருந்த சேலை நெருப்புப் பற்றிக்கொண்டது. அந்த நெருப்பின் வெப்பம் உடலில் தென்படும்வரை, அவளுக்குத் தன் சேலையில் நெருப்புப் பற்றிக்கொண்டது தெரியாது. தெரிந்த உடன் குழந்தையை அப்புறப் படுத்திவிட்டு சேலையைக் களைவதன்முன், அது உடலெல்லாம் பரவி ரூபாய் இரண்டாயிரம் செலவு செய்து எவ்வளவோ சிகிச்சை செய்தும், பயனில்லாமல் அவளது ஆவி உடம்பு பிரிந்து விட்டது. அவளது தூல உடலை வழமைபோல் மயானத்தில் சுட்டு எரித்துவிட்டார்கள்.

இரண்டு வருஷங்களுக்கு இடையில் அந்த வீட்டில் வேறொரு பிராமணக் குடும்பம் வந்து குடியிருக்கும்படியாக ஏற்பட்டது. அந்தக் குடும்பத்தில் 15 வயதுடைய மீனாம்பாள் என்ற ஒரு பெண் இருந்தாள். இரண்டுவருஷங்களுக்குமுன் தீ விபத்தினால் இறந்துபோன காமாட்சியின் ஆவிஉடம்பு, அவள் அகால மரணம் அடைந்ததால், ஆவி உலகத்திற்கு அழைத்துச் செல்லப்படாமல் அந்த வீட்டின் பக்கத்திலேயே சுற்றிக்கொண்டிருந்திருக்கிறது. இந்நிலவுலகில் எவ்வளவுகாலம் வாழவேண்டுமென்று கடவுளது தீர்ப்பு இருந்ததோ அந்தத் தீர்ப்புநாள்வரை, எமனோ அல்லது அவனது பரிவாரங்களோ தூல உடலைவிட்டுப் பிரிந்த ஆவி உடம்புகளை மேலே கொண்டுபோவது இல்லை. கால

மரணம் ஏற்பட்டவர்களின் ஆவி உடம்புகளை மட்டுமே, தூல உடல்களிலிருந்து பிரித்து அவரவர்கள் செய்த புண்ணிய பாவத்திற்கேற்ப அருள் பகுதிக்கோ, இருள்பகுதிக்கோ கொண்டு போகிறதாக ஆவி உலகத்தவர்கள் அறிவிக்கிறார்கள்.

மீனும்பாள் ஒருநாள் மாலை கருகருத்த வேளையில் தனித்துப் பின்புறம் போயிருந்தபோது, அங்கு மங்கலாக ஒரு பெண்ணுருவம் தோன்றவே சிறிது பயந்தாள். தன்னைக் கண்டு பயப்படுகிற சிறுமியைப் பார்த்துக் கொண்டிருந்த (ஆவி உடலோடு இருந்த) அந்தக் காமாட்சி, மீனும்பாளுடைய உடலில் ஆவேசித்து, மீனும்பாளுக்குச் சொந்தமான ஆவி உடலைப் பற்றிக்கொண்டு, அதைத் தொழிற்படவிடாமல் தடுத்து தன்னுடைய ஆவி உடலைக் கொண்டு, மீனும்பாளின் தூல உடலைத் தொழிற்படுத்திப் பேச ஆரம்பித்து விட்டாள். இந்தச் செய்தியை அறியாத பெற்றோர்கள், மீனும்பாளது செய்கைகள் வழக்கத்திற்கு மாறாக இருப்பதைக் கண்டார்கள். சித்தப் பிரமையோ, ஹிஸ்டீரியாவோ (Hysteria) மூளைக் கோளாறோ என்றெல்லாம் நினைத்து, கடைசியில் அது பேய்க்கோளாறு என்று உணர்ந்தார்கள். அவர்கள் அப்படி உணர்ந்ததற்குக் காரணங்கள் பல உண்டு.

முதலாவதாக, 'உன் பெயரென்ன'? என்று மீனும்பாளிடம் கேட்கவே 'என் பெயர் காமாட்சி' என்று தெலுங்குப் பாஷையில் பதில் சொல்லலானதும், தெலுங்கு வார்த்தைகள் ஒன்றுமே தெரியாத மீனும்பாள், நன்றாகத் தெலுங்கு பாஷை பேசுவதையும், தனது சொந்தப் பெயரைச் சொல்லாமல், காமாட்சி என்று வேறொரு பெயரைச் சொன்னதுமாகும். காமாட்சியின் ஆவி உடம்பு பிரிந்ததும், அவளது தூல உடல் சுட்டு எரிக்கப்பட்டிருக்க, ஆவி உடலோடு இருந்த காமாட்சி, உலகத்தவரோடு பேசுவதற்குவேண்டியதாகிய மீனும்பாளின் தூல உடலைக்

கொண்டு, தன்னுடைய பெயர் காமாட்சி என்று சொல்லு வாளானால், ஆவி உடலோடு இருக்கப்பட்டவர்களெல் லாம் பெயர் உடையவர்களாக இருக்கிறார்களென்பது புலனாகின்றதல்லவா? ஒருவன் ஒரு வீட்டில் குடியிருக்கும் வரை, அந்த வீடு அவன் பெயரால் அழைக்கப்படுவது போல, எந்தப் பெயர்கொண்ட ஆவி உடல், தூல உட லாகிய வீட்டில் தங்கியிருக்கிறதோ, அந்தத் தூல உடலும், உள்ளே தங்கியிருக்கின்ற அந்த ஆவி உடலின் பெயரா லேயே அழைக்கப் பெறுகிறது. ஆவி உடம்பு பிரிந்த தூல உடலைப் பெயர் சொல்லி யாரும் அழைப்பதில்லையே! பெயருக்குரிய ஆவியார் போயினபின்பு, அதுவரைத் தூல உடலுக்கு இருந்த பெயரினை மாற்றி, பிணமென்றும், சவமென்றும், யாக்கையென்றும், கட்டையென்றும், மூன்று எழுத்தால் சொல்லி, மரக்கட்டையைச் சொல்வது போல, தூக்கு, எரி, சுடு அல்லது புதை என்று சொல்லி விடுகிறோமே தவிர, பெயருக்கு உரித்தான ஆவியார் உள்ளே இருந்தபோது கொடுத்த எவ்வித மரியாதையும், மதிப்பையும் கொடுப்பதில்லையே!!

அன்றியும், ஆவி உடலோடு மேலுலகத்திலிருக்கின்ற ஆண்களும் பெண்களும் அவர்கள் பூலோகத்தில் இருந்த பொழுது என்னென்ன பெயரால் அழைக்கப் பெற்றார் களோ, அதே பெயரால் அழைக்கப் பெறுவதாகவும், ஒரு வருக்கிட்ட பெயர் அவருடைய ஆவி உடலுக்கே என் றும் சொல்லுகிறார்கள். அதிலிருந்த உயிருக்குப் பெயர் கிடையாது; தூல உடலுக்கும் பெயர் கிடையாது; உருவ மற்ற உயிரில் ஆண் உயிர் என்றும், பெண் உயிர் என்றும் இருக்கமுடியாது ஆவி உடம்புகளில்தான் ஆண், பெண், என்ற பாகுபாடுகள் இருக்கின்றன என்பது தெளிவாகும்.

தூல உடலுக்கும், உயிருக்கும் நேர் சம்பந்தம் கிடை யாது. உயிரானது ஆவி உடலில் வியாபித்திருந்து அந்த ஆவி உடலை இயக்க, ஆவி உடலிலுள்ள எந்த அவயவம்

வேலை செய்கின்றதோ, அந்த அவயவமே தூலஉடலில் ஏற்பட்டிருக்கிற பரிணாம அவயவத்தின்மூலம் தொழிற்படுகின்றது.

இதற்கு ஒரு உதாரணம் சொல்லுகின்றோம். ஒரு மனிதன் ஒரு மூக்குக் கண்ணாடிமூலம் ஒரு பொருளைப் பார்த்தால் யாராவது (மூக்குக் கண்ணாடி மூலமாகப் பார்த்தால்) மூக்குக் கண்ணாடிதான் அந்தப் பொருளைப் பார்த்தது என்று சொல்வார்களா? சொல்லமாட்டார்கள் அல்லவா? யார் பார்த்தாரோ அவரைத்தான் பார்த்ததாகச் சொல்லுவார்கள். கண்ணாடியின் உதவியின்றியும் கண் பார்க்கும். கண்ணாடியின் மூலமாகவும் பார்க்கும். ஆனால் கண்ணின் உதவியின்றி கண்ணாடி பார்க்கமுடியாது. அது போலவே தூல உடலின் உதவியின்றி ஆவிஉடல் தொழிற்பட முடிகின்றது ஆனால் அது பிறந்தபின் தூல உடல் தொழிற்பட முடிவதில்லை. மேலே சொன்ன உதாரணப்படி, தூல உடல் கண்ணாடியைப் போன்றது; ஆவி உடல் கண்போன்றது.

மேலும் இக் கருத்தை வலியுறுத்துவதற்கு இன்னொரு உதாரணம் கூறுகின்றோம். கால்பந்து (Foot Ball) யாவரும் அறிந்ததே. அதில் தோல் கவர் (Cover) ஒன்றும், ரப்பர் பிளாடர் (Bladder) ஒன்றும், அதனுள்ளே காற்றடைக்கப்பட்டிருப்பதும், யாவரும் அறிந்ததே. இம் மூன்றினுள் துள்ளுகிற சக்தி காற்றிலிருக்கிறதா? அல்லது ரப்பர் பிளாடரில் இருக்கிறதா? அல்லது கவரில் இருக்கிறதா? காற்றை தோல் கவரில் அடைக்க முடியாது. ரப்பர் பிளாடரில் தான் அடைக்க முடியும். காற்று அடைக்கப்பட்ட ரப்பர் பிளாடர், கவரின் உதவியின்றித் துள்ளும். ஆனால் கவரோ, உள்ளிருந்த பிளாடர் துள்ளுகிறபடி துள்ளுமே தவிர, பிளாடர் ஓட்டையாகி வேலை செய்யாவிட்டால் துள்ளாது. தனியாகக் காற்றும் துள்ளாது; பிளாடரில் காற்று அடைக்கப்பட்டிருக்கிறவரை

அது துள்ளும். ஆகவே துள்ளுகிற சக்தி, காற்றடைத்த பிளாடருக்குத்தான் உண்டு; கவருக்குக் கிடையாது என்பதை யாரும் மறுக்கமுடியாது. காற்று உயிருக்கு உவமை; பிளாடர் ஆவி உடலுக்கு உவமை; கவர் தூல உடலுக்கு உவமை; உயிரின்றி ஆவி உடல் தொழிற்படாது. ஆவி உடலின்றி உயிரின் தொழிற்பாட்டை யாரும் காண முடியாது. உயிரோடு சேர்ந்த ஆவி உடலின்றி, தூல உடல் தொழிற்படாது. கவரின்றி காற்றடித்த பிளாடர் மட்டும் துள்ளுவது, சொப்பனத்தில் ஆவி உடல் தொழிற்படுவதற்கு உவமை. கவருக்குள்ளிருந்த காற்றடைத்த பிளாடரானது, தானும் துள்ளி, கவரையும் தன்னைப்போல் துள்ளும்படி செய்விப்பது போன்றதே, ஆவி உடல் பகலில் தூல உடலுக்குள்ளிருந்து, தானும் இயங்கி, தான் இயங்குவது போலவே தூல உடலையும் இயங்கும்படி செய்விப்பது. ஆகவே ஆவி உடல்தான் பகலிலும், தூல உடல் மூலமாக சகலவற்றையும் அனுபவிக்கின்றதென்ற உண்மையை யாரும் மறுப்பார்களானால், அவர்களெல்லாம் உண்மையில் கண் பார்க்கவில்லை; கண்ணாடிதான் பார்த்தது என்றும், கால்பந்தில் பிளாடர் துள்ளவில்லை; கவர் தான் துள்ளுகிறது என்றும் சொல்லுகின்ற மதியுடையவர்களாவார்கள்.

இரண்டாவதாக, தெலுங்கு வார்த்தை ஒன்றும் தெரியாத மீனும்பாள், தன் தாய் பாஷை தமிழாக இருக்க, தெலுங்கு பாஷையில் பேசினதிலிருந்து, பாஷை பேசும் ஆற்றலும், தன்மையும், ஆவி உடலிலேயே இருக்கிறது என்பதை உணர முடிகின்றதல்லவா? தமிழ் பாஷை பேசக் கூடிய மீனும்பாளின் ஆவி உடம்பு தொழிற்பட்டால் அல்லவா, தூல உடலில் தமிழ் பாஷை வெளிவரும். காமாட்சியின் ஆவி உடம்பு தெலுங்கு பாஷை பேசக் கூடியதாக இருந்தனுலும், அது மீனும்பாளது சொந்த ஆவிஉடம்பைத் தொழிற்படுத்த ஒட்டாமல் பற்றியிருந்ததாலும், காமாட்சியின் ஆவி உடம்பே மீனும்பாளுடைய தூல உடலை இயக்கி ஆட்சி புரிந்துவந்தனுலும், காமாட்சி

யின் சொந்த பாஷையான தெலுங்கே மீனும்பாளது தூல உடம்பு மூலம் வெளிப்படுவதாயிற்று. இதிலிருந்து ஆவி உடலிலேயே பாஷை பேசுகின்ற ஆற்றலும், அறிவும், இருக்கின்றன என்பது புலனாகின்றதல்லவா?

மூன்றாவதாக, முட்டை, மீன், மாமிசம், இவற்றைக் கண்டால் வெறுத்து வெகுதூரம் ஓடிப் போகின்ற பிராமணச் செல்வியாகிய மீனும்பாள், இப்பொழுது முட்டை, மீன், மாமிச உணவு வேண்டுமென்று கேட்கிறாள். மீனும்பாளா கேட்கிறாள்? அல்ல; காமாட்சி அவற்றை உண்டு பழக்கமுள்ளவள்; ஆதலால் தனக்கு விருப்பமுள்ள அவற்றைக் கேட்கிறாள். ஆகவே ஒருவருக்குரிய விருப்பு வெறுப்பு என்று சொல்லுகின்ற இச்சைகளெல்லாம் ஆவி உடலிலேயே இருக்கின்றன என்பது புலனாகின்றதல்லவா?

நான்காவதாக, மீனும்பாள் எப்பொழுதும் ஒரு சிறு குடத்தை இடுப்பிலே வைத்து இடது கையினால் தாங்கிக் கொண்டு வருவது வழக்கம். இப்பொழுது பெரிய குடமொன்றைத் தலையிலும், இன்னொரு பெரிய குடத்தை இடுப்பிலும் வைத்துத் தூக்குகிறாள். மீனும்பாளுடைய வயதிற்கும், சக்திக்கும், அது சாத்தியப்படாதது. உள்ளிருந்த மீனும்பாளுடைய ஆவி உடலுக்கு அது சாத்தியமில்லை. ஆனால் இப்பொழுது உள்ளேயிருந்து இயக்குகின்ற காமாட்சிக்கு அது எப்பொழுதும் சாத்தியமானதே. ஆதலால், காமாட்சியின் ஆவி உடல் மீனும்பாளின் தூல உடலை இயக்கி அவ்வாறு செய்ய முடிகின்றது. இதிலிருந்து தூல உடலுக்குரிய ஆற்றலும் சக்தியும் ஆவி உடலின் ஆற்றலையும் சக்தியையும் பொருத்தே இருக்கின்றன என்பது புலனாகின்றதல்லவா?

ஆகவே மேலே சொன்ன நான்கு வகையான காரணங்களைக் கொண்டு, அது பேய்க்கோளாறுதான் என்று கண்டு கொண்ட பெற்றேர், ஒரு மாந்திரீகனைக் கொண்டு அப்பெண்மணியைப் பிடித்துக் கொண்டிருந்த பேயை விரட்டவே, மீனும்பாளின் சொந்த ஆவிஉடல் விடுபட்டு, அது தனது தூலஉடலை இயக்க ஆரம்பிக்கவும், மீனும்பாளுக்கு அதற்கு முன் யதார்த்தமாயிருந்த பெயரும், பாஷையும், இச்சைகளும், செயற்பாடுகளும், ஆற்றலும் வந்துவிட்டன. இவற்றிலிருந்து, நமது ஆவிஉடலுக்கே பெயர் விடப்பெற்றிருக்கிறது என்பதும், ஆவிஉடல் சொப்பனத்தில் தொழிற்படுவதற்கு தூலஉடலின் உதவி தேவையே இல்லை என்பதும், பகலிலே ஒருவன் செய்கின்ற காரியங்களெல்லாம் அவனது ஆவிஉடல் கொண்டே தூலஉடலின் மூலமாகச் செய்து வருகின்றுன் என்பதும், ஆவிஉடலிலேயே ஒருவன் பேசுகின்ற பாஷையும், ஒருவனுக்குரிய பெயரும், அறிவும், இச்சையும், ஆற்றலும், இதர கருவிகளும் இருக்கின்றன என்பதும் மறுக்க முடியாத வகையில் நிரூபிக்கப் பெறுகின்றன அல்லவா?

52. ஆவிஉடம்போடு வாழ்கின்றவர்களுக்கு, அவர்கள் தூல உடலோடு வாழ்ந்திருந்தபொழுது நடந்த சம்பவங்கள் அனைத்தும் ஞாபகத்திலிருக்கின்ற உண்மை:—

மரணத்தின் பின் எல்லோரும் ஆவிஉடம்போடு தொடர்ந்து வாழ்கின்றேம் என்பதற்கும், அவ்வாறு வாழும்பொழுது தூலஉடம்போடு இவ்வுலகில் வாழ்ந்தபொழுது நடந்த சம்பவங்களெல்லாம் நன்ருக ஞாபகத்தில் இருக்கின்றன என்பதற்கும் 46-ஆம் பக்கத்தில், "அமெரிக்காவில் விஞ்ஞான முறையில் ஆவிஉலக ஆராய்ச்சியின் ஆரம்பம்" என்ற 16-வது தலைப்பின்கீழ் கொடுத்துள்ள சான்றைத் தவிர புதிய இரண்டு சான்றுகள் தருகின்றேம்.

முதலாவது சான்று:— 31—10—59உ தினமணிப் பத்திரிகையில் "பேய் காட்டிக் கொடுத்த கொலையாளி" என்ற தலைப்பின்கீழ் வந்த செய்தியொன்று பின்வருமாறு கூறுகின்றது. ராமநாதபுரம் மண்டபம் போலீஸ் சரகத்தைச் சார்ந்த செம்படையார்குளம் கிராமத்தில் 29 வயதுள்ள மணமான சிட்டுப்பிள்ளை என்ற கருப்பாயியைக் கொலைசெய்த செய்தி நமது பத்திரிகையில் ஏற்கனவே வெளிவந்துள்ளதல்லவா? அதைத் தொடர்ந்து மிக ருசிகரமான தகவல் ஒன்று கிடைத்துள்ளது.

"கொலை நடந்த பல வாரம்வரை கொலைநடந்ததாக யாருக்குமே தெரியாது. ஆறு வாரங்கள் சென்றபின் கொலைசெய்ததாகக் கூறப்படும் நாகசாமித் தேவர், கொலைநடந்த 'செம்படையார்குளம்' கிராமத்தை அடுத்த 'வலசை' என்ற கிராமத்தில், உடுக்கடித்து பேயாட்டம் நடக்கும் ஒரு வீட்டில் அங்கு குழுமியிருந்த ஆட்களுடன் இருந்தாராம். உடுக்கடித்த பூசாரி பேயாடும் பெண்ணைப் பார்த்து நீ யார்? எந்த ஊர்? என்று கேட்க, ஆச்சரியப்படத்தக்க விதத்தில், பேயாடும் பெண் இந்த நாகசாமித் தேவரைப் பார்த்து, 'டேய் என்னைக் கழுத்தை நெறித்துக் கொன்று ஆத்துக் கரையில் புதைத்துவிட்டு, இங்கு வந்து என்னை வேடிக்கையா பார்க்கிறே, பார், உன் குடியைக் கெடுத்துக் குலையை அறுக்கிறேன் பார்' என்று கூச்சலிடவே நாகசாமித்தேவர் நடுங்கியபடி புலம்பி, அங்கு ஒத்துக் கொண்டு, அடிக்கடி அதுபற்றிச் சித்தப்பிரமை அடைந்தவர்போல் புலம்பியதாகவும், அதுசமயம் அங்கிருந்தவர்கள்மூலம் இது வெளியாகி, போலீசாரின் தகவலுக்கு வந்து, அவர் காட்டிய இடத்திலிருந்து பிணத்தை எடுத்து மேல் நடவடிக்கை நடைபெறுவதாகவும் தெரிய வருகிறது" என்பதாகும்.

இதிலிருந்து எல்லோரும் இறந்தபின் ஆவிஉடம் போடு வாழ்கிறார்கள் என்பதும், அவர்கள் இவ்வுலகி லுள்ள வேறு தூலஉடம்புகளில் ஆவேசித்து, தாங்கள் தூல உடலோடு இருந்தபொழுது தங்களுக்கு நடந்த சம்பவங் களையும், தூலஉடல்கள் புதைக்கப்பட்ட இடங்களையும் நல்ல நினைவொடு வெளிப்படுத்துகிறார்கள் என்பதும் உறுதி யாகின்றன அல்லவா?

இரண்டாவது சான்று:- உலகப் பிரசித்திபெற்ற ஷேக்ஸ்பியர் (Shakespeare) கி. பி. 1602-ம் வருஷம் எழுதின 'ஹேம்லெட்' என்னும் புத்தகத்தில் 'டென்மார்க்' (Denmark) தேசத்தில் நடந்த நிகழ்ச்சி யாகக் கீழ்வருமாறு குறிப்பிட்டிருப்பதைக் காண்க:-

ஹேம்லெட் என்பவன் டென்மார்க்கு தேசத்து அரச னது குமாரன். அரசன் தனது பூந்தோட்டத்தில் படுத்திருக் கும் பொழுது பாம்பு கடித்து இறந்துவிட்டதாகக் கூறப் பெற்று, இறந்துபோன அரசனுடைய தம்பி, அந்த தேசத்து அரசனாக ஆட்சி செலுத்தி வருகிறான். ஹேம் லெட்டைப் பெற்றெடுத்த தாயையும் அந்தப் புதிய அரசன் மணந்துகொண்டான். ஹேம்லெட்டுக்கு தன்னுடைய தகப்பனார் திடீரென்று இறந்துபோன செய்தி, பெரிய அதிர்ச்சியையும், தாங்கமுடியாத துயரத்தையும் கொடுத் தது. ஹேம்லெட்டின் சிறிய தகப்பனான புதிய அரசனும், ஹேம்லெட்டின் சொந்தத் தாயான புதிய இராணியும் ஹேம்லெட்டுக்கு எவ்வளவோ ஆறுதலும் தேறுதலும் கூறியும் அவனது துக்கம் குறைந்த பாடில்லை.

ஹேம்லெட் அவ்வாறிருக்க, இறந்துபோன அவனது தந்தையார் ஆவிஉடம்போடும் அரசஉடுப்போடும் காவல் காத்துக் கொண்டிருந்த பெர்னார்டோ (Bernardo) ஹொராஷியோ (Horatio) மார்செல்லஸ்

(Marcellus) என்ற மூவரும் காணும்படி இரவு 12 மணியடித்ததும் பலநாள் அவர்கள் முன்வந்து போய்க் கொண்டிருக்கிறார். அவர்கள் அந்த ஆவி உடம்போடிருக்கும் அரசனிடம் பேசமுயற்சிக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு அவர் ஏதும் பதில் கூறாத காரணத்தால் அவர்கள் மூவரும் ஹேம்லெட்டிடம் தாங்கள் கண்ட காட்சியை விவரிக்கிறார்கள். உடனே ஹேம்லெட் தானும் தன் தந்தையாரது ஆவியை (ஆங்கிலத்தில் ஆவிஉடம்போடு கூடிய ஒருவரை 'கோஸ்ட்' (Ghost) என்றும் (Spirit) 'ஸ்பிரிட்' என்றும் சொல்லுவார்கள்) சந்தித்து ஏதும் பேசிப் பார்க்கலாமென்று எத்தனிக்கிறான். இரவு 12மணி அடித்ததும், தனது தந்தையாரது ஆவி அவனுக்கும் மற்ற இரு காவல்காரருக்கும் முன்னே அரச நடையில் நடக்க ஆரம்பித்தது. உடனே ஹேம்லெட் அரசே, தந்தையே, இராசவம்ச 'டேனே' எனக்குப் பதில் சொல்ல வேண்டும், தாங்கள் திடீரென்று இறந்தது பெரிய மர்மமாக இருக்கிறது என்று கேட்கிறான். அதற்கு ஆவி உடம்போடு உள்ள தந்தையார் பதில் ஒன்றும் சொல்லாமல் தன்னுடன் வரும்படி கையால் இரண்டு முறை சைக்கினை செய்கிறார். மற்ற இரு காவலர்களும் ஹேம்லெட்டை தனித்துப்போக வேண்டாமென்று தடுக்கிறார்கள். அவ்வாறு தடுத்தும் ஹேம்லெட் தந்தையாரது ஆவியின் பின் செல்லுகிறார். மற்றவர்கள் காணாத தூரத்திற்குச் சென்றபின் ஆவி ரூபத்திலுள்ள தந்தையார் "நான் வழமைபோல் பூங்காவில் தூங்குகின்ற சமயம், உனது சித்தப்பன் எனது காதில் நஞ்சை ஊற்றி என்னைக் கொன்று விட்டு, உன்னுடைய தாயாரையும் மணந்துகொண்டான். அவளும் அதற்குச் சம்மதித்துக் கொண்டாள். அவள் செய்த துரோகத்திற்கு ஆண்டவன் அவளுக்குக் கூலிகொடுப்பான். ஆனால் நீ உன் சித்தப்பனைப் பழிக்குப்பழி வாங்கவேண்டும்; நான் பாம்பு கடித்து ( )கையாக இறந்து விட்டதாகப் பிரஸ்தாபப் ப( விட்டார்கள் அதில் சம்பந்தப்பட்ட சூட்சிக்காரர்கள். என்னைக் கடித்த பாம்பு, இப்பொழுது தலையில் என்னு

டைய கிரீடத்தை வைத்திருக்கும் உனது சித்தப்பன்தான்" என்று அறிவித்ததாகக் கூறப்படுகின்றது.

இது, நடந்த சம்பவமோ ஷேக்ஸ்பியரது கற்பனையோ நமக்குத் தெரியாது. ஆனால் நானூறு வருஷங்களுக்குமுன், இறந்தபின்னரும் இறந்தவர்களுக்கு, தூல உடம்பைப் போன்ற இன்னொரு ஆவிஉடம்பு இருக்கிறதென்பதும், அந்த உடலுடையவர் இன்னாரென்று கண்டுகொள்ளக் கூடிய அங்க அடையாளமுள்ளதென்பதும், சிலருடைய கண்களால் காணக்கூடியதென்பதும், அந்த ஆவிஉடம்பில் இருக்கப்பட்டவருக்கு, தான் தூலஉடலோடு வாழ்ந்திருந்த காலத்தில் தனக்கு யார் யார் என்ன என்ன செய்தார் என்பதும் நன்றாக ஞாபகத்தில் இருக்கிறதென்பதும், இறந்த பின்னரும் கையினால் சைக்கினை காட்டிக் கூப்பிட்டதிலிருந்து, அந்த உடம்பிலும் சகல உறுப்புகளும் இருக்கின்றன என்பதும், ஹேம்லெட்டை தனித்த இடத்திற்கு கூட்டிக்கொண்டுபோய் அவனிடம் தனித்துச் சொன்னதிலிருந்து, ரகசியமாகச் சொல்லவேண்டிய விஷயங்களை ஆவி உடம்பிலுள்ளவர்கள், பலரும் அறியச் சொல்ல மாட்டார்கள் என்பதும், கருதப்பெற்று வந்திருக்கிறது என்பதும் இவை அந்தக் காலத்தில் ஒப்புக்கொள்ளப் பெற்றிருந்த உண்மைகள் என்பதும் தெளிவாகிறது அல்லவா?

இவ்வித அத்தாட்சிகளும் சம்பவங்களும் உலகு எங்கும் எக்காலத்திலும் நடைபெற்று வந்திருக்கின்றன. இப்பொழுதும் நடைபெற்று வருகின்றன. ஆதலால் இவற்றின் உண்மையை அனுபவசாலிகளிடம் கேட்டுத் தெளிந்துகொள்ளல் வேண்டும்.

## 53. ஸ்தூல உடலைச் சுட்டெரிப்பதின் சுகாதாரமும், புதைப்பதின் சுகாதாரக் குறைவும்.

இவ்வுண்மைகளைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நன்கு உணர்ந்திருந்த இந்துக்களும் பௌத்த

சமணர்களும் ஆவி உடம்பு பிரிந்த பின் இப்பூவுலகில் கிடக்கின்ற சடலத்தைச் சுட்டெரிப்பதே சுகாதாரத்திற்கும், உலக நலத்திற்கும் உகந்தது என்று கண்டு ஆயிரக்கணக்கான சடலங்களை ஆயிரக்கணக்கான வருஷங்களாக ஒரே இடத்தில் மூட்டம் வைத்தோ, நெருப்பால் சுட்டோ சாம்பலாக்கி வருகிறார்கள். ஆனால் ஒரு சில இந்து அன்பர்களும், இஸ்லாமிய அன்பர்களும், கிறிஸ்துவ அன்பர்களும் இதனுடைய உண்மையை அறியாமல் தூல உடலைப் பூமியிலே புதைத்து வைக்கிறார்கள். அவ்வாறு புதைத்த உடல், சில வருடங்களில் புழு அரித்து அழிந்து போவதைக் கண்ணாரக் கண்டும், தோண்டிப் பார்த்துத் தெரிந்தும்கூட, பின்னால் எழுப்பப்பெறும் என்ற பிடிவாதமான நம்பிக்கையோடு, துர்நாற்றமே தனது சொந்த சுபாவமான தூல உடலைப் பந்தோபஸ்து செய்து, பத்திரப்படுத்துவதாகக் கருதிக்கொண்டும், காத்துக்கொண்டுமிருக்கிறார்கள். அவ்வாறு செய்வது உலகமக்களின் சுகாதாரத்தை எவ்வளவு பாதிக்கக் கூடியதென்பதையும், பூமியிலே ஊறுகின்ற குடிதண்ணீரை அது எவ்வளவு கெடுக்கக்கூடியதென்பதையும், விஞ்ஞானத்தில் தலைசிறந்திருப்பதாகச் சொல்லிக்கொள்கின்ற மேல்நாட்டவரே இந்த இருபதாம் நூற்றாண்டிலும் உணரவில்லையென்றால், அவர்களைப் பின்பற்றுகின்ற நமது இதர அன்பர்களை நாம் என்ன சொல்ல இருக்கிறது? இந்துக்கள் சமாதியில் அமர்த்துகின்ற முறையும் அதற்குரிய காரணமும் வேறாகும்.

## 54. பொறிக்கும் புலனுக்கும் உள்ள வேறுபாடு.

பொறிக்கும் புலனுக்கும் வேறுபாடு உண்டு. ஆவி உடலிலுள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய அகஞானேந்திரியங்கள் புலன்களாகின்றன. ஸ்தூல உடலிலுள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய புறஞானேந்திரியங்கள் பொறிகளாகின்றன. பாரமில்லாத ஆவி உடலிலுள்ள புலன்கள், ஸ்தூல உடலிலுள்ள பொறி

களின் உதவியின்றி யாவற்றையும் அறிய முடிவதை சொப்பன அனுபவம் கொண்டு உணர்கிறோம். ஆனால் ஸ்தூல உடலிலுள்ள பொறிகள் ஆவி உடலிலுள்ள புலன் களின் உதவியின்றி ஒன்றையும் அறியமுடியாது. ஆகையால் பாரமில்லாத ஆவி உடம்பே நமது உண்மை யான உடலாகிறதென்பதும், அதனாலேயே உயிர் யாவற் றையும் அறிந்துகொண்டிருக்கிறதென்பதும் தெளிவாகும்.

மேலும், சொப்பனத்தில் சகல அவயவங்களோடும் தொழிற்படுகின்ற ஆவி உடம்பே, (சூக்கும சரீரமே) நமது உண்மையான சரீரமென்பதை, சாமானியரும், சாஸ்திரக் கண்கொண்டு பார்க்கிறவர்களும் ஒப்புக்கொள்வதற்கு, கீழ்கண்ட விளக்கம் பெரிதும் பயனுடையதாக இருக்கும் என்று நம்புகிறோம்.

## 55. ஸ்தூல ஞானேந்திரியங்களின் விளக்கமும், ஸ்தூல கன்மேந்திரியங்களின் விளக்கமும்.

நமது ஜீவான்மாவானது உள்ளுடம்பாகிய சொப்ப னம் காணுகின்ற ஆவிஉடலில் புருவ மத்தியாகிய லலாடஸ் தானத்தில் நின்று, தூலஉடலோடு சேர்ந்து தொழிற்படும் பொழுது, தூலஉடலின் கழுத்திற்கு மேலே உள்ள, காது, கண், மூக்கு, நாக்கு, தலையின் பின்புறமுள்ள உணர்ச்சி தரும் நரம்பு முதலியன எல்லாம் நன்றாய்த் தொழிற்படுகின் றன. ஆதலால் உடம்பு முழுவதும் முழு உணர்ச்சியுடன் தொழிற்படுகிறது. அது சாக்கிர அவஸ்தை எனப்பெறும். ஆன்மாவினது தொழிற்பாடு சொப்பன உடலில் புருவ மத்தியில் இருந்து கழுத்தின் மத்தியாகிய கண்ட ஸ்தானத் திற்கு இறங்கி இருக்கும்பொழுது காதுகள் கேளாமலும், கண்இமைகள் கீழே விழுந்தும், கண்கள் மூடப்பெற்றும் கழுத்து நேரே நிற்கமுடியாமலும், நமது மண்டையானது முன்பக்கமோ, இடப்பக்கமோ, வலப்பக்கமோ ஆட்டம் போடவும் ஆரம்பிக்கின்றது. அப்பொழுது தூலஉடலி

லுள்ள தோலுணர்வு, தொடுதலை அறியமுடியாமலும், நாஉணர்வு ருசியை அறியமுடியாமலும், மூக்குணர்வு வாசனையை அறியமுடியாமலும், கண்ணுணர்வு பார்வையை அறியமுடியாமலும், காதுணர்வு கேட்பதை அறியமுடியாமலும் நின்றுவிடுகின்றன. தூலஉடலிலுள்ள இவற்றிற்குத் தமிழில் முறையே மெய் (உடல்) வாய் (நாக்கு) மூக்கு, கண், செவி (காது) என்றும், அறிகருவிகள் என்றும் சொல்லப்பெறும். இவற்றிற்கு வடமொழியில் முறையே துவக்கு (மெய்) சிங்நுவை (நாக்கு) ஆக்கிராணம் (மூக்கு) சட்சு (கண்) சுரோத்திரம் (காது) என்றும், ஞானேந்திரியங்கள் என்றும் சொல்லப்பெறும். மேலும் தூங்கும்பொழுது தூலஉடலிலுள்ள கைகள் வேலை செய்யாமலும், கால்கள் நடவாமலும், வாய் பேசாமலும், மலங்கழிக்கும் உறுப்பும், ஜலம் கழிக்கும் உறுப்பும் தொழிற்படாமலும் கிடக்கின்றன. தூலஉடலிலுள்ள இவற்றிற்குத் தமிழில் முறையே கை, கால், வாய், எருவாய், கருவாய் என்றும், தொழிற் கருவிகள் என்றும் சொல்லப்பெறும். இவற்றிற்கு வடமொழியில், பாணி, பாதம், வாக்கு, பாயு, (மலவாய்) உபத்தம் (கருவாய்) என்றும், கன்மேந்திரியங்கள் என்றும் சொல்லப்பெறும். சாஸ்திரங்களில் முன்னைய ஐந்தும், ஞானேந்திரியம் அல்லது அறிகருவிகள் என்றும், பின்னைய ஐந்தும், கன்மேந்திரியம் அல்லது தொழிற்கருவிகள் என்றும் சொல்லப்பெறும்.

## 56. சூக்கும ஞானேந்திரிய கன்மேந்திரியங்களின் விளக்கம்.

சொப்பனம் காணும்பொழுது தூலஉடலிலுள்ள மேலே சொன்ன தூல ஞானேந்திரியம் ஐந்தும் தூலகன்மேந்திரியம் ஐந்தும் ஆகிய பத்துக் கருவிகளும், தொழிற்படாதிருந்தாலும், சொப்பனம் காணுகின்ற உடலிலுள்ள தோலுணர்வு, நாவுணர்வு, மூக்குணர்வு, கண்ணுணர்வு, செவியுணர்வு, ஆகிய சூக்கும ஞானேந்திரியம் (அறிகருவி

கள்) ஐந்தும், அந்த உடலிலுள்ள கை, கால், வாய், எரு வாய், கருவாய் ஆகிய சூக்குமகன்மேந்திரியங்கள் (தொழிற்கருவிகள்) ஐந்தும் தொழிற்படுவதை அனுபவத்தில் காண்கின்றோம்.

இவற்றை சாஸ்திரங்களில் விஷயத்தை அறிகின்ற விஷய தன்மாத்திரைகள் ஐந்து என்றும், காரியப்படுத்துகின்ற காரியதன்மாத்திரைகள் ஐந்து என்றும் சொல்லப்பெறும். சொப்பனம் காணுகின்ற உடலிலுள்ள விஷயதன்மாத்திரைகளுக்கு முறையே தமிழிலும் வடமொழியிலும், தொட்டு அறிதல் (ஸ்பரிசம்,) சுவைஅறிதல் (ரசம்,) வாசனை அறிதல் (கந்தம்,) பார்த்தல் (ரூபம்) கேட்டல் (சப்தம்) என்று சொல்லப்பெறும். காரியதன்மாத்திரைகளை முறையே தமிழிலும் வடமொழியிலும் கொடுத்தல் (தானம்,) நடத்தல் (கமனம்) பேசுதல் (வசனம்) மலம் கழித்தல் (விசர்க்கம்), இன்பம் நுகருதல் (ஆனந்தம்) என்று சொல்லப்பெறும்.

## 57. அந்தக் கரணங்களும் தசவாயுக்களின் விளக்கமும்.

நம்முடைய மனம், புத்தி, சித்தம், அகங்காரம், என்று சொல்லப்பெறுகின்ற அந்தக் கரணங்கள் நான்கும், ஜீவான்மாவும், நமது சொப்பனம் காணுகின்ற உடலிலேயே இருக்கின்றனவென்று முன்னரேயே குறிப்பிட்டிருக்கிறோம். ஜீவான்மாவானது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நுட்பமான கருவிகளின் துணைகொண்டு சொப்பன உடலை இயக்குவதற்கு பத்து விதமான சக்திகள் (Vital Forces) இருக்கின்றன. அவற்றை 'தசவாயுக்கள்' என்று சொல்லுவார்கள். அவற்றின் பெயர்களும் தொழில்களும் ஊன்றிக் கவனிக்கத் தக்கன:—

(1) பிராணன்:— இருதயத் துடிப்பையும், சுவாசத்தையும், இயக்கும் சக்தி. பிறக்கும்பொழுது நிமிஷத்திற்கு 130 முதல் 150 துடிப்புகள் வரை இருந்து, வளர்ச்சி

அடைய அடைய வாலிபர்களுக்கு 80 துடிப்புகளும் பெரியோர்களுக்கு 72 துடிப்புகளும் இருக்கின்றன. சுவாசம் ஜனன காலத்தில் நிமிஷத்திற்கு 40 தடவைகளாக இருந்து படிப்படியாகக் குறைந்து 18 வயது முதல் நிமிஷத்திற்கு 15 தடவைகளாகி விடுகின்றது. இருதயத் துடிப்பிற்கும் சுவாசம் (மூச்சு) விடுவதற்கும் சம்பந்தமே கிடையாது. சுவாசம் விடாதிருந்தாலும், இருதயத் துடிப்பு உண்டு. குழந்தையானது தாயின் வயிற்றினுள் இருக்கும்பொழுதே, ஐந்தாவது மாதத்திற்கு மேல், அதற்கு இருதயத் துடிப்பு ஏற்படுகிறது. தாயின் துடிப்பு துரிதக்குறைவாகவும் கருப்பத்திலிருக்கிற குழந்தையின் துடிப்பு துரிதமுடையதாகவும் இருப்பதைக் கேட்கலாம். ஆகையால் காற்றை நாம் (மூக்காலும் வாயாலும்) சுவாசிப்பது வேறு, இருதயத்துடிப்பு தானகவே பிராணன் என்ற சக்தியால் நிகழ்வது வேறு என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

(2) அபானன்:— உந்தி என்கிற தொப்புளுக்குக் கீழ் குதத்திலும், குய்யத்திலும் நின்று, மல ஜலம் கழிக்கச் செய்யும் சக்தி.

(3) வியானன்:— உடலிலுள்ள பொருத்துக்கள் அனைத்திலும் நின்று, களைப்பும் தாகமும் உண்டாக்கும் சக்

(4) உதானன்:— நாபியில் நின்று உண்ணும் உணவை உதிரமாக்கி நரம்பில் ஊட்டி, உடலை வளர்க்கும் சக்தி.

(5) சமானன்;— நரம்புகள் அனைத்திலும் நின்று அவற்றை இயக்கி இன்பம் நுகர்விக்கும் சக்தி.

(6) நாகன்:— தொண்டையுள் நின்று, விக்கலும், கொட்டாவியும் உண்டாக்குகின்ற சக்தி.

(7) கூர்மன்;— கண்களில் நின்று விழித்தலும், இமைத்தலும், பார்த்தலும் செய்விக்கும் சக்தி.

(8) கிருகரன்:— முளிப்பூட்டு அனைத்திலும் நின்று, நீட்டலும், முடக்கலும், கிளர்தலும் செய்விக்கும் சக்தி.

(9) தேவதத்தன்:— ஓசையினால் உடல் திடுக்கிடுதலும், பயத்தினால் வியர்த்தலும், சந்தோஷத்தினால் புளகாங்கிதம் கொள்ளுதலும், கோபத்தினால் கொதிப்பை உண்டு பண்ணுதலும் செய்விக்கின்ற சக்தி.

(10) தனஞ்செயன்:— உடல் முழுதும் தசைகள் பருத்தல், சிறுத்தல், ஆகியவைகளுக்குக் காரணமாயிருக்கும் சக்தி. சிலர் இதை இறந்த பின் சடலம் வீங்க, மூன்றாம் நாள் கபாலம் வெடித்துப் பிரிவது என்கின்றனர். அது அனுபவத்திற்குப் பொருந்தாமல் இருக்கிறது. மேலும் இறந்தபின் நமக்கு இருக்கிற ஆவி உடலின் இயக்கத்திற்கு, தசவாயுக்களும் இன்றியமையாதனவாயிருக்க, ஆவி பிரிந்த பின் பத்து வாயுக்களில் ஒரு வாயு இவ்விடம் தனித்து நின்றுவிடுமென்பதும் பொருத்தமில்லாதிருக்கிறது. சொப்பன உடலில் தசவாயுக்களும் தொழிற்படுகின்றனவென்று சாஸ்திரங்கள் கூறுவதாலும், அந்த உடலிலுள்ள முழு அவயவங்களும் இறந்த பின்னரும் இயங்கிக் கொண்டிருப்பதாலும், தசவாயுக்களில் ஒரு வாயு மாத்திரம் ஆவி உடலோடு போகாமல், தூலஉடலில் நின்றுவிடுகின்றது என்று சொல்லுவதும். சற்காரிய வாதத்திற்குப் பொருந்தாதிருக்கிறது. ஆவி உடலிலிருந்து உயிர் பிரிகின்ற நிலை ஆவி உலகத்திலே நிகழ்வதாதலால், அங்கு என்ன நடக்கிறதென்று தெரியவில்லை.

## 58. ஆவி உடம்பின் தொழிற்பாட்டாலேயே தூல உடம்பு தொழிற்படுவதின் விளக்கம்.

ஜீவான்மாவும், அந்தக்கரணங்கள் நான்கும் மேலே சொன்ன வாயுக்கள் பத்தும் சூக்கும உடலிலுள்ள சூக்கும

ஞானேந்திரியம் ஐந்தும், சூக்கும உடலிலுள்ள சூக்கும கன்மேந்திரியங்கள் ஐந்துமாக மொத்தம் இருபத்தைந்து தத்துவங்கள் சொப்பனம் காணுகின்ற உடலில் தொழிற் படுகின்றன. சொப்பனம் காணுகின்ற உடலானது தூல உடலிலுள்ள தோலின் உதவியின்றி சொப்பன உடலிலுள்ள சூக்குமத் தோலால் ஸ்பரிசத்தை உணரமுடிகின்றது. தூல நாவின் உதவியின்றி சூக்கும நாவால் ருசியை உணருகின்றது. தூல நாசியின் உதவியின்றி சூக்கும நாசியினுல் நாற்றத்தை உணருகின்றது. தூலக்கண்களின் உதவியின்றி சூக்குமக் கண்களால் பொருள்களைக் காணுகின்றது. தூலக்காதுகளின் உதவியின்றி சூக்குமக் காதுகளால் சப்தத்தைக் கேட்கின்றது. தூலவாய் தொழிற்படாதிருக்க சூக்கும வாய் பேசுகின்றது. தூலக்கால்கள் படுக்கையில் கிடக்க, சூக்குமக்கால்கள் நடத்தல், ஓடுதல், நிற்றல், உட்காருதல், படுத்தல் முதலான செய்கைகளைச் செய்கின்றன. தூலக்கைகள் படுக்கையில் கிடக்க, சூக்குமக் கைகள் கொடுக்கல், வாங்கல், அணைத்தல், அறைதல் முதலிய செயல்களைச் செய்கின்றன. தூல எருவாய் தொழிற் படாதிருக்க, சூக்கும எருவாய் மலம் கழிக்கின்றது. தூலக் கருவாய் தொழிற்படாதிருக்க, சூக்குமக் கருவாய் ஆனந்தித்து இன்பம் நுகர்கின்றது.

ஆகவே சொப்பனத்தில் சூக்கும உடலிலுள்ள ஞானேந்திரிய, கன்மேந்திரியங்களின் தொழிற்பாட்டில் ஏற்பட்ட ஆத்திரமான செயல்கள் எல்லாம், தூல உடலிலுள்ள அந்தந்த அவயவத்தைப் பிரதிபலிக்கச் செய்வதால் சூக்கும உடலாகிய சொப்பன உடல் தொழிற்படுவதற்கு தூல உடலிலுள்ள எந்த அவயவத்தின் உதவியும் அவசியமில்லை என்பதாகிறது. ஆனுல் தூல உடலிலுள்ள எல்லா விதத் தொழிற்பாட்டிற்கும், சொப்பன உடலில் உள்ள ஞானேந்திரிய, கன்மேந்திரியங்களும், சொப்பன உடலிலுள்ள தசவாயுக்களும், அவ்வுடலிலுள்ள அந்தக்கரணங்கள் நான்கும், அந்த உடலிலுள்ள ஜீவான்மாவும் தொழிற்

பட்டே ஆகவேண்டும். இவையெல்லாம் எல்லோருக்கும் அவரவருடைய சொந்த அனுபவம் கொண்டு சரிபார்த்து ஏற்றுக்கொள்ளக்கூடிய உண்மைகளே.

ஆதலினாலே, தூல உடலிலுள்ள தோலுணர்வு, சொப்பன உடலிலுள்ள சூக்குமத் தோலின் தொழிற் பாட்டாலேயே உண்டாகிறது. அதுபோலவே தூல உடலில் ஏற்படுகின்ற ருசி, நாற்றம், பார்வை, கேள்வி ஆகிய எல்லாம் சொப்பன உடலிலுள்ள அந்தந்த சூக்கும ஞானேந்திரியத் தொழிற்பாட்டாலேயே ஏற்படுகின்றன என்பதை அறிதல் வேண்டும். இனித் தூலக்கால்களின் அசைவும், கைகளின் அசைவும், வாய் பேசுதலும், எருவாய் மலங் கழித்தலும், கருவாய் இன்பம் அநுப வித்தலும், சொப்பன உடலிலுள்ள சூக்குமக்கால், கை, வாய், எருவாய், கருவாய் ஆகியவற்றின் தொழிற் பாட்டாலேயேதான் ஏற்படுகின்றன என்பதை அறிதல் வேண்டும்.

சொப்பனத்திலே, தூல உடலிலுள்ள தூலஞானேந் திரியம் ஐந்தும், தூலகன்மேந்திரியம் ஐந்தும் தொழிற் படாததாலேதான், சொப்பன உடலுக்குத் தத்துவம் இருபத்தைந்து என்று சாஸ்திரங்களில் சொல்லப்பெற் றிருக்கின்றன. சாக்கிரம் என்கின்ற விழிப்பு நிலையில் தூல உடலிலுள்ள ஞானேந்திரியங்கள் ஐந்தும் கன்மேந்திரியங் கள் ஐந்தும் தொழிற்படவேண்டுமானால் சூக்கும உடலா கிய சொப்பன உடலைத் தொழிற்படுத்துகின்ற இருபத் தைந்து தத்துவங்களும் தொழிற்பட்டே தீரவேண்டும். அதனாலேயே சாக்கிரத்திற்கு தூலத்திலுள்ள பத்தும் சூக்குமத்திலுள்ள இருபத்தைந்தும் சேர்த்து ஆக முப்பத் தைந்து தத்துவங்கள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன:-

> ''சாக்கிரம் முப்பத்தைந்து ''நுதலினில்'', கனவு தன்னில்
> ஆக்கிய இருபத்தைந்து, ''களத்தினில்'' சுழுனை மூன்று

நீக்கிய இதயந்தன்னில், துரியத்தில் இரண்டு நாபி
நோக்கிய துரியாதீத நுவலின், மூலத்தில் ஒன்றே.''
சிவஞானசித்தியார் (223)

(''நுதலினில்'' என்றால் புருவ மத்தியாகிய லலாடஸ்தானத்தில் என்பது பொருளாகும். ''களத்தினில்'' என்றால் கண்டஸ்தானத்தில் என்பது பொருளாகும்)

இதனை விளக்கியே திருமூலர்,

''இந்திரியம் ஈரைந்து ஈரைந்து மாத்திரை,
மந்திரமாய் நின்ற மாருதம் ஈரைந்தும்,
அந்தக்கரணம் ஒருநான்கும் ஆன்மாவும்
பந்தவச் சாக்கரப் பாலது வாகுமே.'' என்று கூறியிருக்கின்றார். திருமந்திரம் (2144)

இதன்பொருள்;- தூலஉடலிலுள்ள ஞான இந்திரியம் 5. கன்ம இந்திரியம் 5. ஆகப் பத்து; ஆவி உடலிலுள்ள விஷய தன்மாத்திரை எனப்படும் அகஞானேந்திரியம் 5. காரியதன் மாத்திரை எனப்படும் அகக்கன்மஇந்திரியம் 5. ஆகப்பத்து; ஆவிஉடலிலுள்ள தசவாயுக்களெனும் பத்து; ஆவி உடலிலுள்ள அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்கார மெனும் நான்கு; ஜீவான்மாவாகிய புருஷன் ஒன்று; ஆகவே தூல உடலின் தொழிற்பாடாகிய சாக்கிரத்தில் மேலே சொன்ன 35 தத்துவங்கள் தொழிற்படுகின்றன என்கிறார், திருமந்திரத்தில் திருமூலநாயனார். அவற்றுள் தூலஉடலிலுள்ள ஞானஇந்திரியம்ஐந்தும். கன்மஇந்திரியம் ஐந்தும்,பொறிகள் என்றபெயர்பெற்றுத் தூங்கும்பொழுது உணர்ச்சியற்று, செயலற்றுக் கிடக்கின்றன சொப்பனம் காணும்பொழுது ஆவிஉடலிலுள்ள விஷயதன்மாத்திரை ஐந்து, காரியதன்மாத்திரை ஐந்து ஆகிய பத்தும் புலன்கள் எனப் பெயர்பெற்று கனவில் தொழிற்படவும், அந்த உடம்பில் அவை தொழிற்படுவதற்கு வேண்டிய பத்து வாயுக்

களும், அந்தக்கரணங்கள் நான்கும் தத்தம் வேலைகளைச் செய்யவும், ஜீவான்மாவாகிய புருஷன் 25 தத்துவங்களோடு தொழில் புரிந்து வருகின்றான் என்பதாகும்.

59. புரியட்டக சரீரம், யாதனா சரீரம், பூதனா சரீரம் என்பவற்றின் விளக்கமும் அவற்றுள் யாதனா சரீரமே ஆவிஉடம்பு என்பதன் விளக்கமும்.

இனி சித்தாந்த சாஸ்திரங்களில் கூறப்பெற்று வருகின்ற புரியட்டகம் எனப்படும் ரூபமும், அவயவமும் இல்லாத அணுப்பிரமாணமுள்ள (காரண) சூக்கும சரீரத்திற்கும், யாதனாசரீரம் எனப்படும் ரூபமும் அங்க அவயவமும் உள்ள ஆவி உடம்பாகிய சூக்கும சரீரத்திற்கும்; பூதனா சரீரம் எனப்படும் ஸ்தூல உடம்பிற்கும் உள்ள சம்பந்தா சம்பந்தமும் சந்தேகத்திற்கு இடமின்றி தெரிந்து, தெளிந்து கொள்ளுதல் அவசியம்.

நமக்கு ஸ்தூல, சூக்கும, குண, கஞ்சுக, காரண சரீரங்களாகிய ஐந்து சரீரங்கள் உண்டு. அவற்றுள் ஸ்தூல உடம்பு விழிப்பு நிலையில் காணக்கூடியது. ஆவி உடம்பாகிய சூக்குமசரீரம் சொப்பன நிலையில் காணக்கூடியது. மற்ற மூன்றும் காணமுடியாதவை. ஒருவருடைய குணத்தையும், இச்சையையும், அறிவையும் கண்ணால் காணமுடியாதல்லவா? அம்மூன்றும் புரியட்டகமாகிய காணமுடியாத சூக்கும சரீரத்தைச் சார்ந்தது. அம்மூன்றில் காரண சரீரத்தில் அறிவு மட்டும் தொழிற்படும். அறிவைப் பொருத்து இச்சையும், இச்சையைப்பொருத்து குணமும், குணத்தைப்பொருத்து யாதனா சரீரத்தின் (ஆவி உடலின்) செயலும் ஏற்படுகின்றன. யாதனாசரீரத்தின் தனிப்பட்ட செயல் சொப்பன நிலையிலும், அது பூதனாசரீரத்தோடு (தூல உடலோடு) சேர்ந்து செய்யும் செயல் விழிப்பு நிலையிலும் ஏற்படுகின்றன.

ஆகவே குணசரீரம், கஞ்சுக சரீரம், காரண சரீரம், ஆகிய மூன்று சரீரங்களையும் ஒன்று சேர்த்து கண்ணுல் காணமுடியாத அணுப்பிரமாணமுள்ள அங்க அடையாளங்கள் இல்லாத புரியட்டக சரீரம் என்றும், அது மனம், புத்தி, அகங்காரம், தன்மாத்திரை ஐந்து ஆக எட்டும் கூடியது என்றும் அணுப்பிரமாணமுள்ளது என்றும், சூக்கும சரீரம் என்றும், அது சிருஷ்டிகாலம் தொட்டு சங்கார காலம்வரை அழியாதிருக்குமென்றும் சித்தாந்த சாஸ்த்திரம் கூறுகின்றது. ஆனுல் கனவில் தொழிற்படுகின்ற யாதன சரீரமாகிய சூக்குமசரீரமோ (ஆவிஉடல்) சொப்பன நிலையில் காணப்பெறுவது; அங்க அடையாளங்கள் உள்ளது; பெயருடையது; ஆண்–பெண் என்ற வேற்றுமையுடையது; சுட்டி அறியக்கூடியது; மேலே விவரித்திருக்கின்ற 25 தத்துவங்களும் கொண்டது; ஆவி உலகில் அழிக்கப் பெறுவது.

ஆனதால் நாம் சொல்லிவருகின்ற யாதன சரீரமாகிய சூக்கும சரீரம் (ஆவிஉடல்) வேறு. புரியட்டக சரீரமென்று சித்தாந்த சாஸ்த்திரத்தில் சொல்லிவருகின்ற (காரண) சூக்கும சரீரம் வேறு. பூதன சரீரமாகிய ஸ்தூல உடலிற்குள்ளே, யாதன சரீரமாகிய (ஆவி உடல்) கனவில் காணக்கூடிய சூக்கும சரீரமும், அந்த யாதன சரீரத்திற்குள்ளே புரியட்டக சரீரமாகிய காணமுடியாத சூக்கும சரீரமும், அந்த புரியட்டக சரீரத்திற்குள்ளே புருஷனுகிய உயிரும் அமர்ந்து ஒரு சரீரத்தின்மூலம் மற்றைய சரீரங்களைத் தொழிற்படுத்தும்படி ஆண்டவன் செய்திருக்கிருன்.

இந்த உலகத்தில் உயிர் வாழ்வதற்கு பூதன சரீரம் (ஸ்தூல சரீரம்) இன்றியமையாதது. அதை இயக்கித் தொழிற்படுத்த யாதன சரீரம் அல்லது கனவில் காணுகின்ற ஆவி உடலாகிய சூக்கும சரீரம் இன்றியமையாதது. அது நாம் இறந்த பின் வாழ்வதற்கும், முந்திய பெயரோடும், உறவின்முறையோடும் திகழ்வதற்கும், அங்குள்ள

இன்ப துன்பம் அநுபவிப்பதற்கும் இன்றியமையாதது. இனி ஆவி உலகத்தில் அந்த ஆவி உடலாகிய கனவில் காணும் சூக்குமசரீரம் (யாதனு சரீரம்), அழிக்கப்பெறும் போது முந்தின உருவம் போய், முந்தின பெயரும் போய், முந்தின இனமுறைகளும் போய்விடுகின்றன. அன்றுதான் உண்மையாக ஒருவன் இறக்கின்றான். அந்த உடம்பிற் குள்ளிருந்த அணுப்பிரமாணமுள்ள, காணமுடியாத சூக்கும சரீரமாகிய புரியட்டக சரீரத்தோடு உயிரானது மேல்நிலையெய்தி பிறவியற்று இருக்கவோ, அதற்குத்தகுதி இல்லாத உயிர், ஆண்டவனது ஆணைப்படி அதனுடைய வினைக்கீடாக இன்னொரு யோனியில் போடப்பெற்று, வேறு உருவமும், வேறு பெயரும் கொண்டு பிறக்கவோ செய்கிறது. அதனாலேயே புரியட்டகசரீரம் அணுப்பிரமாண முள்ளதும், சிருஷ்டிகாலம்தொட்டு சங்காரகாலம் வரை அழியாதிருப்பதும் என்று சொல்லப்பெறுகின்றது.

ஆவி உடலாகிய கனவில்காணும் சூக்குமசரீரம் இவ் வுலகத்தில் வாழும்பொழுது ஸ்தூலசரீரமாகிய கனத்த சட்டையைப்போட்டுக்கொண்டு, சகல இன்பதுன்பங்களை யும் உயிரை அனுபவிக்கச்செய்ய ஏதுவாக இருக்கிறது. அவரவர்களுக்குக் குறித்த கால எல்லையில் அவரவர் இந்த ஸ்தூல சரீரமாகிய கட்டையைப்போட்டுவிட்டு, ஆவி உலகம் சென்று, ஆவி உடலோடு வாழ்கின்றார்கள். அங்கும், இன்ப துன்பம் அனுபவிக்க வேண்டிய காலம் வரை அனுபவித்து, அதன் பின்னர் ஆவிஉடலும் அங்கு அழிக்கப்பெற்றுவிடுகிறது. ஆகவே ஒவ்வொரு பிறவியி லும் ஒருவருடைய ஸ்தூலசரீரம் இவ்வுலகத்திலும், கன வில் காணும் சூக்குமசரீரமாகிய ஆவிஉடல் ஆவிஉலகத்தி லும் அழிக்கப்பெறுகின்றன. ஆனால் காணமுடியாத சூக்குமசரீரமாகிய புரியட்டக சரீரமோ, சிருஷ்டிகாலம் தொட்டு சங்காரகாலம் வரை அணுப்பிரமாணமாகவே இருக்கக் கூடியது. உயிர்களோ என்றும் அழியாதிருப்பன. கடவுள் என்று உண்டோ, அன்றே உயிர்களும் உண்டு.

உயிர்கள் கடவுளால் படைக்கப்பெற்றவைகள் அல்ல;. அவற்றிற்குரிய உடல்கள்தான் கடவுளால் கொடுக்கப் பெறுபவை.

60. பஞ்சகோசங்களின் **விளக்கமும்**, அவற்றுள் பிராணமய கோசமே ஆவிஉடம்பு என்பதன் **விளக்கமும்.**

நமக்குரிய ஐந்து சரீரங்களையும். ஐந்து கோசங்களாகக் கூறுவதும் உண்டு. அவற்றுள் முதலாவது, மேலே உள்ள நமது ஸ்தூலசரீரம், அன்னத்தால் போஷிக்கப்பெறுவதால் "அன்னமயகோசம்" என்று சொல்லப்பெறுகிறது. அதை அடுத்து, நமது இரண்டாவது சரீரமாக இருக்கிற கனவில் காணும் சூக்குமசரீரமாகிய, ஆவிஉடல் அல்லது யாதனாசரீரம். மேலே விவரித்திருக்கின்ற பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்று சொல்லப் பெறும் தசவாயுக்களோடும். அகஞானஇந்திரியம், அகக் கன்ம இந்திரியம் ஆகிய பத்தோடும், அந்தக் கரணங்கள் நான்கோடும், உயிரோடும் நிலைபெற்று வருவது. பிராணன் முதலிய வாயுக்களைக் கொண்ட காரணத்தால் அது பிராணமயகோசம் என்று சொல்லப்பெறுகிறது. நமது மூன்றாவது சரீரமாகிய குணசரீரம், சாத்விகம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களினால் ஆகிய சரீரம். அது மனம் முதலிய அந்தக்கரணங்களின் தொழிற்பாட்டால் அமைவதால் அது மனோமயகோசம், என்று சொல்லப் பெறுகின்றது. நமது நான்காவது சரீரமாகிய கஞ்சுக சரீரம், காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் தத்துவங்களால் உந்தப்பட்டு அறிவு சொரூபமாக இருக்கிற ஆன்மாவுக்குச் சிறப்பு வகையால் இச்சைகளை விசேஷமாக உண்டாக்குவதால் விஞ்ஞானமய கோசம், என்று சொல்லப் பெறுகின்றது. விஞ்ஞானம் என்றால் விசேஷமான அறிவு என்பதாகும். இறுதியாக நமது

ஐந்தாவது சரீரமாகிய காரணசரீரம். அச்சரீரத்தைப் பெறுவதற்குமுன் கேவலநிலையில், தொழிற்படுவதற்கு ஒன்றும் இன்றி நின்ற ஆன்மாவுக்கு, அறிவு, இச்சை செயல்கள் பொது வகையால் விளக்கமுறச்செய்ய முதற்காரணமாயிருத்தலால் அது காரண சரீரமென்றும், அம்மயக்க அறிவால் ஓர் ஆனந்தம் உண்டாவதால் அது ஆனந்தமய கோசம் என்றும் சொல்லப் பெறுகின்றது.

**61. ஆவிஉடம்பையே சாஸ்திரங்கள் யாதனு சரீரமென்றும், சூக்கும சரீரம், பிராணமய கோசமென்றும், கூறுவதின் உண்மை.**

ஆனந்தமய கோசத்தையும் விஞ்ஞானமய கோசத்தையும் மனோமய கோசத்தையும் யாரும் கண்ணால் பார்க்க முடியாது. பிராணமய கோசத்தை (ஆவிஉடலை அல்லது யாதனு சரீரத்தை) கனவில் தொழிற்படும் பொழுது பார்க்கலாம். அன்னமய கோசத்தை விழிப்பு நிலையில் பார்க்கலாம்; காணமுடியாததாகவும், பிறருக்கு காட்ட முடியாததாகவும் உள்ள ஆனந்தமய கோசத்தையும் விஞ்ஞானமய கோசத்தையும், மனோமய கோசத்தையும் ஒன்று சேர்த்து புரியட்டக சரீரம் அல்லது (காரண) சூக்கும சரீரம், என்று சித்தாந்த சாஸ்த்திரங்கள் கூறுகின்றன.

ஆகவே புரியட்டக சரீரம் என்பது நமது உடலினுள்ள ஐந்து சரீரங்களில் மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது சரீரங்களான மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் ஆகியவைகளை மொத்தமாகக் குறிக்கும் காரண சூக்கும சரீரம் ஆகும். ஆவிஉடல் என்பதும், யாதனு சரீரம் என்பதும், பிராணமய கோசம் என்பதும், சாதாரணமாக சூக்கும சரீரம் எனப்படும் இரண்டாவது சரீரத்தைக் குறிக்கும் அன்னமய கோசம் என்பதும், பூதனு சரீரம் என்பதும் இப்பூவுலகில் காணும் பாரமுள்ள

மூதலாவதான மேலேயுள்ள சரீரத்தைக்குறிக்கும்.இவற்றை யாவரும் சந்தேக விபரீதமின்றி தெளிந்து கொள்ளல் வேண்டும்.

இந்த உண்மைகளை இடித்துரைக்கவே திருமூலர் திரு மந்திரத்தில் கீழேகண்ட விளக்கம் கொடுத்திருக்கிறார்.

''உடம்பும் உடம்பும் உடம்பைத் தழுவி,
உம்பிடை நின்ற உயிரை அறியார்,
உடம்போடு உயிரிடை நட்பறியாதார்,
மடம் புகு நாய்போல் மயங்குகின்றாரே''

திருமந்திரம் (2148)

இதன் பொருள்:- ஸ்தூல சரீரமும், கனவில் காணும் சூக்கும சரீரமும், காணமுடியாத புரியட்டக சரீரத்தைத் தழுவியிருப்பதையும், அந்தப்புரியட்டக சரீரத்தில் உயிர் நின்று மற்றைய இரண்டு சரீரங்களையும் தொழிற்படுத்து வதையும் அறியாதவர்கள், உயிரானது புரியட்டக சரீரத்தின் சம்பந்தத்தைக் கொண்டு சூக்கும சரீரத்தோடு சம்பந்தப் படுவதையும், சூக்கும சரீரத்தின் சம்பந்தத்தைக் கொண்டு ஸ்தூல சரீரத்தோடு சம்பந்தப்பட்டு இருப்பதையும் அறி யாதவர்கள் ஆவார்கள். (இந்த உண்மையை அறியாதவர் கள் ஸ்தூல சரீரம் ஒன்றுதான் உண்டு. அதை உயிர் நேரடியாக இயக்குகிறதென்று மயக்கத்தால் கருதுகின்ற வர்கள்) அரிய பெரிய ஞானங்களைப்பெற வேண்டிய மடாலயத்திலே சென்று, அங்கு கிடக்கும் பதார்த்தங்களை உண்டு மயக்கமுறும் நாய்போல மயங்குகின்றார்களே என்பதாகும்.

மேலேசொல்லியிருக்கிற விளக்கங்களிலிருந்து உயிரோ என்றும் காணமுடியாதது; அதைப்போலவே புரியட்டக சரீரமும், அணுப்பிரமாணமுள்ளதும் உருவமற்றதுமான தால் அதுவும் நாம் காணமுடியாதது. பாரமுள்ள ஸ்தூல

உடலோ இவ்வுலகத்தில் அழியக்கூடியது. ஸ்தூல உடலி லுள்ள அவயவங்களெல்லாம் ஆவிஉடலிலுள்ள அவயவங் களாலேயே உண்டாகும்படி ஆண்டவன் செய்திருக்கிறான்; ஆனால் ஆவிஉடலும் அதிலுள்ள அவயவங்களும் இவ்வுல கத்திலுள்ள ஐம்பூதங்களாலும், அணுக்குண்டுகளாலும் அழிக்கப் பெறாதவை. அவ்வுடல் மரணத்தின் பின்னரும் தொடர்ந்து வாழ்ந்தும், வளர்ந்தும், இன்பதுன்பம் அனுப வித்தும் வரக்கூடிய அபூர்வமான பாரமில்லாத உடம் பென்பதும் தெளிவாகும்.

அந்த ஆவிஉடம்பிற்கோ உணவு தேவையில்லை. உறக்கம் தேவையில்லை, களைப்பாறத் தேவையில்லை. எங்கும் போக்குவரத்திற்கு வாகனாதிகளோ, ஊர்திகளோ, ரயில்களோ விமானங்களோ தேவையில்லை. இவ்வுலகத்தில் எந்தப் பாகத்திற்கும், சென்றுவர அனுமதிச் சீட்டுக்களும், இதர உத்தரவுகளும் தேவையில்லை. அதிலுள்ள கண்ணால் பார்ப்பதற்கு சூரியவெளிச்சத்தின் உதவியும், இதர விளக்கு வெளிச்சங்களின் உதவியும் தேவையில்லை. மனோவேகத் தில் எங்கும் செல்லக்கூடிய அப்பேர்ப்பட்ட விசித்திரமான, பாரமில்லாத ஆவிஉடம்பையே ஆண்டவன் நமது உண்மை யான உடம்பாகத்தந்து உதவியிருக்கின்றான் என்பதும் தெளிவாகும்.

. ஆவி உடம்பு ஆவி உலகில் அழிக்கப்பெற்றபின், தெய்வீகத் தன்மை எய்தாத உயிர், மறுபிறவி எடுப்பதற் கும், தெய்வீகத் தன்மை எய்திய உயிர், பிறவியற்ற மேல் நிலை அடைவதற்கும் 41-வது தலைப்பின் கீழ் 107-வது பக்கத்தில் திருமந்திரத்திலிருந்து மேற்கோள்கள் காட்டி விளக்கியிருக்கிறோம். அதனைக் கருத்தூன்றிப் படித்து உணர்ந்து கொள்க.

**62. ஆண்டவன் நமது அம்மையப்பன் ஆவதற்குக் காரணமும், உலகமக்கள் அனைவரும் சகோதர, சகோதரிகள் ஆவதற்குக் காரணமும்.**

நமக்கே பாரமில்லாத ஆவிஉடம்பை உண்மையான உடம்பாக ஆண்டவன் கொடுத்திருக்கிறபொழுது, விண்ணு லகத்தவரையும். மண்ணுலகத்தவரையும் ஆண்டு வருகின்ற ஆண்டவனது அருள் திருமேனிகளும் பாரமில்லாதவை களாக இருந்தால்தான் ஆட்சி செலுத்தமுடியும் என்பதை உணர்ந்துகொள்ளலாம். மேலும் இந்த உண்மையை உணர்ந்துகொள்ளும் அறிவுடையஎவரும், விநாயகப் பெரு மானைஒருபெருச்சாளி தாங்கமுடியுமா? முருகப்பெருமானை மயிலும், பாம்பும் தாங்க முடியுமா? மகா விஷ்ணுவைக் கருடன் தாங்கமுடியுமா? நடராஜப் பெருமான் ஒற்றைக் காலிலேயே நிற்கமுடியுமா? ஆறுமுகம் கொண்ட பெரு மான் எவ்வாறு மூக்கு நைந்துவிடாமல் படுத்திருக்கக் கூடும்? என்ற அசட்டுக் கேள்விகளைக் கேட்கத் துணியார்.

**63. இந்த ஆராய்ச்சி, அருளைத் தேடிக் கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தையும் பக்தியையும் தரும சிந்தனையையும், உண்டாக்கும் உண்மை.**

இவ்வுலகத்தில் நல்ல நிலைமையில் வாழ்வதற்குப் பொருள் எவ்வளவு இன்றியமையாததோ, அதற்கு நாம் எவ்வளவு முயற்சி எடுத்துக் கொள்ளுவோமோ, அது போலவே மரணத்திற்குப்பின் ஆவி உலகத்தில் நல்ல நிலைமையில் வாழ்வதற்கும், மறு ஜன்மம் ஏற்பட்டால் அதில் நல்ல அதிர்ஷ்டசாலிகளாகப் பிறப்பதற்கும், அருள் இன்றியமையாதது என்ற எண்ணம் உண்டாகும். அதற்கு நாம் மரணம் வருவதற்கு முன்னதாகவே, எவ்வளவுமுயற்சி எடுத்துக் கொள்ளக் கூடுமோ, அவ்வளவும் எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற ஆர்வமும் உண்டாகும். அந்த ஆர்வம் உண்டாகவே, தான் பாடுபட்டுத் தேடிய பொரு

ளில் ஓரளவையாவது பிறருக்குத் தானதர்மம் செய்து, அந்த அளவிலாவது, மரணம் வருவதன் முன் ஆண்டவனது அருளுக்குத் தன்னைப் பாத்தியப் படுத்திக் கொள்ள வேண்டுமென்ற தியாக உள்ளம் அரும்ப ஆரம்பிக்கும். கைப்பொருள் இல்லாதவர்கள் எவ்வாறு மனம், வாக்கு, காயம் என்னும் சரீர உழைப்பால் பொருள் தேடிக் கொள்ள முடிகிறதோ, அதேபோல கையில் பொருளில்லாதவர்களெல்லாம் சரீர உழைப்பினாலும், வாக்கினாலும், மனதினாலும், பிறருக்கு உபகாரம் செய்து அருளைத் தேடிக் கொள்ளலாமென்ற துணிவும் ஏற்படும்.

அதனாலேயே,

> ''ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
> செல்லும் வாயெல்லாம் செயல்''

என்று திருவள்ளுவர் அருளியிருக்கிறார். இறைவனது ஆலயம் சென்று வலம்வந்தும், அவனை வாயாரப் புகழ்ந்து பாடியும், ஆடியும், தியானித்தும், ஜெபித்தும், அருளைச் சம்பாதித்துக் கொள்ளலாம் என்று அறிந்தவர்களே அதற்குச் சலியாது ஈடுபடக்கூடியவர்களாவார்கள்.

## 64. இந்த ஆராய்ச்சி தீய காரியங்கள் செய்வதில் அச்சத்தை உண்டாக்கும் உண்மை.

இவ்வுலகில் பக்தியில்லாதவர்களும், ஒழுக்கமில்லாதவர்களும், தியாக உள்ளமும் தர்ம சிந்தனையும் இல்லாதவர்களும், இருள் உலகில் அடைக்கப் பெற்று, வருந்தும்படியான நிலை ஒன்று இருக்கிறது என்பதை அறியும் பொழுதுதான், கடவுளைத் தூஷிப்பதும், ஒழுக்கக் கேடாக நடப்பதும், பொய் சொல்லுவதும், களவு செய்வதும், பிறருக்குத் தீங்கு நினைப்பதும், தனக்குத் தானே தீமையை உண்டாக்கிக் கொள்கின்ற செயல்கள் என்று உணரவும், அவற்றிற்கு அஞ்சி நடக்கவும் தூண்டும்.

## 65. இந்த ஆராய்ச்சியின் முக்கிய நோக்கம்.

உலகத்தில் பலவித கொள்கைகளையுடைய பல மதத்தவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் எல்லோரும், இன்பமும் துன்பமும் நிறைந்த இந்த உலகத்தில் வாழ்கின்ற வாழ்வை ஒன்றுபோல் ஒத்துக்கொள்கிறார்கள். பிறப்பு, இன்பம், துன்பம், பிணி, மூப்பு, இறப்பு இவை எல்லா மதத்தினருக்கும் உண்டு என்பதையும், எம் மதத்தினருக்காவது அதில் விசேஷ சலுகை இல்லை என்பதையும், யாவரும் நேரே பார்க்க முடிவதால் அவ்வாறு ஒத்துக்கொள்கிறார்கள். ஆனால், நாம் பிறப்பதற்கு முன்னுள்ள நிலையையும், இறந்த பின்னுள்ள நிலையையும் பற்றித்தான் பலரும் பல கருத்துடையவர்களாக இருக்கிறார்கள்.

கிறிஸ்தவர்களும், முகமதியர்களும் முன் பிறவியும், முன் வினையும் கிடையாது என்ற கருத்துக்கொண்டவர்களாக இருக்கின்றார்கள். பௌத்தர்களும், சமணர்களும் அவனவன் செய்த வினை அவனவனைத் தானாகவே சென்று சேரும்; வினையின் பயனாகிய இன்ப துன்பத்தை, வினை செய்த அவனையே அனுபவிக்கச் செய்யவும், அதனால் அவன் அனுபவ அறிவு பெறுமாறு செய்யவும். கருணையுள்ள ஒரு ஆண்டவன் கிடையாது; தேவையும் இல்லை என்ற கருத்துக்கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள். இந்துக்கள் முன்பிறவியும், முன்வினையும், மறுபிறவியும், பிறவா நிலையும், இவற்றை உயிர்களுக்குத் தந்து உபகரிக்கின்ற ஒப்பற்ற கடவுளும் உண்டு என்று கருதுகின்றனர்.

மேலும் கிறிஸ்தவர்களும் முகமதியர்களும் இறந்தவர்களுடைய உயிர், நியாயத் தீர்ப்பு நாள்வரை உணர்வற்றுக் கிடக்குமென்றும், அதற்கு அறிவும், உணர்வும், செயலும் கிடையாதென்றும், நியாயத் தீர்ப்பு நாளன்றுதான் உயிருக்கு உடல்கொடுக்கப்பெறும் என்றும் கருதியே, உயிர்நீங்கிய சடலங்களுக்கு, கல்லறைகள் கட்டு

விக்கிருர்கள். அதில் கிறிஸ்தவர்கள் இயேசுநாதர் ஒருவரே மறித்தோரிலிருந்து எழுப்பப் பெற்ருர்; நாற்பதாம் நாள் பரலோகத்திற்கு உடலோடு எடுத்துக் கொள்ளப் பெற்ருர்; அவர் ஒருவரே இறந்த பின்னரும் பல பாஷைகளில் பேசிஞர், ஆனதால் அவர் ஒருவரே தேவகுமாரர் என்று கருதி, தீவிர பிரசாரமும் செய்துகொண்டிருக்கிருர்கள்.

பௌத்தர்களும் சமணர்களும், இந்துக்களில் ஒரு சாராரும், ஸ்தூல உடலே, உயிர் நேரடியாக இயக்குவதாகவும், இறப்பு ஏற்படும் பொழுது, அந்த உயிர் தனக்கு உகந்த மற்ருெரு சரீரத்தைப் பற்றிக் கொண்டே முன்னிருந்த சடலத்தை விட்டுவிடுவதாகவும் கருதியும் போதித்தும் வருகின்றனர்.

இந்து மதத்தில், சைவசித்தாந்த சாஸ்திரங்கள், இறந்த பின் ஆவி உடல் (யாதனு சரீரம், சூக்கும சரீரம் என்று அழைக்கப் பெறுகின்ற உள்ளுடல்) அவரவர் செய்த புண்ணிய பாவத்திற்குத் தக்க அருள் உலகத்திலும், இருள் உலகத்திலும் தொடர்ந்து வாழ்ந்து, அதன் பின்னர், அந்த உடல் அழிக்கப்பெற்று, அதிலிருந்த அணுப்பிரமாணமுள்ள உயிர் மறுபிறவியோ, பிறவியற்ற மேல் நிலேயோ எய்துகின்றது என்று விளக்கம் தருகின்றது.

இவற்றுள் ஏதாவது ஒன்றுதானே உண்மையாக இருக்க முடியும்?

இவ்வித வேறுபாடான கருத்துடைய எல்லோரும் சிந்தனே செய்து, உண்மை இன்னதென்று உள்ளவாறு உணர்ந்து கொள்ள, இந்த ஆவி உலக ஆராய்ச்சியும், அனுபவமும் உள்ளத்தைத்தூண்டிவிடுவதுபோல, வேறெதுவும் செய்ய முடியாது.

(1) ஆவி உலகத் தொடர்பு கொண்ட ஆங்கிலேயர் களும், அமெரிக்கர்களும், ஐரோப்பாவிலுள்ள பிறரும், கிறிஸ்தவர்களாக இருந்தும், இறந்தவர்களது உருவங்களை (Photo) "போட்டோ" பிடிக்கவும், இறந்தவர்களது சொந்தக் குரல்களை (Mega-Phone) "மெகபோன்" என்ற கருவி மூலம் நேரே கேட்கவும் முடிகின்ற உண்மைகளை, அனுபவத்தில் கண்கூடாகக்கண்டு, கிறிஸ்தவக் கொள்கை களை மறுத்து, இறந்தபின் எல்லோருக்கும் தொடர்ந்த வாழ்வும், அதற்கு வேண்டிய உடம்பும் இருக்கிறதென்று, நூற்றுக்கணக்கான புத்தகங்கள் வெளியிட்டிருக்கிறார்கள்.

அவர்களுடைய மேற்கோள்களும் காட்டி, எங்களது சொந்த அனுபவங்களையும் கூறி, சாஸ்திர மேற்கோள் களும் காட்டி, இந்த ஆராய்ச்சியின் மூலம், இறந்த பின் எவருக்கும் ஆவி உலகத்தில் தொடர்ந்த வாழ்க்கை இருக் கிறது என்பதை நிரூபித்திருக்கின்றோம்.

(2) பெயரிட்டு அழைப்பது உயிரை அல்ல என்றும், ஸ்தூல உடலையும் அல்ல என்றும், இறந்த பின் வாழும் தன்மையுடைய ஆவி உடலையே என்றும், ஆவி உடலே நமது உண்மையான உடல் என்றும், அதனைத் தந்த ஆண்டவனே நமது உண்மையான அம்மை அப்பன் என்றும், ஆதலால் உலகத்தில் பிறந்திருக்கிற மனித வர்க் கம் முழுவதும், ஒரே குடும்பத்திலுள்ள சகோதர சகோதரி கள் ஆகிறார்கள் என்றும், இந்த ஆராய்ச்சியின் மூலம் நிரூபித்திருக்கின்றோம்.

(3) இந்தப் பிறவியில் நாம் எந்த (உள் உடலோடு) ஆவி உடலோடு வாழுகின்றோமோ, அதே ஆவி உடலோடு ஆவி உலகத்தில் வாழவேண்டிய காலம் வாழ்ந்து, பின் அங்கே அந்த ஆவி உடல் அழிக்கப்பெற்று, மீண்டும் வேறு பிறவி எடுக்கவோ, அன்றித் தகுதியிருந்தால் பிறவியற்ற நிலை எய்தவோ முடிகிறது என்ற உண்மையையும் இந்த ஆராய்ச்சியின் மூலம் நிரூபித்திருக்கிறோம்.

(4) இறந்த பின்னுள்ள ஆவி உலக நிலையே, நாம் பிறக்கும் முன்னுள்ள நிலையாகிறதென்பதும், நாம் இப்பூவுலகில் பிறக்கும் முன் சுதந்திரமாக வாழ்ந்துவந்தது ஆவி உலகத்திலேயே என்பதும், அந்த உலகம் இப் பூவுலகிற்கு வெளியே இருக்கிறது என்பதும், ஆவி உலகிலும் இந்த உலகிலும் நாம் செய்த தவறுகளுக்குத் தண்டனையாகவே, இப்பூவுலகில் பலரும் பல நிலைகளில் பிறக்கவேண்டியதாயிருக்கிறது என்பதும், இந்த ஆராய்ச்சியின் மூலம் உணர்த்தப் பெற்றிருக்கின்றன. அவ்விதத் தண்டனைக்குள்ளாகிப் பிறந்திருப்பவர்களில், அந்தப் பிறவியிலேயே திருந்திய தெய்வீகத் தன்மையை அடைந்தவர்கள், பிறவியற்ற மேல் நிலை எய்துகிறார்கள் என்பதும், அவ்வித மேல் நிலையை அடைய முடியாதவர்கள், தேறாத பள்ளி மாணவர்கள் மறுபடியும் முன் இருந்த வகுப்பிலேயே சேர்ந்து படிக்க வேண்டியதாக இருப்பதுபோல், மீண்டும் இப்பூவுலகில் மறுபிறப்புப்பெற்றுப் பிறக்க வேண்டுவது நியாயம்தானே என்பதும், பற்பல சான்றுகளால் உணர்த்தப்பெற்றிருக்

(5) இறந்தவர்கள் கண்ணுக்குத் தெரியாத நிலையில் இருந்துகொண்டு, நாம் அவர்களுக்குச் செய்கின்ற காரியங்களையெல்லாம் அவர்கள் தெரிந்து ஏற்றுக்கொள்கின்றார்கள் என்றால், கண்ணுக்குத் தெரியாத ஆண்டவனும், நாம் செய்கின்ற காரியங்களையெல்லாம் நன்றாகத் தெரிந்து ஏற்றுக்கொள்வான் என்பதை, சந்தேகத்திற்கு இடமின்றி தெளிவு படுத்திவிடுகின்றது. மேலும் நாம் கோவிலை வலம் வந்தால், அது ஆண்டவனுக்குத் தெரியுமா? தியானம் செய்வதும் மனதில் நினைப்பதும் ஆண்டவனுக்குத் தெரியுமா? கற்சிலைக்கு ஆராதனை செய்வதை ஆண்டவன் அறிவானா? நாம் செய்யும் பிரார்த்தனைகளையெல்லாம் ஆண்டவன் கேட்பானா? இவற்றிற்கெல்லாம் ஆண்டவன் பலன் கொடுப்பானா? என்றெல்லாம் கேட்கின்ற கேள்விகளுக்குரிய விளக்கங்களை, இறந்தவர்களோடு தொடர்பு கொள்

ளுகின்ற அனுபவம், அநேக பிரத்தியக்ஷப் பிரமாணங்களைத் தந்து, அவற்றை நன்ருக நாம் உணர்ந்துகொள்ளவும், தெரிந்துகொள்ளவும் செய்கின்றது.

(6) நாம் எண்ணுவதையும் பேசுவதையும், செய்வதையும், இறந்துபோன ஒருவர் அறிந்து, அவற்றிற்குரிய சரியான பதில் வரும்பொழுதும், இறந்தவர்களுக்கு ஏதாவது படைத்தால், அவர்கள் அதனுடைய ருசி விபரம் சொல்லும் பொழுதும், குளிக்காமல் இருப்பவர்களுடன் அவர்கள் தொடர்பு கொள்ள மறுக்கும்பொழுதும், ஆசாரமாக அல்லது தூய்மையாகத் தயாரிக்காத பதார்த்தங்களை, அவர்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கும் பொழுதும், இறை வழிபாட்டில் கடைப் பிடிக்க வேண்டிய அநேக உண்மைகளை உணர்ந்துகொள்ள அவை பெரிதும் உதவுகின்றன.

(7) ஏன் குளித்து சுத்தமாக, ஆசாரமாக இருக்க வேண்டும்? என்று கேட்கும் துடுக்கான கேள்விகளுக்கு பதிலை நேருக்குநேர் உணர்ந்துகொள்ளும்படி சந்தேகத்திற்கு இடமின்றி, இந்த ஆவி உலக ஆராய்ச்சி செய்து விடுகிறது. ஒரு முறை, நாங்கள் ஆவி உலகத்தவரோடு பேசிக்கொண்டிருக்கையில், ஒரு பெண் குளிக்காமல் அங்கு வந்திருந்தாள். அவள் ஆவி உலகத்தவரோடு பேசுவதற்காகத் தயாரித்த பலகையில், தான் ஒரு துணை மீடியமாகக் கையை வைத்தாள். அவள் கை வைத்தவுடன் பேச்சு நின்று விட்டது. அவளைக் கையை எடுக்கச் சொல்லி, மற்றொருவரை வைத்துக் கேட்ட பொழுது, சற்று முன் பலகையில் துணை மீடியமாகக் கை வைத்த பெண், இன்று குளித்தாளா? என்று கேளுங்கள் என்ற பதில் வந்தது.

குளிக்காமல் வந்திருந்த அந்தப் பெண் அதைக் கேட்டவுடன், வெட்கித் தலைகுனிந்து, சற்றுத் தள்ளி உட்கார்ந்து கொண்டாள். ஆவி உலகில் இருக்கின்ற சாதாரண மனிதர்களே, சுத்தமாக இருப்பதை இவ்வளவு விரும்புகிருர்கள்

என்பதை நேரில் உணரும்பொழுதுதான், ஆண்டவனும் நாம் சுத்தமாக இருக்கவேண்டுமென்று விரும்பமாட்டானே? என்ற எண்ணம் நமக்கு உண்டாக ஏதுவாகின்றது. சானித்தியமாக வீற்றிருக்கும் கோவிலில், ஆண்டவனைத் தரிசிக்கச் செல்லும் அன்பர்கள், குளித்து ஆசாரமாகப் போவது உசிதம் என்பதற்கு மேற்கொண்டும் ஏதாவது படிப்பினை வேண்டாமல்லவா?

(8) இன்னும் சிலர், ஆண்டவனை நினையாமலே இருந்துகொண்டு, கடவுள் கண்ணுக்குத் தெரியாமல் ஏன் இருக்கவேண்டும்? கடவுள் இருந்தால் கண்ணுக்கு முன்னால் வரட்டுமே? என்றெல்லாம் கேட்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் இந்த ஆவி உலக ஆராய்ச்சி, அவை அர்த்தமற்ற அசட்டுக் கேள்விகள் என்று நிரூபித்துவிடும். இறந்தவர்களுமே நாம் நினைத்தால்தான் நமக்காகச் சில காரியங்களைச் சிறப்பாகச்சொல்ல முன்வருகிறார்கள் என்பதை உணரும் பொழுதுதான், சர்வலோகங்களுக்கும் அதிபதியாகிய ஆண்டவனும், நாம் நினைந்து விண்ணப்பித்தால் தான் நம் முன்னே வந்து சிறப்பு உபகாரம் செய்வான் என்பதனை உணரமுடியும்.

(9) இன்னும் சிலர், இறந்தவர்கள் பின்னால் வரக்கூடியவற்றை, அதாவது இன்ன இடத்தில் புயல் வரும். இன்ன பாலம் இடியும், என்பன போன்ற விஷயங்களை முன்கூட்டியே தெரிவிக்கலாமே! அப்படித் தெரிவித்தால் உலகிற்கு உபகாரமாக இருக்குமே! என்று கேட்கிறார்கள். அவ்வாறு பின்னால் நடப்பனவற்றை அறிவிக்க ஆவிஉடலிலுள்ள அவர்கள் தெய்வமும் அல்ல; ஜோசியர்களும் அல்ல; இந்த உலகில் வாழ்ந்திருந்த மனிதர்களே அன்றி புதியவர்களாக மாறிவிடவுமில்லை; அவ்விதம் அறிவிக்க அவர்களுக்கு அங்கு அனுமதியும் கிடையாது; ஏதும் மீறி நடப்பவர்

களுக்கு அங்கு தண்டனையும் உண்டு என்பதை, ஆவி உலக ஆராய்ச்சியின் மூலம் அனுபவத்தில் அறிந்திருந்தால், இவ் வித கேள்விகளுக்கு இடமே இருக்கமுடியாது.

(10) இந்த ஆராய்ச்சி, ஆண்டவனோடும், மேலுலகத் தோடும் தொடர்பு கொண்ட நமது இந்து சமயத்தையும், நமது வழிபாட்டு முறைகளையும், அர்த்தமற்றன என்றும், பகுத்தறிவுக்கு ஒவ்வாதன என்றும் கூறி வரும் கூற்றை, தக்க காரணங்கள் காட்டி, கண்டனம் செய்து, இந்து சமய மாண்பையும், இந்துக்களின் பலவித வழிபாடுகளின் உண் மையான தத்துவங்களையும், உள்ளவாறு உணரும்படி செய்கின்றது. அன்றியும் கடவுள் பக்தி இல்லாதவர்களுக் கும், கடவுளைப் பற்றிய பயம் இல்லாதவர்களுக்கும், இந்த ஆராய்ச்சி பலவித உதாரணங்களால், கடவுளிடத்தில் பக்தி யையும் பயத்தையும் நிச்சயமாக உண்டாக்க உதவுகின்றது.

(11) எல்லாவற்றிற்கும் மேலாக, இறந்தவர்கள் இம் மண்ணுலகமாகிய சிறைச்சாலையிலிருந்து விடுதலை பெற்று, நான்குபேர் தூக்க வேண்டிய பாரமான உடலைத் தனி யாகத் தூக்கித் திரிகின்ற தண்டனையினின்றும் விடுதலை பெற்று வாழ்கின்றவர்களாகின்றார்கள்; எங்கும் தட்டுத் தடையின்றிச் செல்லவும், உற்றார்உறவினரது செயல்களைத் தெரியவும், அவர்கள் காட்டுகின்ற அன்பை ஏற்றுக்கொள் ளவும், அவர்களோடு திரும்பவும் உறவுகொண்டு தங்களது அனுபவங்களை அறிவிக்கவும், ஆற்றல் படைத்தவர்களா யிருக்கின்றார்கள்; என்பனவற்றை உணரும்பொழுது, இறப்பென்பது நாம் வரவேற்கத் தக்கதோர் நிகழ்ச்சி என்ற எண்ணமும், இறந்தவர்கள் இவ்வுலகில் வாழ்கின்றவர்களை விட மேலான நிலையை அடைகின்றார்கள் என்ற உணர்வும் உறுதிப்படுகின்றது.

ஆதலால் இறந்தவர்களைக் கருதி துக்கப்படுவதற்குப் பதிலாக சந்தோஷப்படக்கூடிய ஒரு அபூர்வமான மனோ நிலையும், சாந்தியும் ஏற்படுவதற்கு, இந்த ஆராய்ச்சி உதவு வதுபோல் வேறெவ்வித ஆராய்ச்சியும் உதவமுடியாது. பொதுவாக ஆண்களைவிட பெண்களே இறந்தவர்களைக் குறித்து அதிகமாகக் கவலைப் படுகிறார்கள். அவர்கள் படு கின்ற துயரத்தையும், மனக் கவலையையும் போக்குவதற்கு இந்த ஆவிஉலக ஆராய்ச்சி துணைபுரிவதுபோல் வேறு எதுவும் துணைபுரிய முடியாது. இந்த ஆவி உலக அனுப வத்தின் மூலம், தங்களது உற்றார் உறவினர் இறந்துபோன தால் ஏற்பட்ட துக்கம் அறவே நீங்கிவிட்டதாக பலர் அறிவித்திருக்கிறார்கள். அவ்வாறு உலக மக்கள் அனைவரும் மரணத்தின் உண்மையை உணர்ந்து, மனக் கலக்கமும், மரண பயமும் தீர்ந்து, சிறந்த பக்தி உடையவர்களாகத் திகழ்ந்து, திருவருள் பெற்று உய்ய வேண்டுமென்பதே இவ்வாராய்ச்சியின் முக்கிய நோக்கமும் நமது பேரவாவு மாகும்.

# இறந்தவர்கள், பேசும் முறை.

## 66. முதற்பகுதியில் இறந்தவர்களைப்பற்றி உணர்ந்து கொள்ளவேண்டிய 16 உண்மைகள்.

இறந்தவர்கள், வாழுகின்ற நிலையைப்பற்றி முற்பகுதியில் விளக்கிக் கூறியிருப்பவைகளை நன்முகப் படித்துத் தெரிந்துகொள்ளாமல், இப்பகுதியை மாத்திரம் படித்துப் பார்த்துவிட்டு, இறந்தவர்களோடு பேச எத்தனிக்க வேண்டாம் என்பதை நினைவூட்டுகின்றோம்:—

முற்பகுதியில் விளக்கிக் கூறியிருப்பவைகளிலிருந்து கீழேகண்ட உண்மைகளை உணர்ந்துகொள்ளுதல் அவசியமாகும்.

(1) சொப்பனம் காண்பது வெறும் மனோ நிகழ்ச்சி அன்று. மனதில் உண்டாகும் நினைவின் பிரதிபலிப்பும் அன்று. நனவில் தூல உடம்பால் பூர்த்தியடையாத விருப்பங்கள், மனோபாவத்தால் கனவில் பூர்த்தியடைகின்றன என்பதும் அன்று. சொப்பன அனுபவம், பாரமில்லாத ஒரு ஆவிஉடல் கொண்டுநிகழ்கின்ற நிகழ்ச்சியாகும்.

(2) சொப்பனத்தில் தொழிற்படுகின்ற உடலாகிய ஆவி உடலையே, உயிர் நேரடியாக இயக்குகின்றது. அந்த உடலினுள்ளேயே உயிர் வியாபித்திருக்கிறது. உயிரைக் கண்ணால் நாம் என்றும் காண முடியாது. ஆனால் ஆவி உடல் கனவுநிலையில் நாம் எப்பொழுதும் காணக்கூடியது. அது பாரமுள்ள தூல உடலை விட்டுப் பிரிந்த பின்னரும் வாழக் கூடியது.

(3) சொப்பனத்தில் தொழிற்படுகின்ற ஆவி உடலி லேயே, மனம், புத்தி,, சித்தம், அகங்காரம், என்கின்ற உட் கருவிகளான அந்தக் கரணங்களும், ஐம்புலன்களும், தச வாயுக்களும், பிற அவயவங்களும் இருக்கின்றன. நமக்குரிய பெயரும் வயதும் ஆவி உடலைச் சார்ந்தனவே. பூலோகத் தில் வாழ்ந்த காலமும், ஆவி உலகத்தில் வாழ்ந்த காலமும் சேர்ந்தே நமக்குப் பூரணவயதாகின்றது.

(4) சொப்பனத்தில் தொழிற்படுகின்ற ஆவி உடலி லேயே சூடு, சாயலின் வேறுபாடு, அவயவங்களின் வேறு பாடு, அழகின் வேறுபாடு, ஆற்றலின் வேறுபாடு, நிற வேறுபாடு, நெட்டை, குட்டை, மெலிந்திருத்தல், பருத் திருத்தல் முதலிய தன்மைகள் ஏற்படுகின்றன.

(5) சொப்பனத்தில் தொழிற்படுகின்ற ஆவி உடலையே ஆன்றோர்கள் சூக்கும சரீரம், யாதனு சரீரம், ஆவி, உள்ளுடல் என்ற பெயர்களால் குறிப்பிட்டிருக் கிறார்கள்.

சித்தாந்த சாத்திரங்களில் சிருஷ்டி காலம் முதல் சங்கார காலம் வரை அழியாதிருக்கின்ற அணுப் பிரமாண மாகவுள்ள, புரியட்ட ரூப மென்னும் காரண சரீரத்தையும் சூக்கும சரீரமென்று கூறப்பெற்றிருக்கிறது. அதை உயர முடம், நிறமும், அடையாளமும், அவயவங்களும் கொண் டுள்ளதும், கனவில் தொழிற்படுகின்றதும், ஒவ்வொரு பிறவியிலும் ஆவி உலகத்தில் அழிக்கப்பெறுகின்றதுமான, ஆவி உடலாகிய சூக்கும சரீரமென்று, தவறுதலாக எண்ணிவிடக் கூடாது. புரியட்ட ரூப மென்னும் காரண சூக்கும சரீரம், ஆவி உலகத்திலும் அழிக்கப்பெற முடியாத தன்மையது. அவரது முந்தின பெயரையும், உருவப் படத் தையும் கொண்டு அழைப்பித்துப் பேசிக்கொள்ளலாம்.

ஆவி உடல் அழிக்கப்பெற்று, மறு பிறவி எடுத்துவிட்டாலும், மேல் நிலை எய்திவிட்டாலும், அவர்களுடன் நாம் சுலபமாகப் பேசமுடியாது.

(6) உயிர்களை ஆண்டவன் படைக்கவில்லை. அவை தங்கிநின்று தொழிற்படுகின்ற ஆவி உடல்களையே படைத்து உதவியிருக்கிறார். ஆவி உடல் பரிணமித்தே, தூல உடல் உண்டாகியிருக்கிறது. அதனாலேயே, ஆண்டவனை ஆன்றோர்கள் நமது உண்மையான தந்தையும், தாயும் என்றும், அம்மை, அப்பன் என்றும் கூறியிருக்கிறார்கள்.

(7) உலகத்திலுண்டான மக்கள் அனைவரும், எத்தேசத்தில் பிறந்திருந்தாலும், என்ன பாஷை பேசினாலும், எவ்விதக் கொள்கை உடையவராக இருந்தாலும், அத்தனை பேருடைய ஆவி உடல்களும், ஒரே தந்தை தாயாகிய ஆண்டவன் படைத்துக் கொடுத்து, நாம் பெற்றிருப்பதால் உண்மையில் நாம் அனைவரும் சகோதர சகோதரிகள் ஆகின்றோம்.

(8) ஆவி உடல் இவ்வுலகில் கத்தியால் வெட்டப்பட முடியாததாகவும், நெருப்பால் எரிக்கமுடியாததாகவும், அணுக்குண்டாலும் இடி மின்னல்களாலும் அழிக்கப்படமுடியாததாகவும், எந்த இயந்திரத்தாலும் சிதைக்கப்பட முடியாததாகவும், தண்ணீரால் மாய்த்துவிட முடியாததாகவும், இவ்வுலகிலுள்ள எதனாலும், எந்தப் பூதத்தினாலும், அழிக்கப்பட முடியாததாகவும் அமைந்திருக்கிறது. ஆவி உடலே, நமக்கு ஆண்டவன் தந்த உண்மையான சடலமும், உடலும் ஆகின்றது. அதனுடைய கனத்த சட்டைபோன்றதே, ஆண்டவன் தந்திருக்கின்ற தூல உடல்.

(9) அதனுலேயே தூல உடல் எரிக்கப்பட்டோ, சிதைக்கப்பட்டோ, அழிந்தபிறகும், ஆவி உடல் சிதைக்கப்படாமலும், அழிக்கப்படாமலும், உயிரோடு தனித்து நின்று வாழக்கூடியதாகவும், வளரக் கூடியதாகவும், உலவக்கூடியதாகவும், மற்ருேர் தூல உடலில் புகுந்து நின்று அதைக் கருவியாகக் கொண்டு உலகத்தவரோடு பேசக்கூடியதாகவும், தனது விருப்பத்தை வெளிப்படுத்தக் கூடியதாகவும் அமைந்திருக்கிறது.

(10) தூல உடல் அழிக்கப்பட்ட காரணத்தாலோ, சிதைக்கப்பட்ட காரணத்தாலோ, கழுத்தில் சுருக்குப் போட்டுக்கொண்ட காரணத்தாலோ, தண்ணீரில் அமிழ்ந்த காரணத்தாலோ, சுவாசிக்கக் கூடாததைச் சுவாசித்த காரணத்தாலோ, பாஷாணம் போன்ற நச்சுப்பொருள்களை உட்கொண்ட காரணத்தாலோ ஆவி பிரிந்தால், அது இடைமிருத்து. அகால மரணம் அல்லது அசாதாரண மரணம் எனப்பெறும். அப்படிப் பிரிந்த ஆவியர்கள், இந்த உலகத்தில் எவ்வளவு காலம் வாழ்ந்து இருந்திருக்க வேண்டுமோ, அந்தநாள் வரை, இறந்த இடங்களின் பக்கங்களிலேயே அலைந்து திரிவார்கள். அந்த ஆவிகளுக்கு, ஆவி உலகத்தின் அருமை பெருமை தெரியாது. அப்படிப்பட்ட ஆவிகளை அதததற்கு உரிய வாழ்நாள் முடியும்வரை, மேலே அழைத்துச் செல்லுகின்ற கணங்கள் வந்து கூட்டிக் கொண்டு போவதில்லை. அந்த நிலையில் இவ்வுலகில் அலைந்து திரிகின்றவர்களையே, பிசாசு என்றும், பேய் என்றும், அலகை என்றும் சொல்லுகிருேம். அவர்கள் இவ்வுலகத்தவர்களே தவிர ஆவி உலகத்தவரல்ல. அப்படிப்பட்டவர்களோடு பேசுவதும், தொடர்புகொள்ளுவதுமல்ல, நாம் சொல்லுகிற ஆவி உலகப் பேச்சும், தொடர்பும் என்பதை நன்ருக உணர்ந்துகொள்ளல் வேண்டும்.

(11) அகால மரணமடைந்தவர்களின் ஆவிகளும், உரியகாலம் வரும்பொழுது, மேலே அழைத்துச் செல்லப்

பட்டு, இருள் ? லகத்தில் தங்கியிருக்கும்படி செய்யப்படு கின்றன. ஆன ிலேயே தற்கொலை செய்துகொள்ளுவ தும், பிறரைக் காலை செய்வதும் கொடிய பாவச்செயல் களாகக் கருதப் ுகின்றன.

ஆவி உல கதிற்கு அழைத்துச் செல்லப்பட்ட, எந்த ஆவியருடனும் தொடர்புவைத்துப் பேசலாம். ஆனுல் கீழ்நிலையி லுள்ள ர்களின் தொடர்பு, பயனற்றதாகவும், மேல்நிலையில் உ ளவர்களின் தொடர்பு, சிறந்த பயனுடை யதாகவும் இரு ும். இருள் பகுதியில் இருக்கின்றவர் களுக்கு, இவ்வ கத்திற்குத் தாமாகவே வர அனுமதி கிடையாது; நில வாற்றலும் சரியாகக் கிடையாது.

(12) தூ உடலுக்கு யாதொரு சேதமுமின்றி, உள்ளே இருக்கி ஆவி உடல் பிரிக்கப்பட்டு, ஆவி உல கத்திற்கு அழை துச் செல்லப்படுகிற நிலையே, யதார்த்த மிருத்து, காலம ணம், சாதாரணமரணம் எனப்பெறும். அப்படிப்பட்ட ஆவிகளுடன் தொடர்புகொண்டு பேசு வதே ஆவி உல தொடர்பும் ஆராய்ச்சியுமாகும்.

(13) கா மரணத்தின் காரணமாகப் பிரிந்த ஆவி களில், புண்ணி ம் கூடுதலாகச் செய்தவர்கள், ஆவி உல கத்தில் புண்ணி ப் பகுதியாகிய அருள் உலகத்திற்கு அழைத்துச் செ லப்படுகின்றனர்கள். பாவம் கூடுதலாகச் செய்தவர்கள், ாவப் பகுதியாகிய இருள் உலகத்திற்கு அழைத்துச் செ லப்படுகிறார்கள்.

(14) (a) ா ரமில்லாத ஆவி உடல், பாரமுள்ள தூல உடலைத் தூக்கி, திரிந்துகொண்டு, தூல உடலின் மூல மாகத் தொழிற் ுதல் நனவுநிலை அல்லது சாக்கிர நிலை யாகின்றது.

(b) ஆவி உடல் தூல உடலோடு தங்கியிருக்கும் பொழுது, தனித் ும், ஓரளவு தூல உடலோடு சேர்ந்தும்

தொழிற்படுதல், கனவு நிலை அல்லது சொப்பன நிலையாகின்றது.

(c) ஆவி உடல் தூல உடலைவிட்டு அறவே பிரிந்து, அதனோடு யாதொரு தொடர்புமின்றித் தனித்துத் தொழிற்படுதல் மரண நிலையாகின்றது. ஆக இம் மூன்று நிலைகளி லும், எல்லாச் செயல்களையும் செய்வது ஆவி உடலே யாகும் அதை இயக்குவது சிற்றறிவும், சிறு தொழிலு முடைய உயிர் அல்லது ஜீவான்மாவாகும்.

(15) நனவு நிலையிலும், கனவு நிலையிலும், மரணத் திற்குப் பின்னும், ஆவி உடலே தொழிற்படுவதால், தூல உடலில் ஏற்படுகின்ற அனுபவமும், இன்ப துன்பமும், எவ்வளவு உண்மையோ அதேபோல, சொப்பனத்தில் ஏற் படுகின்ற அனுபவமும், இன்ப துன்பமும், ஆவி உலகில் ஏற்படுகின்ற அனுபவமும், இன்ப துன்பமும், ஜீவான்மாக்க ளாகிய நாம் ஆவி உடலைக்கொண்டு வெவ்வேறு நிலையில் அனுபவிக்கின்ற உண்மையான அனுபவங்களாகவும், உண்மையான இன்ப துன்பங்களாகவும் அமைகின்றன. அவ்வனுபவங்களாலும், இன்ப துன்பங்களாலும் ஜீவர்க ளாகிய நாம், தூல உடலொடு அனுபவிக்கமுடியாத அனுபவ அறிவையும், அனுபவ ஞானத்தையும் பெறக் கூடியவர்களாகின்றோம்.

(16) வைத்திய நிபுணர்களும், விஞ்ஞானிகளும் தூல உடலிலுள்ள அவயவங்கள் தொழிற்படுவதைப் பார்த்து, அந்த இயந்திரத்தைப் படைத்த ஆண்டவனின் அரும்பெரும் ஆற்றலை வியக்கமுடிகின்றதே தவிர, உட லுக்குள் உயிர் எப்படிப் புகுந்தது? தானே புகுந்துகொண் டதா? பெற்றோர் புகுத்தினார்களா? இல்லையேல் புகுத்தியது யார்? ஏன் புகுத்தப்பெற்றது? புகுத்திய உயிரைப் பிரிப்பது யார்? ஏன் பிரிக்கப்பெறுகிறது? உயிர் தூல உடலை எப் படி இயக்குகிறது? நேரடியாகவா? அல்லது உள்ளுடலின்

அவயவங்களை இயக்கி, அவற்றின் பரிணாமமாகிய தூல அவயவங்களை இயக்குகின்றதா?

மரணத்தின் பின்னுள்ள நிலை என்ன? மறுபிறவி உண்டா? முன்பிறவி உண்டா? இதையெல்லாம் கொடுக்கின்ற கர்த்தா யார்? அவர் ஏன் இவ்விதம் செய்யவேண்டும்? அவருக்கும் உயிர்களுக்குமுள்ள தொடர்பென்ன? அவரும் நம்மைப்போன்ற ஒருவர்தானா? அவருக்கும் நமக்கும் உள்ள வேற்றுமைகள் என்ன? ஒற்றுமைகள் என்ன? என்ற கேள்விகளுக்கெல்லாம் வைத்திய நிபுணர்களும், விஞ்ஞானிகளும் தங்களுக்குத் தெரியவில்லையென்று, கைகளை விரிக்கின்ற இடத்தில், மெஞ்ஞானமும், சமயமும், ஆவி உலகத்தவருடைய தொடர்பின் மூலம் ஆரம்பமாகின்றது. அதனாலேயே விஞ்ஞானத்தின் முடிவு மெஞ்ஞானத்தின் ஆரம்பமாகின்றது.

67. இறந்தவர்களோடு தொடர்பு கொள்ளுகிறவர்களின் மனோநிலை இருக்கவேண்டிய தன்மை.

ஆவி உலகத்தவரோடும், மேலுலக அதிபதிகளோடும் தொடர்புகொண்டாலன்றி, மெஞ்ஞானமும் சமயமும் தோன்றமுடியாதாகையால், அவர்கள் நம்மோடு தொடர்பு கொள்ளுவதும், நாம் அவர்களோடு தொடர்பு கொள்ளுவதும் எவ்விதமென்று சிந்திப்போமாக.

அவரவர்கள் கொண்டிருக்கிற மதக்கொள்கைகள் எது எதுவாகயிருந்தாலும், அவரவர்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையும் பழக்க வழக்கங்களும் எவ்வெவ்வாறு இருந்தாலும், அறிவுடைய பெருமக்கள் தங்கள் தங்கள் அனுபவத்திற்கு வராத ஒன்றைப் பற்றிக்கேள்விப்பட்டால், அதைப்பற்றி துவேஷ மனப்பான்மை ஒரு சிறிதும் கொள்ளாமல், ஆராய்ந்து பார்த்து முடிவுகட்டுவார்கள். தாங்கள் கொண்டிருந்த கொள்கைகளுக்கு முற்றிலும் மாறாக,

ஒரு உண்மைநிரூபிக்கப் பெறுமானால், உண்மையில் நாட்டமுள்ள உத்தம மேதாவிகள், தங்கள் தங்கள் கொள்கைகளைத் திருத்திஅமைத்துக்கொள்ள, ஒரு சிறிதும் தயங்கமாட்டார்கள்.

இதை வலியுறுத்தியே, திருவள்ளுவர் "எப்பொருள் எத்தன்மைத்தாயினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" (355) என்றும், "எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு" (423) என்றும் அருளிச்செய்திருக்கிறார். இவற்றில் முந்திய குறளில், எந்தப் பொருள் எவ்வித இயல்பினதாய் இருந்தாலும், அந்தப் பொருளின் உண்மை இன்னதென்று கண்டு கொள்வதே அறிவுடைமையாகும் என்கிறார். பிந்திய குறளில், ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றி யாவர், யாவர் (படித்தவர், படியாதவர், நண்பர், பகைவர், தன்தேசத்தார், பிறதேசத்தார்) மூலமாகக் கற்றாலும், கேட்டாலும், அவ்விஷயத்தின் உண்மை இன்னதென்று கண்டுகொள்வதே, அறிவுடைமையாகும் என்கிறார்.

**68. இறந்தவர்கள் பூலோகத்தாரோடு பேச முடியுமென்பதைப் பொய்யென்று கூறுபவர்களின் தடைகளுக்கு விடை.**

50 ஆண்டுகளுக்கு முன், மதுரையில் வசிக்கின்ற மக்களிடம், இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும், ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும் நிகழ்த்துகின்ற சொற்பொழிவுகளை, தன்னுடைய வீட்டிலிருந்து கொண்டே, ஒரு ரேடியோக் கருவிமூலம், அதே விநாடியில் கேட்கலாமென்று யாராவது சொல்லியிருந்தால், அப்படிச் சொல்லுகின்றவருக்குப் பயித்தியமாக இருக்க வேண்டுமென்று எல்லோரும் சொல்லி, அவரை எள்ளி நகையாடியிருப்பர் அல்லவா? அப்படிப் பயித்தியப்பட்டம்

பெற்ற அவர், மக்களுக்கு நம்பிக்கை உண்டாக்கும் பொருட்டு, ஒரு ரேடியோ பெட்டியை அவர்கள் மத்தியில் வைத்து, ஒவ்வொரு தேசத்திலிருந்து பேசுவதையும் கேட்கும்படி செய்தால், அவரை ஒரு மந்திரவாதி, அல்லது தந்திரவாதி என்றும். அதெல்லாம் சாத்தானுடைய வேலை, மனிதர்கள் பேசவில்லை. ஒருவேளை பேசுவது பேய்களாக இருக்கலாம் என்றும்கூட கொஞ்சமும் தயங்காமல் சொல்லி யிருக்கவும் செய்வர் அல்லவா?

ஆனால் இன்றோ நாம், ஒவ்வொரு ஊரிலும் ரேடியோக்கருவிகள் மூலம், தன் தன் வீட்டிலே இருந்து கொண்டே, அகில உலகச் செய்திகளைக் கேட்டு, ஆனந்தமாக அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். ரேடியோ மூலம் இவ்விதம், உலகத்தில் எந்தப் பாகத்திலிருந்து ஒலி பெருக்கப்பெறுகின்ற செய்திகளையும், கேட்க முடியுமாவென்று இன்று ஒருவன் கேட்பானானால், அவனைப் படியாத முட்டாள் என்றும், பட்டிக்காட்டான் என்றும், அநாகரீகன் என்றும், சொல்லப் பின்வாங்கமாட்டோம் அல்லவா? இன்று ஆவி உலகத்தவர் நம்மோடு பேசமுடிகின்றது என்று நிரூபிக்கப்பெற்றிருக்கிற உண்மைக்கும், நாம் அவர்களோடு பேசவும் தொடர்பு கொள்ளவும், மேலுலகங்களில் நடைபெறுகின்ற காரியங்களை அறியவும் முடிகின்றது என்று, நிரூபிக்கப் பெற்றிருக்கிற உண்மைக்கும், அதே நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது.

## 69. இறந்தவர்களோடு பேசுதல் பேய்களோடு பேசுதல் என்பவர்களுக்கு கூறும் விடை.

ஆவி உடலின் தன்மையையும் பெருமையையும் அறியாதவர்களே, கனவு நிகழ்ச்சிகளையும் ஆவி உலக நிகழ்ச்சிகளையும் பொய்யென்று கூற முற்படுவர். ஆவி உலகத்தவரோடு பேசுதலும் தொடர்புகொள்ளுதலும், பேய்களோடு பேசுதலும் தொடர்புகொள்ளுதலும் ஆகுமென்று, யாரா

வது இன்று கூறுவார்களானால், அதுவும் அறியாமையின் கூற்றாகவே முடியும்...ஆவி உலகத்தில் மரணத்தின் பின்னுள்ள ஆவி உடம்பே, தூல உடம்பிற்குள் தங்கியிருந்து, தூல உடல் மூலம் பேசிக்கொண்டிருக்கிறதென்று, நிரூபிக்கப் பெறும்பொழுது, தூல உடலோடு ஒருவரோடு ஒருவர் பேசுதலும் ஆய்ந்துபார்க்கின் பேய்கள் ஒருவரோடு ஒருவர் பேசுதலாகவே அமைந்துவிடும் ஆனதால் அவ்விதம் கூறுகின்றவர், தமக்குத்தாமே பேய்ப் பட்டம் சூட்டிக்கொள்வதோடு, மனிதவர்க்கத்திற்கே அந்தப் பட்டத்தைச் சூட்டிய பாவத்திற்கும் பழிக்கும் ஆளாகின்றனர் என்பது தெளிவாகும்.

## 70. இறந்தவர்களுடன் பேசுதல் சாத்தானுடன் பேசுதலாகும் என்னும் கிறிஸ்தவக் கொள்கைக்குப் பதில்.

நனவு நிலையிலும் கனவு நிலையிலும், மேலுலகத்தவரோடு தொடர்புகொண்டு எல்லாமதங்களும் தோன்றியிருக்கின்றன என்று, முன்னரே நிரூபித்திருக்கிறோம். அதிலும் கிறிஸ்துமதத்திலுள்ள புதிய ஏற்பாட்டின் ஸ்தாபகரான, இயேசுநாதர் பிறந்ததும், அவர் அத்திருநாமம் சூட்டப்பெற்றதும், பிறந்தபின் அவரைக் கொல்ல [illegible]த்த அரசனிடமிருந்து அவர் தப்பிப் பிழைத்ததும், [illegible]தூதரான "கேப்ரீல் (Gabriel) என்பவர், கன்னிமே[illegible]அம்மையாருக்கும், ஜோசப் என்பவருக்கும், கனவி[illegible] அறிவிக்கப்பெற்றே நிகழ்ந்திருக்கவும், தேவதூதரின் அறிவிப்பின்படியே அவரவர்கள் நடந்துவந்திருக்கிறார்கள் என்று கூறப்பெற்றிருக்கவும், இயேசுநாதர் இறந்தபிறகு, அவர் தன்னுடைய சீடருடன் பேசிய விபரங்களே புதிய ஏற்பாட்டில் பாதிக்குமேல் இடம்பெற்றிருக்கவும், கிறிஸ்தவர்கள் தாமே, மேலுலகத் தொடர்பும் இறந்தவர்களோடு பேசுதலும் கூடாதென்றும், இறந்தவர்கள்பேசமுடியாதென்றும், அப்படிப் பேசுவதாகச் சொல்லப் பெறுவது, சாத்தானு

டைய வேலேயேயென்றும் சொல்லுவது, முன்னர் அறி வித்திருக்கிற காரணப்படி, தமக்குத்தாமே சாத்தான் பட்டத்தை வழங்கிக் கொள்வதோடு, மனிதவர்க்கத்திற்கே அந்தப் பட்டத்தை வழங்கிய, பாவத்திற்கும் பழிக்கும் ஆளாவதாகவே முடியும்.

**71. பூலோகத்தார் இவ்வுலகத்துக் காரியங்களைக் கவனிப்பதே அறிவுடைமையாகும், இறந்தவர்களோடு தொடர்பு கொள்ளுதல் வீண் வேலையாகும் என்பார்க்குச் சமாதானம்.**

இன்னும் ஒரு சாரார், இவ்வுலகத்தில் நாம் வாழும் பொழுது, இவ்வுலகத்தில் நடத்தவேண்டிய காரியம் என்னவென்று கவனத்தைச் செலுத்தி, அதுசம்பந்தமான ஆராய்ச்சியில் ஈடுபடுவதே அறிவுடைமையாகும்; இறந்தபின் இருக்கிறதாகச் சொல்லப்பெறுகிற வாழ்க்கையைப் பற்றிய ஆராய்ச்சியையும், இறந்தவர்களோடு தொடர்பு கொள்ளுதலேயும், நாம் அங்கு சென்றபின் பார்த்துக் கொள்ளுவதே புத்தியாகும்; இவற்றை விடுத்து, ஆவி உலக ஆராய்ச்சியில் நாம் ஈடுபடுவதும், இறந்தவர்களோடு தொடர்புகொண்டு பேசுவதும் வீண்வேலேயும் பேதைமையுமேயாகும் என்று சொல்லுகின்றனர். நம்மை இவ்வுலகத்திற்கு அனுப்பி உண்மையில் ஆண்டுவருகின்ற அரசாங்கத்தைப் பற்றியும், அந்த அரசாங்க அதிகாரிகளைப் பற்றியும் தெளிவாக முற்பகுதியில் 36-ஆவது தலைப்பிலுள்ள எமது அனுபவத்தில் விளக்கியிருக்கிறோம். (பக்கம் 84 பார்க்க) அதனோடு கீழேகண்ட உபமானத்தை உற்று நோக்குக.

மதுரை மாவட்டத்திலுள்ள மக்கள், நீதி தவறியோ, நீதியை மீறியோ சட்டவிரோதமாக நடந்தால், அவர்களே விசாரணை செய்து ஒரு நியாயமான தீர்ப்புக் கொடுத்து, அத்தீர்ப்பின்படி அவர்கள் சிறைச்சாலைக்கு அனுப்பப் பெறுகிறார்கள். அங்கு ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வித

மான வேலையும், ஒவ்வொருவிதமான சாப்பாடும், சலுகையும், ஒவ்வொரு விதமான காலவரையறையும், ஏற்படுத்தப் பெற்றிருக்கின்றன. அந்த ஏற்பாடுகளெல்லாம், வெளியேயிருக்கிற அரசாங்கத்தின் ஆணைப்படியேயன்றி, சிறைச்சாலைக்குள்ளிருக்கிற அதிகாரிகளால், தீர்மானிக்கப் பெற்றவையல்ல அல்லவா? சிறைச்சாலையை மேல்ப்பார்க்கிற நிர்வாக அதிகாரிகளின் நியமனமும், சிறைச்சாலைக்கு வெளியே இருக்கிற அரசாங்கத்தின் நியமனமேயன்றி, சிறைச்சாலைக்குள்ளிருக்கிற கைதிகளால் ஏற்பட்டவையல்லவே?

சிறைச்சாலைக்குள்ளிருக்கிறவர்கள் ஒன்று சேர்ந்து, ஒரு மகாநாடு கூட்டி, நமக்கெல்லாம் ஒரேவிதமான வேலையும், ஒரேவிதமான உணவும், சலுகையும், ஒரேவிதமான காலவரையறையில் விடுதலையும் ஏற்படுத்தப் பெறுதல் வேண்டும்; நம்மைப்பற்றி நாமே, கவனித்தல் வேண்டுமே தவிர, வெளியேயிருந்து நியாய விசாரணை செய்து தீர்ப்புக் கொடுத்திருக்கிற அரசாங்கத்தைப் பற்றியும், அதிகாரிகளைப் பற்றியும், வெளியே வுள்ள மக்கள் சுதந்திரமாக எங்கும் போகவர இருக்கிற நிலையைப் பற்றியும், சிறைச்சாலைக்குள் சுதந்தரமற்று தாங்கள் அடைப்பட்டிருக்கிற நிலையைப் பற்றியும், அந்த நிலை ஏன் வந்தது, இனி அவ்விதம் சிறையில் அடைபடாதிருக்க. என்ன செய்யவேண்டும், என்பன பற்றியும், நாம் சிந்தித்தலும் ஆராய்தலும் கூடாது; அவ்விதம் ஆராய்தலும், அது சம்பந்தமாக வெளியே உள்ள மக்களோடும் அதிகாரிகளோடும், தொடர்பு கொள்ளுதலும், பேசுதலும் வீண் நேரப்போக்காகும், அறியாமையுமாகும்; சிறைச்சாலைக்குள்ளிருக்கும் மக்களோடும், அங்குள்ள அதிகாரிகளோடும், தொடர்புகொள்வதே புத்திசாலித்தனமும், நல்ல நேரப்போக்கும் ஆகும் என்று, அவர்களுக்குள்ளேயே பிதற்றிக் கொள்வார்களானால், அதனால் வெளியேயுள்ள மக்களுக்கோ, அதிகாரிகளுக்கோ ஏதாவது நஷ்டமும், கஷ்டமும் உண்டாகுமா? அந்த மகாநாட்டின்

தீர்மானங்கள் அறிவுடையனவாகுமா? பயனுடையனவாகுமா? அல்லது வெளியே யிருக்கிற சட்டதிட்டங்களை, சிறைச்சாலைக்குள்ளிருக்கிறவர்கள் ஏதும் செய்துகொள்ளத் தானும் ஆகுமா? ஆகாதல்லவா?

சிறைச்சாலையின் சட்டதிட்டங்களையும், அங்குள்ள ஒழுங்குகளையும் பற்றி தெரியவேண்டுமானால், வெளியே யிருக்கிறவர்களின் உதவியினாலும், மேல் அதிகாரிகளின் உதவியினாலும், ஏதாவது செய்யக்கூடியதைச் செய்து கொள்ளலாமே தவிர, வேறு வழியே கிடையாது என்பதில் யாருக்கும் ஐயம் இல்லையே? சிறைச்சாலையில் இருக்கும் பொழுதே, நாம் திரும்பவும் திரும்பவும், இந்தச் சிறைக்குள் அகப்படாதிருக்கவேண்டுமானால், எவ்விதம் நடந்து கொள்ளவேண்டுமென்று தீர்மானித்து, முடிவு செய்து கொள்ளுதல்வேண்டும் அல்லவா?

அதை விடுத்து தன்னுடைய குற்றத்தை ஒரு சிறிதும் உணராது, தன்னுடைய நிலைமைக்குத் தன்னுடைய நடத்தையே காரணம் என்பதை உணராது, தன்னைத் தண்டித்த அதிகாரியின் நியாயத்தையும், அவ்விதம் தண்டிக்காமல் தனக்குப் புத்தி வருத்த முடியாது என்ற உண்மையையும் உணராது, தான்தோன்றியாய், வாய்க்கு வந்ததைக்குளறிக் கொண்டிருத்தல், அறிவுடைமையாகாதல்லவா?

அது போலவே, உலகமாகிய சிறைச்சாலையில் அடைபட்டிருக்கிற நாம், பலவித தீர்ப்புக்களுக்கு உள்ளாகிப் பிறந்திருக்கிறோம். நம்முடைய நிலைமைக்கு நாமே காரணம். நியாயத் தீர்ப்புக் கொடுத்த, நியாயாதிபதிகளையோ அவர்களது ஆணையை நிறைவேற்றுகிற பிறரையோ, நிந்தித்தல் அறிவுடைமையாகாது. இந்த உலகச் சிறையை விட்டு, வெளியே சென்றவர்களின் தொடர்பு கொண்டு, அங்குள்ள சட்டதிட்டங்களை அறிந்து, நாம் நம்முடைய தவறான எண்ணங்களைத் திருத்திக்கொள்ளல் வேண்டும்;

மேற்கொண்டும் தண்டனைக்கு ஆளாகாதிருக்கப் பார்க்க வேண்டும்; கூடுமானவுரை இச்சிறைச்சாலைக்குத் திரும்ப வும் வாராதிருக்கிற முறையில், நாம் நடந்து கொள்ள வேண்டும் என்று தீர்மானிப்பதுதானே, அறிவுடைமை யாகும்.

அதனால்தானே திருவள்ளுவரும் "கற்றுஈண்டு மெய்ப் பொருள் கண்டார் தலைப்படுவர், மற்று ஈண்டு வாரா நெறி" என அருளியிருக்கிறார். இதில், மக்கட் பிறப்பின் கண்ணே உண்மைப்பொருள் இன்னதென்று, அனுபவ முடைய ஞானசாரியரிடத்தே, கற்று, கேட்டு, சிந்தித்து, தெளிந்து, உணர்ந்தவர்கள், திரும்பவும் இப்பூவுலகத்தில் பிறவாத நெறியை எய்துவர்" என்கிறார். கற்கவும், கேட்க வும், சிந்திக்கவும், தெளியவும். வாய்ப்பு இல்லாதவர்கள், திரும்பவும் திரும்பவும், பிறந்து பிறந்து உழல்வர். மேலும் "ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வானம் நணிய துடைத்து" என்று அருளியிருக்கிறார். இதில், முன் பிறப்பும், வினைப்பயன்களும், மரணத்தின் பின்னுள்ள வாழ்க்கையும், இவற்றையெல்லாம் தந்தருளுகின்ற ஆண்ட வனும், உண்டோ, இல்லையோ என்ற சந்தேகத்திலிருந்து நீங்கி, அவையெல்லாம் உண்டு என்பதற்குரிய, காரண காரியங்கண்டு தெளிந்தவர்களுக்கு, அவர்கள் வாழ்கின்ற இந்த நிலவுலகத்தைக் காட்டிலும், இனிச்சென்று வாழப் போகின்ற வானுலகம் சமீபித்து இருக்கும் தன்மையதாகும் என்கிறார்.

ஆதலால் இவ்வுலகத்தில் நாம் வாழும்பொழுதே, இனிச்செல்லப்போகின்ற ஆவி உலகத்தின் வாழ்க்கையைப் பற்றியும், அது சம்பந்தமாக இங்கு நாம் என்ன செய்து கொள்ளவேண்டுமென்பதைப் பற்றியும், சமயசாத்திரங்க ளிலும், அருளாளர் பாடியிருக்கும் தோத்திரங்களிலும், அனுபவஞானம் உடைய ஆச்சாரியரது போதனைகளிலும், உறுதியும், தெளிவும் பெறுதவர்கள் அனைவரும், ஆவி

உலகத்தவரோடு தொடர்புகொண்டு, அவர்களின் உற்ருர் உறவினருடன் உரையாடி, அவரவர்களுடைய சந்தேகங்களை, அவரவர்களே கேட்டுத் தெளிந்து, இனி என்ன விதம் வாழ்க்கையை நடத்தவேண்டுமென்று தீர்மானித்துக் கொள்ளுவதுபோல, சுலபமாக வேறு எந்த வகையிலும் தீர்மானிக்க முடியாது என்று உறுதியாகச் சொல்லலாம்.

**72. முன்பிறவிகளில், அவரவர் செய்த வினைகளுக்குரிய நியாயத் தீர்ப்பினுலேயே, பிறவிகளில் ஏற்றத்தாழ்வு ஏற்படுகிறதென்பதிலும், ஒரே பிறவிதான் உண்டு என்பதிலும், எதுதான் உண்மையானது என்பதை எவ்வாறு நிச்சயிப்பது?**

இவ்வுலகத்தில் ஒரு சாரார், முன்பிறவிகளில் நாம் செய்திருக்கிற வினைகளுக்குரிய நியாயத் தீர்ப்பின் காரணத்தாலேயே, ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிலையில் பிறந்து, புகழுடனும் இகழுடனும், இன்பமுடையவர்களாகவும், துன்பம் உடையவர்களாகவும், குறைந்த வருஷங்கள் வாழ்கின்றவர்களாகவும், அதிக வருஷங்கள் வாழ்கின்றவர்களாகவும், அமைகிறேம் என்கின்றனர். அவர்கள் மரணத்தின் பின்னரும் நமக்கு அருள் உலகத்திலும், இருள் உலகத்திலும், வாழ்க்கை தொடர்ச்சியாக உண்டு என்கின்றனர். பொருள் சம்பாத்தியத்திஞல், இவ்வுலகில் நாம் எப்படி மேன்மையான நிலையில் வாழமுடிகின்றதோ, அதேபோல அவ்வுலக வாழ்வில் நாம் மேன்மையான நிலையில் இருப்பதற்கு, பிறருக்கு உபகாரம் செய்வதனுலே வருகின்ற, அருள் சம்பாத்தியம் இன்றியமையாதது என்கின்றனர்.

இன்னெரு சாரார், முன்பிறவியும் கிடையாது; முன்வினையும் கிடையாது; ஒரே பிறவிதான் நமக்கு உண்டு; இறந்த பிறகும், நமக்குத் தொடர்ச்சியான வாழ்க்கையும், அறிவும், அன்பும் கிடையாது; இறந்தவர்களுக்கு ஒன்றுமே தெரியாது; (The dead know not) இயேசு

நாதரை நம்பினவர்களுடைய உயிர்களை மட்டும், நியாயத் தீர்ப்பு நாளன்று, உடல்கொடுத்து எழுப்பப்படும்; அது வரை கல்லறையில் செயலற்றுக் கிடக்கும். (We leave him in God's hands till the grəat resurrection day, when body & soul will be reunited. Till then the souls have to slumber in the graves.) என்றெல்லாம் கூறுகின்றனர்.

நம்மைப்பற்றிய இந்த விவகாரத்தில், ஏதாவது ஒன்றுதான் உண்மையாக இருக்கமுடியுமே தவிர, இரண்டும் உண்மையாக இருக்கமுடியாது. உலகத்திலுள்ள எல்லா மனிதர்களுடைய உடல் அமைப்பும், பிறப்பும், வளர்ப்பும், மூப்பும், இறப்பும், ஏதோ ஒரு நியதிக்குட்பட்டு, ஒன்றுபோல் அமைந்திருப்பதிலிருந்து, பிறப்பிற்கு முன்னுள்ள நிலையும், மரணத்திற்குப் பின்னுள்ள நிலையும், எத்தேசத்தவருக்கும், எந்தப் பாஷை பேசுகிறவருக்கும், எந்தக் கொள்கையுடையவருக்கும், ஒரே நியதிக்குட்பட்டு, ஒன்றுபோல்தான் இருக்கவேண்டும் என்பதை, யூகித்துக் கொள்ளக்கூடும்.

ஏதாவது ஒரு கோட்பாடும், கொள்கையும் உடையவர்களுக்குரிய, உடல் அமைப்பும், பிறப்பும், வளர்ப்பும், மூப்பும், சாக்காடும், மற்றவர்களுக்கு அமைந்திருப்பதுபோல் இல்லாமல், வித்தியாசமாக யிருக்குமானால், அப்படிப்பட்டவர்களுக்கு, இறந்த பின் வேறு விசேஷமான சலுகைகள் ஏற்படக்கூடுமென்று எண்ண இடமுண்டு. அப்படி இல்லாதிருப்பதை நன்ருக உணரும் பொழுது, மரணத்தின் பின்னுள்ள நிலையும், பிறப்பிற்கு முன்னுள்ள நிலையும் மனித வர்க்கத்திற்கே ஒரே நியதிக்குட்பட்டதாகவும், ஒரே தன்மையுடையதாகவுமே இருக்கவேண்டுமென்பதை எல்லோரும் யூகித்து உணர்ந்துகொள்ளலாம்,

பண்டைய நாட்களில் இன்றைய உலக நிலை போல, கல்வி வசதியும், ரேடியோ வசதியும், தபால் தந்தி வசதி யும், கப்பல், ரயில், விமானம் , முதலிய போக்குவரத்து வசதியும் இருந்ததில்லை. அநேக நிகழ்ச்சிகள். சந்ததி சந்ததி யாக வந்த கேள்விஞானத்தைக்கொண்டு, முடிவுசெய்யப் பெற்றிருந்திருக்கின்றன. அதனால் ஒன்றை மிகைப்படுத்திச் சொல்லுவதும், ஒன்றைக் குறைத்துச் சொல்லுவதும், ஒன்றை மாற்றிச் சொல்லுவதும், எளிதானதாக இருந் திருக்கிறது.

மேலும், ஒரு நிகழ்ச்சியைப்பற்றிக் கேள்விப்பட்ட தும், அதன் காரண காரியத்தையும், அதன் உண்மையை யும், பொய்மையையும். ஆராய்ந்து தெளிகின்ற தைரிய மும், அந்த நாளில் இருந்திருக்க ஏதுவில்லை. அரசன் ஆணை யை அப்படியே சிரமேற்கொள்ளாவிட்டால், உயிர் ஆபத் தாய் முடிகின்ற காலம் அது. இன்று அரசனையும் கேள்வி கள் கேட்டு, நியாயவிரோதமாக அவன் நடந்தால், அவனை அப்பதவியிலிருந்து நீக்கக் கூடிய தைரியமும், சட்ட ஞான மும் பெற்றிருக்கின்றோம். ஆனதால் மூட நம்பிக்கை ஒரு புறமும், உண்மைக்கு மாறான பித்தலாட்டம் மறுபுறமும், பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட விவாதங்களா லும்.விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சியாலும் நெருக்குண்டு, மெல்ல மெல்ல நழுவிக்கொண்டிருக்கின்ற காலம் இது.

நிரூபிக்கப்படாத கொள்கைகளும், மத போதனை களும், நாளடைவில் கைவிடப்பட்டுவிடும் என்பது, உல கெங்கணும் காணப்படுகின்ற உண்மையாகும். இவ்வுலகம், தட்டையானது என்று ஒரு காலத்தில் கருதப்பட்டிருந் தது. இறுதியில் இவ்வுலகம், உருண்டையானது என்று மறுக்கமுடியாத நிலையில் நிரூபிக்கப்பெற்றதும், உலகம் அதை ஏற்றுக்கொண்டுவிட்டது. காலமோ, தூரமோ, மனித இனத்தைப் பிரித்துவைக்க முடியாத காலம் இது. உலகின் கிழக்குக் கோளத்தில், நடக்கும் நிகழ்ச்சிகளை,

மேற்குக் கோளத்தில் இருந்துகொண்டே பார்க்கவும், கேட்கவும், படம்பிடிக்கவும், முடிகின்றது. ஒருவர் பேசுகின்ற மொழியை மற்றவர் புரிந்துகொள்ளவும், அதே மொழியில் பேசவும் முடிகின்றது.

அப்படியெல்லாம் இருந்தும், இவ்வுலக வாழ்க்கைக்குப் பின்னுள்ள நிலை இன்னதுதான் என்பதை, சோதித்துப் பார்க்கக்கூடிய அளவு சோதித்துப் பார்த்து, ஒரு முடிவுக்கு வராவிட்டால், நம்முடைய சொந்த விஷயத்தைப் பற்றிய உண்மைகளை அறிந்துகொள்ள நாம் ஒரு சிறிதும் முற்படாதவர்களாகவும், வெளி உலகத்தையெல்லாம் அறிய முற்பட்டவர்களாகவும், குருட்டு நம்பிக்கையுடையவர்களாகவும், ''குருடும் குருடும் குருட்டாட்டமாடி, குருடும் குருடும் குழிவிழுந்தவாறே'' என்ற வாக்கியத்திற்கு இலக்கானவர்களாகவும் ஆவோம் அல்லவா? ஆனதினால், நம்மைப்பற்றி நம்முடைய சோதனையினால் பெறப்படும் உண்மைகள், இதுவரை நாம் கொண்டிருந்த நம்பிக்கைக்கோ, கோட்பாட்டிற்கோ, முற்றிலும் மாறுபட்டிருந்தாலும், அந்த உண்மையை ஏற்றுக்கொள்ள அறிவுடையோர் எள்ளளவும் தயங்கவோ, அச்சங்கொள்ளவோ கூடாது.

**73. ''உறங்குவதுபோலும் சாக்காடு'' என்றும் ''சாதலின் இன்னாததில்லை'' என்றும் கூறுகிற திருக்குறள்களில், எதுதான் உண்மையானது என்பதை எவ்வாறு நிச்சயிப்பது?**

இறப்பு நிகழ்வதைப் பற்றியும், பிறப்பு நிகழ்வதைப் பற்றியும், பலரும் பலவிதமாகச் சொல்லுகிறார்கள். அவற்றில் இறப்பைப் போல் வருத்தம் விளைவிக்கின்ற சம்பவம், நமக்கு வேறு எந்த நிலையிலும் உண்டாவதில்லையென்றும், அது எண்ணாயிரம் தேள் கொட்டினதிற்கு ஒப்ப, அவ்வளவு வேதனையுடையது என்றும், பெரும்பாலோர்

சொல்லுகிறார்கள். ஆனால் திருவள்ளுவர், "உறங்குவது போலும் சாக்காடு, உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" என்று சொல்லியிருக்கிறார். இதில் சாவு நிகழ்வது உறக்கம் வருவது போலத் துன்பமே இல்லாதது; பிறப்பு நிகழ்வது உறக்கத்திலிருந்து விழிப்பதுபோலத் துன்பமே இல்லாதது என்கிறார்.

மணிமேகலை ஆசிரியர் "பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும், உறங்கலும் விழித்தலும் போன்ற நுண்மையின்" என்று திருவள்ளுவர் கூறியிருப்பதையே வலியுறுத்துகிறார். ஆகவே இறப்பு, பிறப்பு என்னும் இவ்விரு நிகழ்ச்சிகளும், தூங்குவதுபோலவும், விழிப்பதுபோலவும் உடல் வருத்தம், ஒரு சிறிதும் உண்டாக்காமல் நிகழ்கின்ற காரியங்கள் என்று தெரிகிறது. ஆனால் அதே திருவள்ளுவர், மற்றொரு இடத்தில் "சாதலின் இன்னாததில்லை, இனிது அதூஉம் ஈதல் இயையாக்கடை" என்று கூறியிருக்கிறார். இதில் ஒருவனுக்கு, இறத்தலைப்போல் துன்பஞ் செய்வது வேறொன்றும் இல்லை; அப்படிப்பட்ட சாவும், வறியவர்களுக்கு உபகாரமாக எப்பொழுதும் கொடுத்து வந்த உள்ளமுடைய வள்ளலுக்கு, அவ்வாறு கொடுத்து உதவமுடியாத காலத்தில், இன்பம் செய்வதாகும்; என்கிறார்.

இது முன்சொன்ன திருக்குறளுக்கு முரணாக இருப்பதுபோல் தோன்றலாம். இவற்றில் எதுதான் உண்மை என்று நமக்குச் சந்தேக விபரீதமின்றித் தெரிய வேண்டுமானால், அதைப்பற்றி நன்றாக ஆராய்தல் வேண்டும். நாம் ஒவ்வொருவரும் பிறக்கும்பொழுது துன்பம் எதுவும் அனுபவித்ததாக நமக்குத் தெரியவில்லை. பிறக்கும்பொழுது ஏதும் உணர்ச்சியிருந்ததாகத் தெரியவில்லை. பிறந்த குழந்தைக்கு, அது அழத்தொடங்கின பிறகுதான், உணர்ச்சியே வருகிறதாகத் தெரிகிறது. அதுவரை, தூக்கத்தில் இருக்கிற ஒரு குழந்தையை, அது கிடந்த இருட்டு அறை

யிலிருந்து வெளியே கொண்டுவந்து கிடத்திவிட்டால், அதற்கு, எப்பொழுது வெளியே வந்தோம், எப்படி வெளியே வந்தோம் என்பன, தெரியாதல்லவா? அதே நிலைமையிலேயே, யாதொரு உடல் வருத்தமும் மனவருத்தமுமின்றி, நாமெல்லாம் பிறந்திருக்கிறோம் என்றுதானே சொல்லவேண்டும்.

இனி இறப்பு எப்படி ஏற்படுகிறது என்பதை, நாம் தெளிவாகத் தெரிந்துகொள்ளவேண்டுமானால், ஒன்று நாமே இறந்துபோனபின், அந்த அனுபவத்தை நேரில் அறிந்துகொள்வோம் என்று விட்டுவிடவேண்டும்; இல்லையேல் இறந்துபோனவர்களுடன் பேசி, அவர்களுடைய அனுபவங்களை அறிந்து, நாமும் தெளிந்த சிந்தையுடன் இறப்பை எதிர்நோக்கி, வாழ்வாங்கு வாழவேண்டும்; இல்லாவிட்டால், அனுபவமில்லாதவர்களின் பயங்கொள்ளித்தனத்தில் நாமும் சிக்கி, பயப்படவேண்டாத ஒன்றிற்குப் பயந்து, நடுங்கிப் பதைபதைத்த பேதையர் ஆவோமென்பதை யாரும் மறுக்கமுடியாது.

இறந்தவர்களிடம், இறப்பு ஏற்படுவது எப்படி என்று கேட்டால், அவர்கள், ''தூக்கம் எப்பொழுது வந்தது என்றும், எப்படி வந்தது என்றும், தினமும் தூங்கிக்கொண்டிருக்கிற உங்களுக்கு எப்படித் தெரியவில்லையோ, அதேபோல, நாங்கள் எந்த விநாடியில், என்னவிதமாகத் தூல உடலைவிட்டுப் பிரிந்தோம் என்பது தெரியவில்லை; ஆவி பிரியும்பொழுது உடல் வேதனையோ, அதிர்ச்சியோ, யாதொன்றும் இல்லை; நீங்கள் கனவு கண்டுகொண்டிருக்கும்பொழுது, அவ்விதமாகக் கனவு காணுகிறோம் என்ற உணர்ச்சி, ஒரு சிறிதுமின்றி, உண்மையிலேயே இன்பதுன்பம் அனுபவிக்கிறதாகக் கருதுகிறீர்கள் அல்லவா? கனவு காணும்பொழுது, தூல உடல் எங்கே கிடக்கிறது, எப்படிக் கிடக்கிறது என்ற உணர்ச்சி, கன

வில் தொழிற்படுகின்ற உடலுக்குக் கொஞ்சமேனும் இல்லை அல்லவா?

அதேபோல, நாங்கள் இறந்துவந்த பிறகும், கனவில் அனுபவித்துக்கொண்டிருந்த, அதே ஆவி உடலோடு தொடர்ந்து, இன்ப துன்பம் அனுபவித்துக்கொண்டிருப்ப தால், எந்த விநாடியில், தூல உடலை விட்டு அறவே பிரிந் தோம், தூல உடல் எங்கே, எப்படிக் கிடக்கிறது என்ற உணர்ச்சி ஒரு சிறிதும் இல்லை; எங்கள் தூல உடலைப் புதைத்தார்களா, சுட்டார்களா, பத்திரப்படுத்தி வைத்தார் களா என்ற கவனமும், கவலையும் அறவே இல்லை; ஆவி உலகத்திலுள்ளவர்கள் எங்களைப்பார்த்து, பூலோகத்தை விட்டு நீங்கள், இறந்துவந்திருக்கிறீர்கள் என்று சொல்லி. காரணங்கள் காண்பித்து, நாங்கள் குடியிருந்த தூல உடலையும் காட்டி, நாங்கள் காணும் வரை, நாங்கள் இறந்துபோனோம் என்று உணர்ந்து கொள்ளவோ, ஒத் துக்கொள்ளவோ. முடியவில்லை" என்கிறார்கள். என்ன ஆச்சரியம் பாருங்கள்! முன்னர் குறிப்பிட்டிருக்கிற ஆங் கிலப் புத்தகத்தில் உள்ள மூன்று ஆவிகளின் அனுபவ உரை களும், மேலே சொன்ன கருத்தை வலியுறுத்துகின்றன. அவை கீழ்வருமாறு:—

Page 28. A natural death is not a more painful process than that of being born-in fact, there is no more conciousness in the one case than in the other.

(Life beyond the grave)

As this world of ours is a counterpart of yours, some hardly realise any change, or that they have cast off their earthly bodies until told so, and even then in many cases it is most difficult to convince them of the fact—

(Not silent - if dead.)

"இவற்றின் மொழிபெயர்ப்பு:— உண்மையில் நாம் பிறக்கும்பொழுது எவ்வித உணர்ச்சியும் இல்லாதது போலவே, நாம் இறக்கும்பொழுதும் யாதொரு உணர்ச்சியும் இல்லை. ஆதலால் சாதாரணமான மரண நிகழ்ச்சி, பிறக்கும்பொழுது உள்ளதைவிட அதிகத் துன்பம் விளைவிக்கக்கூடியது அல்ல"

(கல்லறைக்குப் பின்னுள்ள வாழ்க்கை.)

"எங்களுடைய இந்த (ஆவி) உலகம் உங்களுடைய உலகத்தின் மூலப்பிரதி (அசல்). ஆதலால், சிலர் பூலோகத்திலிருந்து மறு உலகத்திற்கு மாறியிருக்கிற, தங்களுடைய மாற்றத்தையும், பூலோகத்திலுள்ள தூல உடலைக்கழற்றித் தள்ளிவிட்டு வந்திருக்கிறோம் என்பதையும், பிறர் எடுத்துச் சொல்லும்வரை உணராதிருக்கிறார்கள். அப்படிச் சொன்னாலும்கூட அநேகரை அந்த உண்மையை உணரச் செய்வது மிகவும் கஷ்டமான காரியமாக இருக்கிறது."

(பேசாதிருப்பதில்லை—இறந்தபின்)

Page 29. Physical pain drops off you like a garment with the body which you have left behind. You wake up well, and your first impression is one of delight: just the same as when you wake up from a bad dream and discover that it was only a dream. So simple, so natural does this seem, that you almost always mistake what has taken place. I did as know. And I find it is a common experience. Many refuse to believe they are dead. It is, ofcourse, true that they are not dead. They have all their faculties; they see, they hear, they move hither and thither. Everything

seems the same to them as before. Their first realisation of the change that has taken place is a kind of shock to them. "So this is death. Then if so, there is no such thing as death." For it is so entirely different from what we imagined.

What first convinced me that something had happened was the sight of my old body. After that came the discovery that my nurse did not see me nor hear me, but wept about my body as if that were myself. This is what usually happens.

Page 30 When the newly arrived have had many friends, relatives, or those whom they have loved on this side, they find them waiting for them. Especially when they have kept thinking of or praying for them Forgetfulness separates here as there. But all whose minds and hearts have been closely knit in love with those on this side find their loved ones waiting — (Life beyond the grave)

இவற்றின் மொழிபெயர்ப்பு:- உடல் வருத்தமென்பது ஒரு சட்டையைக் கழற்றினது போல, தூல உடலை விட்டவுடன் உன்னைவிட்டுக் கழன்றுவிடுகிறது. நீ நன்றாக விழித்தெழுகின்றாய். முதலாவதாக, ஒருவித மகிழ்ச்சியே உனது மனதில் ஏற்படுகிறது. ஒருவன் ஒரு பயங்கரமான சொப்பனம் கண்டுகொண்டிருக்கும்பொழுது, விழிப்புவந்து, இதெல்லாம் சொப்பனம்தான் என்று கண்டுகொண்டால் எப்படியிருக்குமோ, அது போலத்தான் இருக்கும். அவ்வளவு இலேசானதாகவும், அவ்வளவு இயற்கையானதாகவும்.

இறப்பு நிகழ்வதால், பெரும்பாலும் என்ன நடந்திருக்கிறதென்பதையே, நீ சரியாகப் புரிந்துகொள்ளமாட்டாய். எனக்கு அப்படித்தன் இருந்தது. இங்கு எல்லோருக்கும் அவ்விதம் இருந்ததாகவே அறிகிறேன்.

இறந்து வந்தவர்கள் தாங்கள் இறந்துபோனதாகவே ஒத்துக்கொள்ள மறுக்கிறார்கள்; அவர்கள் இறக்கவில்லை என்பது காரியப்பாட்டில் உண்மையே; அவர்களுக்குரிய திறமைகள் அத்தனையும் அவர்களுக்கு இருக்கின்றன. அவர்கள் பார்க்கிறார்கள். அவர்கள் கேட்கிறார்கள். அவர்கள் இங்கும் அங்கும் போகவர இருக்கிறார்கள். எல்லாம் முன்பு இருந்ததுபோலவே அவர்களுக்கு இருக்கிறது; முன்னிருந்ததிலிருந்து ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறதென்ற உணர்ச்சி, முதலாவதாக ஏற்படும்பொழுது, அவர்களுக்கு ஒருவித திகைப்பு உண்டாகிறது, இறப்பு என்பது இதுதானா? அப்படியானால், இறப்பு என்ற ஒன்றே இல்லை என்று சொல்லலாம். ஏனென்றால், நாங்கள் முன்னமே கருதியிருந்ததற்கு அது முற்றிலும் மாறாக அல்லவா இருக்கிறது.

நான் முன்குடியிருந்த சடலத்தைப் பார்த்ததின் பிறகே, ஏதோ நடந்திருக்கிறது என்ற நிச்சயம் எனக்கு முதலில் உண்டாகியது. அதன் பின்னர் எனக்கு மருந்து கொடுத்துக்கொண்டிருந்த தாதிப் பெண் என்னை (நான் ஆவி உடலில் இருந்ததால்) பார்க்கவும் முடியாமல், நான் பேசுவதைக் கேட்கவும் முடியாமல், என்னுடைய தூல உடம்பு கிடந்ததின் பக்கத்தில், அந்தச் சடலமே நான் என்று கருதி அழுதுகொண்டிருப்பதையும் கண்டேன். இதுதான் எல்லோருக்கும் சாதாரணமாக நடக்கிற நிகழ்ச்சி.

(குறிப்பு:— இறந்தவர் ஆவி உடலோடு நின்று தனக்கு மருந்துகொடுத்த தாதியைக் கூப்பிடும்பொழுது, தூலஉடலோடு இருக்கிற தாதிக்கு இறந்தவர் ஆவியாக நிற்பதும்

தெரியவில்லை. அவர் கூப்பிடுகிறதை அவளுக்கு அறியவும் முடியவில்லை. தாதியானவள், இறந்தவருடைய தூலக் கூட்டை, அவர்தான் என்று கருதிக் கூப்பிடுகிறாள். உள்ளே இருந்தவர் வெளியேறினபின், வெற்றுக்கூடு எப்படிப் பேசும் அங்கே மூச்சுப் பேச்சு இல்லை யென்ற உடன், அவள் அழுது புலம்புகிறாள்).

இறக்கும் தறுவாயில் உள்ளவர்களின் சிநேகிதர்களும், உறவினர்களும் அல்லது அவர்களின் அன்பிற்குப் பாத்திரமான ஆவி உலகவாசிகளும், அவர்களின் வருகையை எதிர்நோக்கிக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அவ்விதம் செய்வது, முக்கியமாக அவர்களைப் பற்றி நினைத்துக் கொண்டும், அவர்களுக்காகப் பிரார்த்தித்துக்கொண்டும், இருக்கப்பட்டவர்களேயாவார்கள். மறதி என்பது பூலோகத்திலும், மேலோகத்திலும் ஒருவரை ஒருவர் பிரிந்திருக்கச்செய்கிறது. அன்பினால், யார் யாருடைய மனமும் இருதயமும், இங்குள்ளவர்கள்பால் நெருக்கமாகப் பின்னியிருக்கிறதோ, அவரவர்களுடைய அன்பிற்குரியவர்களெல்லாம் அவரவருடைய வரவை எதிர் நோக்கிக் காத்துக் கொண்டிருப்பதை அறியலாம்.''

(கல்லறைக்குப் பின்னுள்ள வாழ்க்கை)

இவைகளிலிருந்து, இறப்பு என்பது துன்பமில்லாத நிகழ்ச்சி என்பது, சந்தேகத்திற்கிடமின்றி வலியுறுத்தப் பெறுகிறது. இந்த உண்மை அசைக்கமுடியாமலிருக்குமேயானால், ''சாதலின் இன்னாத தில்லை'' என்ற குறளுக்கு உண்மையான பொருள் வேறொன்று இருக்கவேண்டுமென்ற சிந்தனை ஏற்படலாம். அதிலிருந்து அக்குறளுக்குப் புதியதோர் பொருள் உண்டென்பது விளக்கமாகும். எப்பொழுதும் பிறருக்கு உபகாரமாகத் தருமம் செய்துவந்தவன், அது செய்ய முடியாத நிலை ஏற்படும்பொழுது, மனம் நொந்து, பிறருக்கு உபகாரமாக இருக்கமுடியவில்லையே

என்று தயங்குவான். அது அவனுடைய உடலுக்கு யாதொரு வருத்தமும், கொடுக்காது. மன வேதனையையே கொடுக்கும்.

அது போலவே சாகப்போகிறோமே, நமக்கு வேண்டிய மனைவி, மக்கள், நிலம், புலம், வீடு, மாடு இவற்றையெல்லாம் விட்டுப் பிரியப்போகிறோமே, என்ற மன வேதனை, சாகும் தறுவாயில் வருவதுபோல வேறு எதிலும் வருவதில்லை. அவ்வித மனவேதனையோடு, பிறருக்குக் கொடுத்துதவும் வள்ளல் தன்மையைக் குறிக்கோளாகக் கொண்ட ஒருவனுக்கு, அது முடியாதபோது ஏற்படுகின்ற மனவேதனையை ஒப்பிட்டுப்பார்க்கும்போது, அவனுக்கு, உடலையும் இவ்வுலகத்தையும் விட்டுப்பிரிவதில் வருகின்ற மனவேதனை இன்பமானதாகவும், பிறருக்குக் கொடுத்துதவ முடியாமையால் வருகின்ற மனவேதனை, அதிகத் துன்பமானதாகவும் இருக்கும், என்ற பொருள் விளக்கமாகின்றது.

எனவே "உறங்குவது போலும் சாக்காடு" என்கிற திருக்குறளும், "சாதலின் இன்னாததில்லை" என்கிற திருக்குறளும், ஒன்றுக்கொன்று முரண்பாடுடையதல்லவென்று தீர்மானிப்பதற்கு, மரண நிகழ்ச்சியை அனுபவித்தவர்களோடு பேசியும், தொடர்புகொண்டும், நமக்குச் சாத்தியப்படுமே தவிர, வேறு எவ்விதத்தாலும் முடியாது என்பது தெளிவாகும். இதுபோலவே மரணத்தின் பின் நமக்குள்ள வாழ்க்கையின் நிலையையும், மேலுலகங்களின் உண்மையையும், இங்கும் அங்கும் எங்கும் புகழுடன் வாழ்வதற்குக் கடைப்பிடிக்கவேண்டிய ஒழுக்கங்களையும், நாம் ஐயம் திரிபறத் தெளிவதற்கு, ஆவி உலகத்தவரின் தொடர்பின்றி சாத்தியப்படாது என்பதை யாரும் மறுக்கமுடியாது.

## 74. இறந்தவர்களின் தொடர்பு இனிமையாக அமைவதற்கு, அறிந்திருக்கவேண்டிய உண்மைகள்.

இறந்தவர்களோடு பேசுகின்ற பேச்சு இனிமையாக அமைவதற்கு நமக்குப் பொறுமையும், உண்மை ஆர்வ

மும், பக்தியும், தூய்மையும் வேண்டுமென்பதையும், பேசுகின்றவர்கள் ஆவி உலகத்தில் மேலான நிலையில் இருக்கக் கூடியவர்களாக அமைதல் வேண்டும் என்பதையும், யார் மூலமாகப் பேசுகின்றோமோ அவர்களும் சிறந்த சக்தி வாய்ந்த ''மீடியமாக'' அமைதல்வேண்டும் என்பதையும் முற்பகுதியில் (பக்கம் 56 முதல் 60 வரை) விளக்கிக்கூறி யிருக்கிறோம்.

அமெரிக்காவில், இறந்தவர்களோடு பேசுவதை, தெய்வத்தோடு பேசுவதாக எண்ணி. இவ்வுலக வாழ்க்கைக்கு வேண்டிய வருவாய்களைப்பற்றியும், அவற்றைச் சொல்ல முடியாத நிலையிலுள்ளவர்களோடு கேட்டு, மக்கள் ஏமாற்றம் அடைந்த விபரம் 47-48-வது பக்கங்களில் குறிப்பிட்டிருக்கிறோம்.

சிலர் குதிரைப் பந்தயம், எழுத்துப் பரிசுப் போட்டி, பள்ளிக்கூடக் கேள்வித்தாள்கள், இவற்றின் இரகசியங்களை அறிவதற்கு ஆவல்கொண்டு பேச முயலுகின்றார்கள். அதெல்லாம் சொல்லமுடியாத நிலையில் உள்ளவர்களும் உண்டு. சொல்லமுடிகின்ற நிலையில் உள்ளவர்களும் உண்டு. பெரும்பாலும், தெரியாதவற்றைத் தெரிந்தது போல் பேசிவிடுகின்ற இவ்வுலகப் பழக்கம்போல, ஆவி உலகத்தில் கீழ்நிலையிலுள்ள மக்கள், பொய் பேசுதலும் உண்டு. நம்முடன் பேசவேண்டுமென்ற ஆத்திரத்தினால், கூப்பிடாத ஒருவர், நாம் கூப்பிட்டவரின் பெயரைச் சொல்லிக்கொள்வதும், பேசுகின்றதும் உண்டு (முற்பகுதியின் 44-வது தலைப்பைப் பார்க்கவும்) இங்கு, தூல உடலில் குடியிருந்த, பல்வேறு நிலையிலுள்ளவர்கள் அங்கு சென்றிருப்பதால், இங்கிருந்த அவர்களுடைய குணம் அங்கும் காணப்படுகின்றது.

பின்னால் நடக்கப்போவதை முன்னால் சொல்லமுடிகின்ற மேல் நிலையில் உள்ளவர்கள், சொல்லக்கூடாத

இரகசியங்களை, மேலுலக அதிபதிகளின் அனுமதியின்றி, பூலோகத்தாருக்கு அறிவிப்பது, பாவமாகுமென்று அறிந்திருக்கிற காரணத்தால், நம்முடைய சின்னத்தனங்களை வெறுத்து, நம்முடன் பேசவும் விருப்பமில்லாதவர்களாக ஆகிவிடவும் ஏதுவாகும். ஆனால் நமக்கு பின்னால் நடக்கக் கூடியவற்றை, முன்னாலே அறிவிக்கப்படவேண்டிய தகுதியிருக்குமானால், அவர்களாகவே, நாம் கேளாதிருக்கவும் அறிவிப்பார்கள்.

களவு செய்யும் மனப்பான்மையுடைய ஒருவன், ஒரு வீட்டில், பணம் எவ்வளவு வைத்திருக்கிறார்கள், அதற்குரிய சாவி எங்கே வைத்திருக்கிறார்கள், அவர்கள் எங்கே தூங்குவார்கள், என்ற கேள்விகளையெல்லாம் கேட்டுத் தெரிந்துகொண்டால், சுலபமாகக் களவு செய்யலாமென்று கருதி, ஆவி உலகத்தவரோடு தொடர்புகொண்டால், கேட்கிறவனுடைய கெட்ட எண்ணத்தை அவர்கள் விளங்கி, மேல்நிலையிலுள்ளவர்கள் எல்லோரும், இவ்வித முட்டாள் தனமான கேள்விகள் கேட்கவேண்டாமென்று சொல்லி விடுவார்கள். அங்குள்ளவர்களில் சாதாரணத் தன்மையுடையவர்கள், ஒன்றுக்கொன்றைச் சொல்லி, ஏமாற்றம் அடையச் செய்து நகைபாடுவார்கள். கெட்ட எண்ணத்தோடு கேட்கின்ற கேள்விகள், மேலான ஆவிகளின் தொடர்பைத் தடைப்படுத்திவிடும்.

ஆகையால் நாம் நல்ல எண்ணத்தோடும், பணிவோடும், தூய்மையோடும், ஆவி உலகத்தொடர்பு கொள்ளுதல் அவசியமாகும். இவ்வுலகில் நாம் ஒரு பெரிய மனிதரை நம்முடைய வீட்டிற்கு அழைக்கிறதாயிருந்தால், நாம் அவர் வரக் கூடிய தகுதியில் நடந்து, நம்முடைய வீடுகளைச் சுத்தமாக வைத்து, வீட்டிலுள்ளோர் அவரிடம் மரியாதையாக நடந்துகொள்ளும்படி செய்வோமல்லவா? அது போலவே, ஆவி உலகத்தவர்கள் நம்முடைய வீட்டில் வந்து பேசும்பொழுதும், நாம் நடந்துகொள்ள

வேண்டும். இனி மேலுலக அதிபதிகளான மூர்த்திகளுக்கு, நம்முடைய வீடுகளில் பூஜை முதலியன செய்யும்பொழுது, அவர்கள், வரக்கூடிய தகுதியில் நம்முடைய இடங்கள் இருந்தால், நேரிலே வரவும் செய்வார்கள். ஆனதால் விசேட நாட்களில், நம்முடைய வீடுகளைத் தூய்மையாக வைத்து, நாமும் தூய்மையாக இருந்து வழிபாடு செய்வது நமக்குச் சிறந்த பயனைத் தருவதாகும்.

**75. ஆண்டவன் "நினைப்பவர் மனம் கோயிலாக கொண்டவன்" "ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளான்" என்ற வாக்குகளின் உண்மையை எவ்வாறு நிச்சயிப்பது?**

ஆலயங்களில் ஆண்டவன் எப்பொழுதும் அமர்ந்திருந்து அருள் புரிவதனுல், அங்கு பலவித ஆசாரங்களும், யாரும் எவ்வித அசுத்தம் செய்யக்கூடாதென்ற விதி முறைகளும், அசுத்தமாகிவிட்டால் அதை நிவர்த்திக்கச் செய்ய வேண்டிய பிராயச்சித்தம் அல்லது சாந்தி முதலிய வழி வகைகளும், அமைக்கப் பெற்றிருக்கின்றன. ஆவி உலகத்தவர், நம்முடைய கண்ணுக்குத் தெரியாதிருந்தாலும், அவர்களை நினைத்து. பேச முயற்சிக்கிறவர்கள் வசிக்கின்ற இடங்களுக்கு வந்து, தகுந்த மீடியம் மூலம், அவர்களுடைய அனுபவத்தை நமக்குத் தெரியும்படி சொல்லுவதை விளங்கிக் கொள்ளுகிறதைக் கொண்டே, ஆண்டவன் கண்ணுக்குத் தெரியாதவனுக இருந்தாலும், அவனை நினைத்து வழிபாடு செய்யப்பெறுகிற விக்கிரகங்களிலும், அவனை நினைத்து 'அந்தர்யாக' பூஜையாகிய மானத பூஜை செய்கின்ற அன்பர்களின் இதயத்திலும், அவன் கோயில் கொண்டு எழுந்தருளி, அருள் புரிகின்ற முறையை ஓரளவு யூகித்து உணர்ந்துகொள்ளக் கூடும்.

நம்முடைய சுற்றத்தாரும், நண்பரும் இறந்தபின் நாம் நினைத்தாலன்றி, நம் அருகில் வருவதில்லையென்பதை

யும், நினைத்துவிட்டால் தவருது வருகிருர்கள் என்பதை யும், அனுபவத்தில் உணரும்பொழுதே, ஆண்டவன் எங் கும் செறிந்தவனுக பொது நிலைமையில் இருந்தாலும், அவனை நினைக்கின்றவர்கள் உள்ளத்திலும், அவனை நினைத்து விதிப்படி வீற்றிருக்கச் செய்கிற இடங்களிலும். அவன் சிறப்பு நிலைமையில் வெளிப்பட்டுத் தோன்றி எழுந்தருளு கிற தன்மை ஒரளவு புலனுகும்.

ஆகாயமானது எங்கும் செறிந்திருந்தாலும், அது நம் முடைய கண்ணுக்கும் இதர கருவிகளுக்கும் எட்டாத பூதமாக இருக்கிறது. உலகத்திலுள்ள எல்லாப் பொருள் களிலும், ஆகாயம் கலந்திருக்கக்கூடிய நுண்மையும், தன் மையும் பெற்றது. அது ஊடுருவி நில்லாத பொருள் ஒன்றுமே உலகத்தில் கிடையாது. ஆகாயத்தில் தங்காமல் ஆகாயத்திற்கு அன்னியமாக, தனித்து இயங்கவும் இருக்க வும் கூடிய பொருள்களும் அண்டங்களும் கிடையாது. ஆகாயம், (சப்தஅலைகளை) ஒலிகளையெல்லாம் தன்னிடத்தே அடக்கிக்கொண்டும், வேண்டும்பொழுது வெளிப்படுத்திக் கொண்டும் இருக்கின்ற உண்மையை. வீடு வீடாக ரேடியோ வைத்து அனுபவிக்கும் இக்காலத்தில் யாரும் மறுக்கமாட்டார்கள். சப்த அலைகள் எங்கும் பொதுவான நிலையில் செறிந்திருந்தாலும், அதை ஒருவரும் கேட்க முடி கிறதில்லை. அப்படி இருந்தாலும், அது சிறப்பாக பிறர் கேட்கும்படியாக வெளிப்பட்டுத் தோன்றுகிற இடம், ஒரு நியதிப்படி தயாரித்த ரேடியோப் பெட்டியாக அமைந் திருப்பதுபோலவே, எங்கும் செறிந்த ஆண்டவனும், சிற் சில இடங்களில் சிறப்பாக வெளிப்பட்டுத் தோன்றியருளு கிருன்.

அதனுலேயே, ஆண்டவனை "நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன்" என்றும் "ஓயாதே உள்கு வார் உள்ளிருக்கும் உள்ளான்" என்றும், அப்பர் பெரு மானும், மணிவாசகப் பெருமானும் கூறியிருக்கின்றனர். ரேடியோப் பெட்டிகளில் வெவ்வேறு ஊர்களை எடுப்ப

தற்கு, வெவ்வேறு அளவுள்ள அலைகளின் மீட்டர்களைத் திருப்பவேண்டியதிருக்கிறது. அதேபோல, ஆவி உலகங்களிலுள்ளவர்களையும், அதற்கு மேலுள்ள உலகங்களிலுள்ளவர்களையும், நாம் அழைத்துப் பேசுவதற்குரிய மனோநிலையும், ஒழுக்கமும் நம்மிடம் இருக்க வேண்டும்.

யார் யார். எங்கெந்த நிலையிலிருக்கிறோமோ, அந்த அந்த நிலையை ஒத்தவர்கள்தான் சாதாரணமாக வருவார்கள். ஆனால், நம்மையும் நம்முடைய இடத்தையும் நாம் எவ்வளவுக்கு எவ்வளவு தூய்மைப்படுத்திக்கொள்ளுகிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு, நாம் மேல் நிலையிலுள்ளவர்களை அழைத்துப்பேச வாய்புக் கிடைக்கக் கூடியதாக இருக்கிறது.

நம்முடைய பக்குவத்திற்கேற்ப, மேலுலகத்தவர்கள் நம்மோடு இந்த உலகம் தோன்றிய காலந்தொட்டு எல்லாத் தேசங்களிலும் தொடர்பு வைத்து வந்திருக்கிறார்கள் என்பதை நாம் அறிந்திருத்தல் வேண்டும். முற்பகுதியில் இந்து மதத்திலுள்ள பலருக்கும், பௌத்தமத, கிறிஸ்துமத, முகம்மதியமத கர்த்தாக்களுக்கும், அவர்களோடு சம்பந்தப்பட்டவர்களுக்கும், பின் நிகழப்போவதை முன்னர் கனவில் அறிவித்திருக்கிற உண்மையும், அவர்கள் அந்த அந்த அறிவிப்பின்படி ஒழுகி வந்ததும் விரித்துக்கூறியிருக்கிறோம். இப்பொழுது இறந்தவர்கள் ஆவி உலகத்திலிருந்து இங்குள்ளவர்களிடம் வந்து பேசியிருக்கிறார்களென்பதற்கும், அங்ஙனம் வந்த ஆவிகளோடு பூலோகத்திலுள்ளவர்கள் பேசியிருக்கிறார்கள் என்பதற்கும் சிற்சில சரித்திரச் சான்றுகள் தருகின்றோம்.

## 76. இறந்தவர்களோடு பேசமுடியும் என்பதற்கு வியாசருடைய ஸ்ரீமகாபாரதத்திலிருந்து மேற்கோள்.

வியாசருடைய ஸ்ரீமகாபாரதம், 15–வது ஆசிரமவாச பர்வத்தில், திருதராஷ்டிரன், இறந்துபோன, தன் மைந்த

ரைக் கண்டுபேசியது பற்றிக் கூறியிருப்பதை உற்று நோக்குக. இந்த அதிசயம் கண்டவரும் கேட்டவரும் யாவரும் வியப்படைந்தனர்.' விதுரருடைய ஜன்ம விசேஷத்தைப் புகழ்ந்தனர். பாண்டவர்கள் அங்கே சில நாள் தங்கியிருந்தனர். அச்சமயத்தில் வியாசர் தோன்றினார். அவரைக் கண்ட திருதராஷ்டிரன் ''இறந்துபோன தன் மைந்தரைக் காண விரும்புவதாகத் தெரிவித்தான். காந்தாரியும் கேட்டுக் கொண்டாள். குந்தியும் கர்ணனைக் காண விரும்பினாள்.

வியாசர் அவர்களெல்லோரையும் கங்காநதிக் கரையில் ஒரு சோலைக்கு அழைத்துப்போய், அங்கே துரியோதனாதியரையும் கர்ணனையும், பீஷ்மர், துரோணர், கடோற்கஜன், அபிமன்யு, இளம்பாண்டவர்கள், சகுனி, சிகண்டி யாவரையும் நால்வகைப் படையுடன் வரவழைத்துக் காட்டினார். எல்லோரும் ஆசைதீரக் கண்டு, பேசி, ஆனந்தங்கொண்டார்கள். பாண்டவர்களும் அவர்களைக் கண்டு பரமானந்தமடைந்தார்கள். அப்பால் துரியோதனாதியரும் மற்றும் யாவரும், தத்தம் பதிக்குச் சென்றனர். அப்பால் வியாசர் ஆக்ஞைப்படி, பாண்டவர் அஸ்தினாபுரம் சென்றனர். ஸ்ரீ மகாபாரதம், 18-வது சுவர்க்காரோகண பர்வத்தில், தருமர், இந்திரலோகம் காண்பதும், துரியோதனனைக் காண்பதும், கர்ணன் அர்ச்சுனன் முதலியவர்களைக் காண்பதும், வைகுண்ட தரிசனஞ் செய்ததும், கீழ்க்கண்ட விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்திரனுடைய பரிவாரங்கள், தருமபுத்திரரை விமானத்தில் அழைத்துக்கொண்டு, இந்திரலோகம் போய், அங்குள்ள அதிசயங்களையும் புண்ய புருஷர்களையும், புண்ய புருஷர்களுடைய சுகாநுபவங்களையும், மாடமாளிகைகளையும், இன்னும் பூலோகத்தில் காணக் கிடைக்காத அதிசயங்களையும், அவருக்குக் காட்டிக்கொண்டே சென்று, அவரை இந்திரனுடைய சபைக்குக் கொண்டுபோனார்.

அங்கே தருமபுத்திரரைக் கண்ட நாரதர், அவருடைய குணவிசேஷங்களையும், அந்த குணவிசேஷங்களால் அவரடைந்த மேன்மையையும், சிறப்பித்துப் பேசினார். தருமபுத்திரர் "சுவாமி, நான்பெற்ற பேறு கிடைத்தற்கரியதாயினும், என்னுடன் பிறந்தவர்களும் பத்தினியும் வழியிலிருந்து மறைந்துபோனார்களே! அவர்களை நான் இந்த இடத்திலே கண்டால், எனக்குண்டாயிருக்கும் தாபத்ரயம் நீங்கும். இல்லாமற் போனால், இத்தனை சம்பிரமங்களைப் பெற்றவனாகேன்" என்றார். அப்பால், இந்திரன், தருமபுத்திரருக்கு அவர் பிரார்த்தனையை நிறைவேற்றக்கருதி, இதோ உமது தம்பிமார்களை நீர் பார்க்கலாம். கர்ணனையும் பார்க்கலாம். பத்தினியையும் பார்க்கலாம். கவலைப்பட வேண்டாம் என்று நவின்று, அவருக்கு அவர்களைக் காட்டும்படித் தன் தூதர்களுக்குக் கட்டளையிட்டான்.

அவர்கள், தருமராஜனை அழைத்துக்கொண்டு போய், துரியோதனனைக் காட்டினார்கள். துரியோதனன், தன் எதிரில் அரம்பாஸ்திரீகள் பரதநாட்டியமாட, தன் தோளில் பாரிஜாதபுட்பமாலை விளங்க, அநேகமான பணியாளர் அநேக உபசாரங்கள் புரிய, நவரத்தினகசிதமான சிங்காசனத்திலே வெகு சுகமாயிருக்கக்கண்டார். இவனுக்கு இந்தப் பதவிகிடைத்ததெப்படி எனவினவுகையில், "இவன் கணக்கிறந்த பாவங்களைச் செய்தவனானாலும் போர்முகத்தில் உறுதியாய் இருந்து உயிரைத் திரணமாய் மதித்து, எதிரியுடன் சண்டை செய்து இறந்தானாகையினால் இவனுக்கு இப்பதவி கிடைத்தது" என்று தேவர்கள் கூறக் கேட்டு மகிழ்ந்தார்.

அப்பால் தேவதூதர்கள் தருமபுத்திரரைத் தெய்வலோகத்தில் பல இடங்களுக்கும் அழைத்துப்போய்க் காட்டி, நரக தரிசனத்தையும் செய்வித்தனர். அங்கே தருமபுத்திரர் பாபிகள் படும் பாடுகளைக்கண்டு அஞ்சி நடுங்கி பதைத் துருகி அப்பாலேகினர். அங்கே ஒரு பக்கத்தில் தம்முடைய

தம்பிமார்கள், கர்ணன், திரௌபதி, துஷ்டத்துய்மன், உப பாண்டவர், உறவினர் யாவரும் நரகில் கிடந்து வருந்துவதைக் கண்டார். கண்டதும் ஆச்சரியப்பட்டு "இவர்களுக்கேன் இந்தத் துன்பம்?" எனத் தேவர்கள் "நல்வினை கொஞ்சம் செய்தவர்கள் முன்னே கொஞ்சம் சுவர்க்க போகத்தை அனுபவிப்பர். அப்பால் தீவினைகளுக்குத் தக்கபடி நரகத்துன்பங்களை அனுபவிப்பர். உமது தம்பிமார்களும் உமது உறவினரும், மனைவியும் தீவினை சிறிதும், நல்வினை அதிகமும் செய்தவர்கள். ஆகையினால் முன்னே நரகத்தை அனுபவிக்கிறார்கள், இவர்கள்.

துரியோதனனும் அவன் சகோதரரும் நல்வினை கொஞ்சமும், தீவினை அதிகமும் புரிந்தவர்கள். ஆகையினால் அவன் முன்னே போகத்தை அனுபவிக்கிறான். இனி அவனுக்கும் அவன் சகோதரர்களுக்கும் மீளாத நரக வேதனையுண்டாகும்" என்றனர். அப்போது இந்திரன் அங்குவந்து, "உம்மைக் கண்ட அளவில் உமது தம்பிமார் முதலிய யாவரும் தண்டனை கண்டனை தீர்ந்து, உன்னத பதவியிலுறுவதற்காக வீரசாந்தி ஸ்நானத்திற்குப் போய், பரிசுத்தமான அமுத போஜனமுண்டு, ஆனந்தத்திலிருக்கிறார்கள். வாரும் அந்தத் தரிசனமும் பாரும்" என்று அழைத்துச் சென்றான்.

இந்திரன், தருமராஜனைப் பல இடங்களுக்கு அழைத்துச் சென்று, அப்பால் பரவாசுதேவன் எழுந்தருளியுள்ள வைகுந்த நகரத்திற்கு அழைத்துப்போய் வைகுந்த நாதருடைய தரிசனம் செய்வித்தான். பின், அங்கே ஒரு பக்கம் கிருஷ்ணபகவான் அஷ்டலக்ஷ்மியுடன் விளங்குவதையும் காட்டினான். அதன்பின் இன்னொரு பக்கத்திற்கு அழைத்துப்போய், அங்கே கர்ணன், பீமசேனன் முதலிய தம்பிமார், திரௌபதி, இளம் பஞ்சபாண்டவர் முதலியவர்களைக் காட்டினார். அவர்களெல்லோரும் இந்தவிதமென்று இயம்புதற்கரிய, அரிய போகபாக்கியங்களுடன் சுகமாயிருப்

பதைக் கண்டு, தருமபுத்திரர் சந்தோஷமடைந்தார். அப்பால் தருமபுத்திரரை, அச்சுதப்பெயர் அண்ணலாகிய பச்சைமால் (மகாவிஷ்ணு) கிருபாகடாக்ஷம் வைத்துத் தம் மருகில் அமரும்படி அநுக்ரகம் செய்தருளினர். அந்தக் காட்சியைக் கண்டு யாவரும் மகிழ்ந்தனர். புண்ணியத்தின் மகிமையையெண்ணிப் பூரித்தனர். இந்திரன் முதலிய அவர்கள் அனைவரும் அவ்விடம் விட்டுத் தத்தம் இடத்திற்கு ஏகினர்.

## 77. கம்ப இராமயணத்திலிருந்து மேற்கோள்.

கம்ப இராமாயணத்தில் தசரதச் சக்கிரவர்த்தி இறந்த 14 ஆண்டுகள் கழித்து, இராமபிரான் சீதா பிராட்டியாரை இலங்கையிலிருந்து மீட்டி வந்தபின், அவள் தீக்குழிப் பாய்ந்து தனது கற்பு வழுவா ஒழுக்கத்தை உலகத்தாருக்கு மெய்ப்பித்தபின் தசரதமன்னன், வானுலகத்திலிருந்து பூவுலகிற்கு வந்து, இராமபிரானையும், சீதாபிராட்டியாரையும் கண்டு மகிழ்ந்தார் என்றும், அவ்விருவரும் தசரதரைத் தொழுதார்கள் என்றும், கூறப்பட்டிருக்கிறது. அந்த செய்யுள் கீழ்வருமாறு:—

ஆதியான் பணியருள் பெற்ற அரசருக்கரசன்
காதல் மைந்தனைக் காணியவுவந்ததோர் கருத்தால்
பூதலத்திடைப்புக்கனன் புகுதலும் பொருவில்
வேத வேத்தனும் அவன்மலர்த்தாள் மிசைவீழ்ந்தான்

அதைத் தொடர்ந்து தசரதர், இராமரைப் போற்றிப் பேசியிருப்பதும், சீதையைத் தேற்றிப் பேசியிருப்பதும் இராமரை வரங்கேட்கச் சொல்லி அவர் கேட்ட வரங்களையெல்லாம் கொடுத்திருப்பதும், அதன் பின்னர் இராமரை மண்ணுலகத்தில் நிறுத்திவிட்டு, தான் விண்ணுலகம் ஏகினதும், விரித்துக் கூறப்பெற்றிருக்கிறது. அதன் இறுதிச் செய்யுள் வருவாறு:–

வரம் இரண்டளித்து அழகனையிளவலை மலர் மேல்
விரவுபொன்னினை மண்ணிடை நிறுத்திவிண்ணிடையே
உரவுமானமீது ஏகினன் உம்பர் உலகும்
பரவு மெய்யினுக்கு உயிரளித்து உறுபுகழ் படைத்தோன்.

## 78. சிலப்பதிகாரத்திலிருந்து மேற்கோள்.

சிலப்பதிகாரத்தில் பத்தொன்பதாவது—ஊர்சூழ்வரி—அத்தியாயத்தில், கோவலன் வெட்டுண்டு, உயிர் இழந்த இடத்தில் கண்ணகி சென்று, கணவனுடைய மார்பைத் தழுவி அழுதபொழுது, கோவலன் எழுந்து நின்று, அவளுடைய கண்ணீரைத் துடைத்ததாகவும், அவள் அழுது ஏங்கி நிலத்தில் வீழ்ந்து, கோவலனுடைய பாதங்களைப் பற்றியதாகவும், அப்பொழுது, கோவலன் வெட்டுண்ட பழுது ஒன்றுமின்றி எழுந்து, பல அமரர் குழாமாகச் சூழ்ந்திருக்கப் போனான் என்றும் கூறப்பட்டிருக்கிறது. தூல உடல் வெட்டுண்ட போதிலும் ஆவி உடல் வெட்டுப்பட முடியாதாகையால் "பழுது ஒழிந்து எழுந்திருந்தான்" என்று பாடலில் கூறப்பட்டிருக்கிறது இங்கு குறிப்பாக நோக்கத் தக்கது;—

"என்றிவை சொல்லி அழுவாள் கணவன் தன் (வரி 60)
பொன்றுஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக்கொள்ள
நின்றான் எழுந்து நிறைமதி வாண்முகம்
கன்றியதென்று அவன்கண்ணீர் கையால்மாற்ற
அழுதேங்கி நிலத்தின் வீழ்ந்து ஆயிழையாள் தன் கணவன்
தொழுதகைய திருந்தடியைத் துணைவளைக் கையாற்பற்ற
பழுது ஒழிந்து எழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளான்
எழுதெழின் மலருண்கண் இருந்தைக்க வெனப் போனான்.
(வரி 67)

இருபத்து மூன்ருவது—கட்டுரைக்காதையின் இறுதியில் இவ்வுலகத்திலிருந்து கண்ணகியை, வானுலகம் சென்றிருந்த கோவலன், பதினன்காவது நாள் அழைத்துச் செல்லுவதற்கு இங்குவந்து, இருவரும் வானுலகம் சென்றதாகக் குறிப்பிட்டிருக்கிறது. இறக்கும் தறுவாயிலுள்ளவர்களை, அன்புடைய உற்ருர் உறவினர், ஆவி உலகத்திலிருந்து அழைத்துச் செல்ல வருவார்கள் என்பதை இது உறுதிப் படுத்துகிறது. (வரி 164 முதல் 200 வரை) இருபத்தொன்பதாவது வாழ்த்துக்காதையில் செங்குட்டுவன் கூற்று என்பதில், கண்ணகி, ஆகாயத்தில் செங்குட்டுவனுக்குக் காட்சி கொடுத்ததாகக் கூறப்படுகிறது.

''என்னேயிஃதென்னேயிஃதென்னே யிஃதென்னேகொல்
பொன்னஞ்சிலப்பிற் புனைமேகலைவளைக்கை
நல்வயிரப் பொற்ருேட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடி யொன்று மீவிசும்பிற்ருேன்றுமால்''

மின்னுக்கொடி என்பது கண்ணகியைக் குறிப்பதாகும்.

## 79. திருவிளையாடற் புராணத்திலிருந்து மேற்கோள்.

திருவிளையாடற் புராணம் 10-வது படலத்தில் மேலுலகத்திலிருந்து மலையத்துவஜ பாண்டியரை அழைத்ததாகக் கூறுவதாவது:—

சுந்தரபாண்டியர், தடாதகைப்பிராட்டியோடும்வந்து, ஏழு கடலும் நிறைந்த வாவிக்கரையில் இருக்கும் நந்தன வனத்திலே, சிங்காசனத்தின் மேலே எழுந்தருளியிருந்தார். தம்முடைய மனைவியாரை நோக்கி, ''நாம் உன்பொருட்டு ஏழு கடல்களையும் இந்நகரத்திலே அழைத்தோம். நீ போய் உன் மாதாவை ஸ்நானம் பண்ணும்பொருட்டு அழைத்துக் கொண்டு வருவாயாக'' என்ருர். பிராட்டி தன்

மாதாவாகிய காஞ்சன மாலையை அழைத்துக் கொண்டு வாவிக்கரையை அடைந்தாள்.

காஞ்சனமாலை சிவபுராணங்களிலே சொல்லியிருக்கிற முறைப்படி சமுத்திர ஸ்நானம் செய்ய, கொடிய பாவியே னுக்குக் கணவனும் புத்திரனும் இல்லையே என்றாள். எம் பெருமாட்டி தன் பிராண நாயகர் திருமுன் சென்று, தன் மாதாவின் குறையை விண்ணப்பஞ் செய்ய, எம்பெரு மான் சுவர்க்கத்திலே ஓர் ஆசனத்தில் இந்திரனோடு இருந்த மலையத்துவஜ பாண்டியர்மேலே, தனது திருவுளஞ் செலுத்தினார். (மனதினாலே நினைத்தார்)

மலையத்துவஜ பாண்டியர் சிவபெருமானுடைய திரு வுளத்தை அறிந்து, இந்திரனுடைய ஆசனத்தை நீத்து, விமானத்தின்மேல் ஏறிவந்து ஏழ் கடலும் நிறைந்த வாவிக் கரையிலே வந்து இறங்கினார். காஞ்சனமாலை தன் கணவ னெதிரே நாணத்தோடு சென்று வணங்கினாள். பின்பு தன் கையிலே பவித்திரஞ் சேர்த்தி, பிராமணர் முன்னே சங்கற் பஞ் செய்து, பஞ்சாக்ஷரத்தை உச்சரித்து, தன் கணவனாகிய மலையத்துவஜ பாண்டியருடைய கையைப் பற்றிக் கொண்டு, பேருவகையோடு சமுத்திர ஸ்நானஞ் செய்தாள்.

மலையத்துவஜ பாண்டியரும் காஞ்சனமாலையும், ஸ்நானஞ்செய்து கரையேறினவுடனே, சிவலோகத்தினின் றும், ஒரு தேவ விமானம் இழிந்துவந்தது. இருவரும் சிவபிரானுடைய திருவருளினாலே அவ்விமானத்தின்மேல் ஏறி, தேவர்கள் கற்பகப் பூமாரி பொழிய, தேவ துந்துபி கள் ஒலிப்ப, அரகர ஒலி தழைப்ப, சிவபெருமானுடைய திருவடிகளிலே ஒன்றிய அன்பு ஈர்த்து எழ, இரு கண் களும் அடிக்கடி திரும்பி நோக்க, விமானத்தை அஞ்சலி செய்துகொண்டுபோய், புவர்லோகத்தையும், சுவர்லோகத் தையும், சன லோகத்தையும், தபோ லோகத்தையும்,

சத்திய லோகத்தையும், வைகுண்ட லோகத்தையும் கடந்து, சிவலோகத்தை அடைந்தார்கள்.

இதில் மலையத்துவஜ பாண்டியர், சுவர்க்கத்திலே இந்திரனோடு இருந்ததாகவும், தடாதகைப்பிராட்டியாருடைய பிராண நாயகரான சுந்தரபாண்டியர், அவரை வரவழைப்பதற்காக, தனது உளத்தைச் செலுத்தினர் என்றும், மலையத்துவஜ பாண்டியர் அதை அறிந்து, வாவிக்கரையில் வந்து இறங்கினர் என்றும் கூறப்பெற்றிருக்கிறது. இதிலிருந்து நாம் மனதை இறந்தவர்கள்பால் செலுத்தி நினைத்தால், விண்ணுலகத்திலுள்ளவர்கள் அதை அறிந்துகொள்ள முடிகிறதென்றும், நம்முடைய திருவுளத்தை அறிந்து, அவர்கள் இங்கே வரமுடிகிறதென்றும் தெரிகின்றது. மலையத்துவஜ பாண்டியர் ஆவி உடலில் வந்திருக்க, தூல உடலிலுள்ள காஞ்சனமாலையம்மையார், அவருடைய கையைப் பிடித்து சமுத்திர ஸ்நானம் செய்தது எப்படி நடந்திருக்கக்கூடும் என்ற சந்தேகம் தோன்றுவது இயல்பு.

மேல்நாட்டில் விஞ்ஞானிகள் ஆவிகளைப் பற்றி நடத்தியிருக்கிற சோதனைகளில், மீடியமாக இருக்கப்பட்டவர் சக்திவாய்ந்தவராயிருந்தால், ஆவிகளைப் பிறர் காணும்படியாகவும், பிறர் தொட்டுப் பார்த்து உணரக்கூடியதாகவும் செய்யமுடியுமென்று நிரூபித்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட தோற்றத்தை ஆங்கிலத்தில் ('Materialisation of spirits') 'ஆவிகளின் தூலத்தோற்றம்' என்று சொல்லுவர். இவ்விதத் தோற்றம் அந்தி, சந்திகளில் சூரிய உதயத்திற்கு முன்னும், சூரிய அத்தமனத்திற்குப் பின்னும் அல்லது அதுபோன்ற மங்கலான வெளிச்சம் உள்ள இடங்களிலும், பலரும் காணக்கூடியதாகச் செய்யலாம் என்று காட்டியிருக்கின்றனர். ஆனதால் மலையத்துவஜ பாண்டியரின் கையைப்பிடித்து சமுத்திர ஸ்நானம் செய்ததும், அப்படிப்பட்ட நிகழ்ச்சியேயாகும். நாம் கனவிலே ஒருவரை

ஒருவர் றுவது உண்மையாகத் தோன்றுவதுபோல, நனவிலே அப்படிப்பட்ட உணர்ச்சியை உண்டுபண்ணு வதைத்த "ஆவிகள் தூலமாகத் தோன்றல்" (Materi-alisati Spirits) என்கிறார்கள்.

மே சொன்ன சான்றுகளில், இராமாயணத்தில் தசரதச் ச ர்த்தி, இராமபிரானுக்கும் சீதாபிராட்டியா ருக்கும் னை தோன்றிப் பேசியதும், வரங்கொடுத்த தும், தி ம் விண்ணுலகம் சென்றதும், தூல உட லோடு ஆவி உடலோடு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் என்பன துகொள்ளல் வேண்டும்.

அ வே, சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ண கிக்கு மு ன்றி, அவளுடைய கண்ணீரைத் துடைத்த தும், ப ன்றுமில்லாத உடலோடு விண்ணுலகம் சென்றது ண்ணகி ஆகாயத்தில் செங்குட்டுவனுக்குக் காட்சி ந்ததும், தூல உடலில் அல்ல; ஆவி உடலி லேயே எ யும் அறிந்துகொள்ளல்வேண்டும்.

ஸ்ரீ ய ரதத்தில் மண்ணுலகத்திலிருந்த திருதராஷ் டிரன் இறந்துபோன தன்னுடைய மைந்தரைக் கண்டு ஆனந்தித் ம், பேசியதும், விண்ணுலகத்திலுள்ளவர்களை வியாசர் வ ழைத்துக் காட்டியதால், அது வியாசருடைய உதவியால் டைபெற்ற ஒரு நிகழ்ச்சியாகும். திருதராஷ் டிரன்தானே அவ்விதம் செய்துகொள்ள முடியவில்லை என்பது ஒரு முக்கிய குறிப்பை நமக்கு அறிவுறுத்துகின் றது. மண்ணுலகத்திலுள்ள எல்லோரும் இறந்தவர்களோடு, நேர் தொ ு வைத்துக்கொள்ள முடியாது என்பதும், அப்படிப்ப வர்கள், இறந்தவர்களோடு தொடர்பு கொண்டு வ வழைக்கவும், பிறருக்கு அவர்களைக் காணும் படி காட்டவும், செய்கின்ற தன்மை பெற்ற (Medium) மீடியம் மூலமாகத்தான் அவர்களோடு தொடர்புகொள்ள முடியுமென்பதும் தெளிவாகும்.

இனி தருமபுத்திரர், மண்ணுலகத்தைவிட்டு விண்ணுலகம் சேர்ந்து, அங்கு தன்னுடைய சுற்றத்தாரெல்லாம் வெவ்வேறு நிலைகளில் இருந்தவற்றைப் பார்த்துவிட்டு, பின்னர் அவர் வைகுண்டம் சேர்ந்து, அங்கு மகாவிஷ்ணுவின் அருகில் இருக்கும் பெருமையைப் பெற்றார் என்பது தூல உடலில் அல்ல; ஆவி உடல்கொண்டு நிகழ்த்தியதே என்று அறிந்திருத்தல் வேண்டும்.

## 80. பெரியபுராணத்திலிருந்து மேற்கோள்.

பெரிய புராணத்தில் சுந்தரமூர்த்திநாயனார், தேவலோகத்திலிருந்து வந்த வெள்ளை யானையின்மேல் ஏறிக்கொண்டு, திருக்கயிலாயம் சென்றதும், அவர் அங்கு போகும்பொழுது பாடிய திருப்பதிகம் பூலோகத்திற்கு வந்து பரவிய முறையும், சேரமான் பெருமாள்நாயனார் குதிரையின் மீதிலேறி திருக்கயிலாயம் சென்றதும், அங்கு அவர் பாடிய திருவுலா இப்பூவுலகத்திற்கு வந்த முறையும், சேரமான் பெருமாள்நாயனாருடன் அவருடைய படை வீரர்கள், தூல உடலைவிட்டு வீரசுவர்க்கம் எய்தியதும், கீழ்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஒருநாள், சேரமான் பெருமாள்நாயனார் ஸ்நானம் பண்ணும்பொழுது, சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவஞ்சைக் களத்துக்குப்போய், அங்கு இருக்கின்ற சிவாலயத்தை பிரதக்ஷணம்செய்து, உள்ளே புகுந்து, சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து எழுந்துநின்று, அக்கினியிற்பட்ட மெழுகுபோல் மனம் கசிந்துருக, இரண்டு கண்ணினின்றும் ஆனந்த அருவி சொரிய, சரீரத்திலே உரோமாஞ்சிதங் கொள்ள, இரண்டு கைகளும் சிரசின்மேல் ஏறிக்குவிய, அடியேனை இப்பிரபஞ்ச வாழ்க்கையினின்றும் நீக்கி, தேவரீருடைய திருவடியிலே சேர்த்தருளவேண்டுமென்று ''தலைக் குத்தலை மாலையணிந்ததென்னே'' என்னும் திருப்பதிகம் பாடியருளினார்.

அப்பொழுது கைலாசகிரியிலே சிவபெருமான் தேவர்களை நோக்கி, "நீங்கள் போய் நம்முடைய அடியானாகிய சுந்தரனை, வெள்ளையானையின் மேலேற்றிக் கொண்டுவாருங்கள்" என்று ஆக்ஞாபித்தார். அதைக்கேட்ட தேவர்கள், சுவாமியை நமஸ்கரித்து அனுமதிபெற்று, வெள்ளை யானையையுங் கொண்டு, திருவஞ்சைக்களத்தையடைந்து, கோயிலை வலஞ்செய்து, திருவாயிலிலே போய், உள்ளேயிருந்து வந்த சுந்தரமூர்த்தி சுவாமியை எதிர்கொண்டு, சுவாமியுடைய ஆக்ஞையைத் தெரிவித்தார்கள். அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனார், சுவாமியை நினைத்து நமஸ்கரித்து எழுந்து, தேவர்களுக்கு எதிரே போனார்.

தேவர்கள் அவரைப் பிரதட்சிணம்செய்து, வெள்ளை யானையின்மேலேற்ற, அவர் பஞ்சவாத்தியங்கள் ஆரவாரிக்கவும், தேவர்களெல்லோரும் ஸ்தோத்திரஞ் செய்து புஷ்ப மாரி பொழியவும், தம்முடைய தோழராகிய சேரமான் பெருமாள்நாயனாரைத் திருவுளத்திலே நினைத்துக்கொண்டு சென்றார். சேரமான்பெருமாள் நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய செயலை அறிந்து, அந்த க்ஷணமே அருகில் நின்ற ஓர் குதிரையின்மேலேறிக்கொண்டு, திருவஞ்சைக் களத்துக்குப்போய் வெள்ளை யானையின்மேலேறிக்கொண்டு, ஆகாயத்திற் செல்லும் சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கண்டு, தாம் ஏறிய குதிரையின் செவியிலே, ஸ்ரீபஞ்சாட்சரத்தை ஓதியருளினார். உடனே அந்தக் குதிரையானது ஆகாயத்திலே பாய்ந்து, சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய வெள்ளை யானையை அடைந்து, அதனை வலம் செய்து, அதற்கு முன்னாகச் சென்றது. சேரமான் பெருமாள் நாயனாருடைய படைவீரர்கள், குதிரையிற்செல்லும் அந்நாயனாரைத் தங்கள் கண்ணுக்குப் புலப்படும் எல்லைவரைக்கும் ஆகாயத்திலே கண்டு, பின் காணாமையால், மிகுந்த திடபக்தியினாலே, உருவிய உடை வாட்களினால், தங்கள் தங்கள் தேகத்தைச் சேதித்து, வீரயாக்கையைப் பெற்றுப்போய், சேரமான் பெருமாள் நாயனாருக்கு முற்பட்டு, அவரைச் சேவித்துக்

கொண்டு சென்றார்கள். சேரமான்பெருமாள் நாயனார் முன் செல்ல, பின்சென்ற சுந்தரமூர்த்தி சுவாமிகள், "தானெனை முன்படைத்தான்" என்னும் திருப்பதிகத்தைப் பாடிக் கொண்டு, கைலாசமலையின் தெற்கு வாயிலுக்கு முன் போனார்.

"போன உடனே, இருவரும் யானையினின்றும் குதிரையினின்றும் இறங்கி, பலபல வாயில்களையும் கடந்து, திருவணுக்கன் திருவாயிலை அடைந்தார்கள். அங்கே சேரமான் பெருமாள்நாயனார் தடைப்பட்டு நிற்க, சுந்தரமூர்த்தி சுவாமிகள் உள்ளேபோய் சுவாமி சந்நிதானத்திலே விழுந்து, நமஸ்கரித்து எழுந்து, ஸ்தோத்திரம் செய்துகொண்டு நின்றார். சுவாமி, அவரை நோக்கி "சுந்தர! வந்தனையோ" என்றார். அதைக்கேட்ட சுந்தரமூர்த்தி சுவாமிகள் "சுவாமி! அடியேன் செய்த பிழைபொறுத்து, என்னை அடிமையாகக் கொண்டு, பந்தத்தினின்று நீக்கி, அடியேனுக்குத் திருவடி தந்தருளிய பெருங் கருணையை என்னால் சொல்லும் தரத்ததோ" என்று சொல்லி, பலமுறை நமஸ்காரம் செய்து, சிவானந்த வெள்ளத்தில் அமிழ்ந்து நின்றார்.

பின்பு சுவாமி தேவரீருடைய திருவடிகளை அடையும் பொருட்டு, சேரமான்பெருமாள், திருவணுக்கன் திருவாயி லின்புறத்திலே வந்து நிற்கிறார் என்று சொல்ல, சுவாமி அவரை உள்ளே அழைப்பித்து, நீயும் ஆலால சுந்தரனும், நம்முடைய கணங்கள் எல்லாவற்றிற்கும் தலைவராயிருங்கள் என்று அருளிச் செய்தார். அதைக்கேட்டு சுவாமியை நமஸ் கரித்து எழுந்து, அவருடைய திருவருளைத் தலைமேற் கொண்டு, சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆலாலசுந்தரராகி, முன்னே தாம் செய்த திருத்தொண்டைச் செய்பவரும், சேரமான்பெருமாள் நாயனார், கணநாதராகி அவர் செய்யும் தொழிலைச் செய்பவரும் ஆனார்கள்.

முன்னே பூமியில் அவதரித்த பரவையாரும் சங்கிலியாரும், முறையே கமலினியாரும் அநிந்திதையாரும் ஆகி, பார்வதிதேவிக்குத் தாங்கள் முன் செய்த திருத்தொண்டைச் செய்துவந்தார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் வழியிலே அருளிச்செய்த திருப்பதிகத்தை, இந்தத் தக்ஷிண பூமியிலே ஏற்றார்பொருட்டு, சமுத்திரராஜனுகிய வருணனிடத்திலே கொடுக்க, அவன் அதைத் திருவஞ்சைக்களத்திலே உய்த்துத் தெரிவித்தான். சேரமான்பெருமாள் நாயனார் அருளிச்செய்த திருவுலா, திருக்கயிலையிலிருந்த மாசாத்தனாரால் கேட்கப்பட்டு, அவரால் இப்பூலோகத்தில் திருப்பிடவூர்தனில் உள்ள வேதியர்மூலம், வெளிப்படச் சொல்லலாயிற்று.

குறிப்பு:— சுந்தரமூர்த்தி நாயனாரை, மண்ணுலகத்திலிருந்து விண்ணுலகத்திற்கு, வெள்ளையானையின்மீது ஏற்றி அழைத்துவரும்படி, சிவபெருமான் தேவர்களுக்கு உத்தரவிடவே, அவர்கள் திருவஞ்சைக்களத்திற்கு வந்து, கோயிலை வலம் வந்து, சுந்தரமூர்த்திநாயனாரிடம் சுவாமியுடைய உத்தரவைத் தெரிவித்ததும், அவர் சுவாமியை நினைத்து நமஸ்கரித்து, எழுந்து தேவர்களுக்கு எதிரே போனார் என்பது, இறக்கும் தருவாயில், அவரவர்களுக்கு ஆப்தமான மேலுலகவாசிகள், எதிர்கொண்டழைக்கவருகிறார்கள் என்பதை வலியுறுத்துவதாகும்.

அவ்விதமாக சுந்தரமூர்த்திநாயனார் மண்ணுலகைவிட்டுச் செல்லும் பொழுது, தனது தோழராகிய சேரமான் பெருமாள் நாயனாரை நினைக்கவே, சேரமான் பெருமாள் நாயனாரும், வெள்ளையானையில் ஆகாயத்தில் செல்லுகின்ற ஆரூரரைக்கண்டு, தானும் விண்ணுலகம் செல்வதற்காக, தான் ஏறியிருந்த குதிரையின் செவியிலே, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதியருள. அந்தக் குதிரை சேரமான்பெருமானுடன் ஆகாயத்திலே பாய்ந்து, ஆரூரரையும் வெள்ளையானையையும் வலம்வந்து, அதற்கு முன்னாகச் சென்றது

தூல உடலில் அல்ல; ஆவிவுடலோடு என்பதை அறிதல் வேண்டும்.

கற்புடைய பெண்கள், கணவன்மார் பிரிவாற்றுமையினுல், உடனடியாக ஆக்கையை விட்டு கணவன்மாரோடு மேலுலகம் செல்லும் தன்மைபோல, சேரமான்பெருமாளும், தன்னுடைய தோழர் விண்ணுலகம் செல்லுவதைக் கண்டதும், தனது குதிரையினது ஆக்கையை (ஸ்தூல உடம்பை) ஸ்ரீ பஞ்சாக்ஷரம் ஓதிப்பிரித்து, அதனுடைய ஆவி உடலின்மேல், தானும் தன் ஆக்கையை விட்டுப் பிரிந்து, ஆவி உடலோடு ஆரோகணித்து, ஆகாயத்தில் சென்று, ஆரூரரையும் வெள்ளை யானையையும் வலம் செய்து, முன்னுகச் சென்றுர் என்பதை உய்த்துணர்தல் வேண்டும்.

இவர்களெல்லாம் தூல உடலை விட்டுப் பிரிந்து ஆவி உடலோடுதான் சென்றுர்கள் என்பதை சேரமான்பெருமாள் நாயனுருடைய படைவீரர்கள் தங்கள் தங்கள் தேகத்தைச் சேதித்து, வீரயாக்கையைப்பெற்று சேரமான்பெருமாளை சேவித்துக்கொண்டு, அவருக்கு முன்னே சென்று சேர்ந்த நிகழ்ச்சி வலியுறுத்துவதாகும். ஆவி உடலையே வீரயாக்கை என்று சொல்லப்பெற்றிருக்கின்றது.

மிருகங்களுக்கும் மரணத்தின்பின் ஆவி உடல் உண்டு என்பதற்கு, மேல்நாட்டார் பலர், தங்களுடைய நன்றியறிதலுள்ள நாய்கள் இறந்தபின், தங்களோடு வந்துசேர்ந்துவிட்டதாக அறிவித்திருக்கும் பற்பல குறிப்புகள் சான்றுகள் தருகின்றன.

அன்றியும் சுந்தரமூர்த்தி சுவாமிகள், விண்ணுலகத்திற்குப் போகும் வழியில் பாடிய, “தானெனை முன் படைத்தான்” என்னும் “திருநொடித்தான் மலைத் திருப்பதிகம்”, மண்ணுலகத்திலுள்ள திருவஞ்சைக் களத்தில் வருணனுல்

தெரிவிக்கப்பெற்றது; மேலுலக நிகழ்ச்சிகளை, மேலுலகத்தி லுள்ளவர்கள் பூலோகத்தில் அறிவிக்க முடியும் என்பதை வலியுறுத்துவதாகும்.

அதுபோலவே, சேரமான்பெருமாள் நாயனார் சிவலோகத்தில் அருளிச்செய்த, "திருஉலா" அங்கிருந்து மாசாத்தனாரால், பூலோகத்திலுள்ள திருப்பிடவூர்தனில் உள்ள வேதியர்மூலம், இங்கு வெளிப்படலாயிற்று என்ற வரலாறும், மேலுலகத்தவர் அங்குள்ள நிகழ்ச்சிகளை பூலோகத்தாரில் தகுதியுள்ளவர்கள்மூலம், இங்கு அறிவித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு, போதிய சான்றாக அமைந்திருப்பது சிந்திக்கத் தக்கதாகும்.

**81. கிறிஸ்துவ வேதப் புத்தகத்திலிருந்து இயேசுநாதர் இறந்தபின் தூல உடலில் காட்சியளிக்கவில்லை; ஆவிஉடலினாலேயே காட்சியளித்து உபதேசித்தார் என்பதற்குள்ள சீரிய மேற்கோள்கள்.**

இனி கிறிஸ்தவ வேதப்புத்தகம் (Bible) தருகின்ற சான்றுகளைக் கவனிப்போமாக;—

இயேசுநாதர் சிலுவையில் மரித்தபின், பலரைச் சந்தித்ததாகவும், அவர் பலருடன் பேசியதாகவும், கிறிஸ்தவ வேதப்புத்தகமாகிய "பைபிள்" சொல்லுகின்றது. அதில் யோவான் (St. John 1018/19 Chapts. 20/21) எழுதின சுவிசேஷத்தின், இருபது இருபத்தொன்றாவது அத்தியாயத்தில் கூறியிருப்பவை, ஆங்கிலத்தில் ஊன்றிப் படித்து ஆராயத்தக்கன. அவற்றில் முக்கியமான சில வாக்கியங்களும் மொழிபெயர்ப்பும் கீழ்வருமாறு கூறுகின்றன:—

யோவான் அதிகாரம் 20–1, வாரத்தின் முதல் நாள் காலையில், இருட்டோடே மகதலேனா மரியாள் கல்லறையி

னிடத்திற்கு வந்து, கல்லறையை அடைத்திருந்த கல் எடுத்துப் போட்டிருக்கக் கண்டாள்.

20-2 உடனே அவள் ஓடி, சீமோன் பேதுருவினிடத்திலும், இயேசுவுக்கு அன்பனாயிருந்த மற்றச் சீஷனிடத்திலும் போய், கர்த்தரைக் கல்லறையிலிருந்து எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அவரை வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லை என்றாள்.

20-12 இயேசுவின் சரீரம் வைக்கப்பட்டிருந்த இடத்திலே' வெள்ளுடை தரித்தவர்களாய், இரண்டு தேவ தூதர்கள், (Angels) தலைமாட்டில் ஒருவனும் கால்மாட்டில் ஒருவனுமாக, உட்கார்ந்திருக்கிறதைக் கண்டாள்.

20-13 அவர்கள் அவளைநோக்கி, ஸ்திரியே ஏன் அழுகிறாய் என்றார்கள். அதற்கு அவள் என் ஆண்டவரை எடுத்துக்கொண்டுபோய்விட்டார்கள். அவரை வைத்த இடம் எனக்குத் தெரியவில்லை என்றாள்.

20-14 இவைகளைச் சொல்லிப் பின்னாகத் திரும்பி, இயேசு நிற்கிறதைக் கண்டாள்: ஆனாலும் அவரை இயேசு என்று அறியாதிருந்தாள்.

20-15 இயேசு அவளைப்பார்த்து, ஸ்திரியே! ஏன் அழுகிறாய், யாரைத் தேடுகிறாய் என்றார். அவள் அவரைத் தோட்டக்காரனென்று எண்ணி, ஐயா! நீர் அவரை எடுத்துக்கொண்டு போனதுண்டானால், அவரை வைத்த இடத்தை எனக்குச் சொல்லும்; நான் போய் அவரை எடுத்துக் கொள்ளுவேன் என்றாள்.

20-16 இயேசு அவளை நோக்கி, மரியாளே என்றார். அவள் திரும்பிப்பார்த்து, ரபூனி என்றாள்; அதற்குப் போதகரே என்று அர்த்தமாம்.

20-17 இயேசு அவளை நோக்கி, என்னைத் தொடாதே, நான் இன்னும் என் பிதாவினிடத்திற்கு ஏறிப் போகவில்லை; நீ என் சகோதரரிடத்திற்குப் போய், நான் என் பிதாவினிடத்திற்கும், உங்கள் பிதாவினிடத்திற்கும், என் தேவனிடத்திற்கும், உங்கள் தேவனிடத்திற்கும், ஏறிப்போகிறேன் என்று அவர்களுக்குச் சொல்லு என்றார்.

20-18 மகதலேனா மரியாள்போய், தான் கர்த்தரைக் கண்டதையும், அவர் தன்னுடனே சொன்னவைகளையும் சீஷருக்கு அறிவித்தாள்.

20-19 வாரத்தின் முதல் நாளாகிய அன்றைய தினம் சாயங்கால வேளையிலே, சீஷர்கள் கூடியிருந்த இடத்தில், யூதர்களுக்குப் பயந்ததினால் கதவுகள் பூட்டியிருக்கையில், இயேசு வந்து நடுவே நின்று, உங்களுக்குச் சமாதானம் என்றார்.

20-20 அவர் இப்படிச் சொல்லி, தம்முடைய கைகளையும் விலாவையும் அவர்களுக்குக் காண்பித்தார்; சீஷர்கள் கர்த்தரைக்கண்டு சந்தோஷப்பட்டார்கள்.

20-21 இயேசு மறுபடியும் அவர்களை நோக்கி, உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக; பிதா என்னை அனுப்பினதுபோல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி,

20-22 பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளுங்கள் என்று அவர்கள்மேல் ஊதினார்.

20-26 மறுபடியும் எட்டு நாளைக்குப் பின்பு, அவருடைய சீஷர்கள் வீட்டுக்குள்ளே இருந்தார்கள்; தோமாவும் அவர்களுடனே கூட இருந்தான்; கதவுகள் பூட்டப்பட்டிருந்தது; அப்பொழுது இயேசு வந்து நடுவே நின்று உங்களுக்குச் சமாதானம் என்றார்.

யோவான் அதிகாரம், 21—14.

1. இவைகளுக்குப் பின்பு இயேசு, திபேரியா கடற் கரையிலே, மறுபடியும் சீஷருக்குத் தம்மை வெளிப்படுத் தினார். வெளிப்படுத்தின விவரமாவது:—

21–4. விடியற்காலமானபோது, இயேசு கரையிலே நின்றார்; அவரை இயேசு என்று சீஷர்கள் அறியாதிருந்தார் கள்.

21–14. இயேசு மரித்தோரிலிருந்தெழுந்த பின்பு தம் முடையசீஷருக்கு அருளின தரிசனங்களில், இது மூன்றா வது தரிசனம்.

குறிப்பு:— யோவான் அதிகாரம் 20—14/15.

இவற்றில் மகதலேனா மரியாள், இயேசு நிற்கிறதைக் கண்டும், அவரை இயேசு என்று அறியாதிருந்ததுமன்றி, அவரைத் தோட்டக்காரனென்று எண்ணி, பேசியிருக்கிற தாகக் கூறியிருப்பதிலிருந்தும், 21–4-ல், விடியற்காலமான போது, இயேசு கரையிலே நின்றபொழுது, அவரை இயேசு என்று அவருடைய சீஷர்கள் அறியாதிருந்தார்கள் என்று கூறியிருப்பதிலிருந்தும், இரண்டு இடங்களிலும் இயேசு (மரித்தபின்) அவருடைய தூல உடலோடு நிற்க வில்லையென்பதும், ஆவி உடலோடு தரிசனம் கொடுத்த காரணத்தினாலேயே, அவருடைய பந்துவான மரியாளும், ஆப்தமான சீஷர்களும், அவரை இயேசு என்று அறிந்து கொள்ள முடியவில்லை என்பதும் தெளிவாகும்.

அதிகாரம் 20–12-ல், மரியாள், இயேசுவின் சரீரம் வைக்கப்பட்டிருந்த இடத்திலே, வெள்ளுடை தரித்தவர் களாய், இரண்டு (Angels) தேவதூதர்கள் உட்கார்ந்திருக் கிறதைக்கண்டதாகவும், அவர்களுடன் மரியாள் பேசின தாகவும் கூறப்பெற்றிருக்கிற வரலாறு, அவள், தேவ

தூதர்கள் ஆவி உடலோடு தரிசனம் கொடுப்பதைப் பார்க்கக்கூடியவளாகவும்,, (clair voyant) ஆவிகள் பேசுவதைக் கேட்கக்கூடியவளாகவும், (clair audient) இருந்தாள் என்பதையும் உறுதிப்படுத்துகின்றன.

மேலும் யோவான் அதிகாரம் 20–19-ல், சீஷர்கள் கூடியிருந்த இடத்திலே. யூதர்களுக்குப் பயந்து கதவுகள் எல்லாம் பூட்டப்பெற்றிருக்கவும், இயேசு வந்து நடுவே நின்று பேசியதும், 20–26-ல், மறுபடியும் எட்டு நாட்களுக்குப்பின். சீஷர்கள் வீட்டிற்குள்ளேயே, கதவுகளையெல்லாம் பூட்டிக்கொண்டு இருந்தபொழுது, திரும்பவும் இயேசு வந்து நடுவே நின்று பேசியதும், தூல உடலோடு அல்ல, ஆவி உடலோடுதான் என்ற உண்மையை, ஆவி உலகத் தொடர்புடையவர்களும், ஆராய்ச்சியாளரும் நன்கு உணர்வார்கள்.

யோவான் அதிகாரம் 20–29-ல், இயேசு தோமாவிடம், நீ என்னை (20–25 முதல் 28 வரை கூறியிருக்கிறபடி சோதனை செய்து) கண்டதினாலேயே விசுவாசித்தாய், காணாதிருந்தும் விசுவாசிக்கின்றவர்கள் பாக்கியவான்கள்; என்று கூறியிருப்பதிலிருந்து, இறந்தபின் ஆவி உடல் உண்டு என்பதை சோதனை செய்யாமலே விசுவாசிக்கின்றவர்களும், ஒத்துக்கொள்கின்றவர்களும், பாக்கியவான்கள் என்பது தெளிவாகும்.

இவ்விதமாக, இயேசு மரித்தபின், அருளிய தரிசனங்கள் மூன்றுமுறை என்பதை, வாக்கியம் 21–14 வலியுறுத்துகின்றது. இயேசுவானவர், தன்னுடைய பரிசுத்த ஆவியை சீஷர்கள்மேல் ஊதி, அவர்களைப் பெற்றுக்கொள்ளும்படியாகச் செய்தார் என்பதை வாக்கியம் 20–22 வலியுறுத்துகின்றது

யோவான் எழுதின சுவிசேஷம் இவ்வாறு கூறியிருப்பதுமன்றி, அதன் பின்னுள்ள (Acts of the Apostles-

**chapt. 1019 to 1116)** அப்போஸ்தலருடைய நடபடிகள் என்ற தலைப்பிலிருந்து, பின்வரும் 170 அத்தியாயங்களும், இயேசுவானவர் மரித்தபின், தன்னுடைய பரிசுத்த ஆவியை, தன்னால் தெரிந்தெடுத்துக் கொண்டவர்கள் மேல் பிரயோகித்து, கட்டளையிட்டவைகள் என்பதை கீழ்வரும் வசனங்களும், நிகழ்ச்சிகளும், சந்தேகத்திற்கிடமின்றி வலியுறுத்துகின்றன. ஆவி உலக ஆராய்ச்சியில்லாதவர்களுக்கு, அவ்வித நிகழ்ச்சிகள் விந்தையாகவும், வியப்பை உண்டு பண்ணுவதாகவும் இருக்கலாம். ஆனால் ஆவி உலக ஆராய்ச்சியுள்ளவர்களுக்கு, அவை இயற்கையானவையாகவும், ஆவி உலகத் தொடர்பின் அருமைபெருமைகளை வலியுறுத்துவனவாகவும், வெளிப்படுத்துவனவாகவுமே இருக்கும்.

Acts of the Apostles: 1019 Chapter 1 & 2.

1. The former treatise have I made, O Theophilus, of all that Jesus began both to do and teach.

2. Until the day in which he was taken up; after that he through the Holy Ghost, had given commandments unto the apostles whom he had chosen.

இதன் பொருள்.- அப்போஸ்தலருடைய நடபடிகள் அதிகாரம் 1—1/2. "ஓ 'தியோப்பிலுவே' இயேசுவானவர் செய்யவும் உபதேசிக்கவும் தொடங்கின எல்லாவற்றையும் குறித்து, முந்திய பிரபந்தத்தை உண்டுபண்ணினேன்-அவர் மேலே எடுத்துக்கொள்ளப்பட்ட நாள்வரைக்கும்; அதன் பிறகு அவர் பரிசுத்த ஆவியின்மூலம், தாம் தேர்ந்து எடுத்துக்கொண்ட அப்போஸ்தலருக்குக் கட்டளைகள் விடுத்தார்.

3. அவர் சிலுவையில் மரித்த பின்பு, நாற்பது நாளளவும் அப்போஸ்தலருக்குத் தரிசனமாகி, தேவனுடைய ராஜ்யத்துக்குரியவைகளை, அவர்களுடனே பேசி, அநேகம் தெளிவான திருஷ்டாந்தங்களினாலே, அவர்களுக்குத் தம்மை உயிரோடிருக்கிறவராகக் காண்பித்தார்.

அன்றியும், அவர் அவர்களுடனே கூடிவந்திருக்கும்பொழுது, அவர்களை நோக்கி, யோவான் ஜலத்தினாலே ஞானஸ்நானங் கொடுத்தான்; நீங்கள் சில நாளுக்குள்ளே, பரிசுத்த ஆவியினாலே, ஞானஸ்நானம் பெறுவீர்கள்.

8. பரிசுத்த ஆவி உங்களிடத்தில் வரும்போது, நீங்கள் பெலனடைந்து, எருசலேமிலும், யூதேயா முழுவதிலும், சாமாரியாவிலும், பூமியின் கடைசி பரியந்தமும், எனக்குச் சாட்சிகளாயிருப்பீர்கள் என்றார்.

9. இவைகளை அவர் சொன்னபின்பு, அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில், அவர் உயர எடுத்துக்கொள்ளப்பட்டார்; அவர்கள் கண்களுக்கு மறைவாக ஒரு மேகம் அவரை எடுத்துக்கொண்டது.

10. அவர் போகிறபோது, அவர்கள் வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டிருக்கையில், இதோ! வெண்மையான வஸ்திரந்தரித்தவர்கள் இரண்டுபேர், அவர்களருகே நின்று 11 கலிலேயராகிய மனுஷரே! நீங்கள் ஏன் வானத்தை அண்ணாந்து பார்த்து நிற்கிறீர்கள்? உங்களிடத்தினின்று வானத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட இந்த இயேசுவானவர், எப்படி உங்கள் கண்களுக்கு முன்பாக, வானத்துக்கு எழுந்தருளிப்போனாரோ, அப்படியே மறுபடியும் வருவார் என்றார்கள்.

14. அங்கே இவர்கள் எல்லாரும், ஸ்திரீகளோடும் இயேசுவின் தாயாகிய மரியாளோடும், அவருடைய சகோதரரோடுங்கூட, ஒருமனப்பட்டு, ஜெபத்திலும் வேண்டுதலிலும் தரித்திருந்தார்கள்.

2/1 பெந்தகொஸ்தே என்னும் நாள் வந்தபோது, அவர்களெல்லாரும் ஒருமனப்பட்டு, ஓரிடத்திலே வந்திருந்தார்கள்.

2/4 அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு, ஆவியானவர் தங்களுக்குத் தந்தருளின வரத்தின்படியே, வெவ்வேறு பாஷைகளிலே பேசத் தொடங்கினார்கள்.

2/11 கிரேத்தரும் அரபியருமாகிய நாம், நம்முடைய பாஷைகளிலே, இவர்கள், தேவனுடைய மகத்துவங்களைப் பேசக் கேட்கிறோமே! என்றார்கள்.

2/16 தீர்க்கதரிசியாகிய யோவேலினால் உரைக்கப்பட்டபடியே, இது நடந்தேறுகிறது.

2/17 கடைசி நாட்களில், நான் மாம்சமான யாவர்மேலும், என் ஆவியைச் செலுத்துவேன். அப்பொழுது உங்கள் குமாரரும், உங்கள் குமாரத்திகளும், தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்; உங்கள் வாலிபர் தரிசனங்களை அடைவார்கள்; உங்களில் மூப்பரானவர்கள் சொப்பனங்களைக் காண்பார்கள்.

(இதன் ஆங்கில வாக்கியத்தைக் கவனிக்கவும்.)

2/17 And it shall come to pass in the last days, saith God, I will pour out of my spirit upon all flesh: and your sons and daughters

shall prophesy, and your young men shall see visions, and your old men shall dream dreams.

2/18 என்னுடைய ஊழியக்காரர் மேலும், என்னுடைய ஊழியக்காரிகள் மேலும், அந்நாட்களில் என் ஆவியைச் செலுத்துவேன். அப்பொழுது அவர்கள் தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்.

2/33 அவர் தேவனுடைய வலது கரத்தினாலே உயர்த்தப்பட்டு, பிதா அருளிய வாக்குத்தத்தத்தின்படி பரிசுத்த ஆவியைப்பெற்று, நீங்கள் இப்பொழுது காண்கிறதும் கேட்கிறதுமாகிய இதைப் பொழிந்தருளினார்.

மேலும், அப்போஸ்தலனாகிய யோவான் எழுதின முதலாவது நிருபம், அதிகாரம் 1163/4 வசனம் 1-ம், 6-ம் கீழ்வருமாறு கூறுகின்றன.

4/1 பிரியமானவர்களே, உலகத்தில் அநேகம் கள்ளத்தனமுள்ள தீர்க்கதரிசிகள் தோன்றியிருப்பதினால், நீங்கள் எல்லா ஆவிகளையும் நம்பாமல், அந்த ஆவிகள், தேவனால் உண்டானவைகளோ என்று சோதித்தறியுங்கள்.

4/6 நாங்கள் தேவனால் உண்டானவர்கள்; தேவனை அறிந்தவன், எங்களுக்குச் செவி கொடுக்கிறான்; தேவனால் ஏற்படாதவன், எங்களுக்குச் செவி கொடுக்கிறதில்லை;, இதினாலே சத்திய ஆவி இன்னதென்றும், வஞ்சக ஆவி இன்னதென்றும் அறிந்திருக்கிறோம்.

இவற்றை ஊன்றிக் கவனித்தால், இயேசுவானவர், தாம் மேலுலகத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நாள் வரைக்கும், செய்யவும் உபதேசிக்கவும் தொடங்கின எல்லாவற்றையும், புதிய ஏற்பாட்டின் முந்திய பிரபந்தமாகவும், அதன் பிறகு அவர் தனது பரிசுத்த ஆவியின்

மூலம், தாம் தேர்ந்தெடுத்துக்கொண்ட அப்போஸ்தலருக்குக் கட்டளையிட்ட எல்லாவற்றையும், பிந்திய பிரபந்தமாகவும், (அப்போஸ்தலருடைய நடபடிகள் என்ற தலைப்பில்) தொகுத்திருப்பது நன்கு விளங்கும்.

ஆவியின்மூலம் இயேசுவானவர், தாம் தேர்ந்தெடுத்துக்கொள்ளப்பட்டவர்களுக்கு மட்டும் கட்டளையிட்டதிலிருந்து, ஆவிகள் சிற்சில குறிப்பிட்ட ஒருவகை உடல் நிலையுள்ளவர்கள் மூலமாக மட்டுமே, தங்களுடைய கருத்துக்களை வெளியிட முடியுமென்பதும், அப்படிப்பட்ட உடல் நிலையுள்ளவர்களே 'மீடியம்' என்று அழைக்கப்படுகிறார்கள் என்பதும் தெளிவாகும்.

இயேசுவானவர் மரித்தபின்பு, நாற்பது நாளளவும், அப்போஸ்தலருக்குத் தரிசனமாகி, ஆண்டவனுடைய ராஜ்யத்திற்குரியவைகளை அவர்களுடனே பேசி, அநேக திருஷ்டாந்தங்களினாலே, அவர்களுக்குத் தாம், உயிரோடிருக்கிறவராகக் காண்பித்தார் என்று சொல்லியிருப்பதிலிருந்து, அவர் தரிசனம் கொடுத்ததும், பேசியதும், தூல உடல்கொண்டு செய்யவில்லை என்பது தெளிவாகும்.

தூல உடல்கொண்டு செய்திருந்தால், அநேக திருஷ்டாந்தங்களினாலே, தாம் உயிரோடிருக்கிறவராகக் காண்பிக்கவேண்டியதில்லை என்பதை அறிந்துகொள்ளலாம். இறந்துபோன நண்பர்களும், சுற்றத்தார்களும், இறந்த பின்னர் தாங்கள் ஒரு ஆவி உடம்பில், உயிரோடு இருந்து. வாழ்க்கை நடத்தி வருகிறதை நிரூபிப்பதற்காகவே, 'மீடியம்' வாய்த்த போதெல்லாம் இறந்த அவர்கள், நமக்கு அநேக திருஷ்டாந்தங்களினாலே அறிவிக்கிறார்கள்.

தூல உடலோடு வாழ்கிறவர்கள், தாங்கள் உயிரோடிருக்கிறதாக, யாதொரு திருஷ்டாந்தமும், யாருக்கும் கொடுக்கவேண்டியதில்லையல்லவா? அல்லாமலும் தரிசனம்

என்பது, காணமுடியாத ஒரு தோற்றம், காட்சிக்கு வருவதேயாகும். தூல உடம்பு எல்லோராலும் காணக்கூடியது. ஆவி உடல் எல்லோராலும் காணமுடியாதது. 'மீடியம்' சக்தியுடையவர்கள் மட்டும் காணக்கூடியது, பேசக்கூடியது. ஆவி உடலிலுள்ளவர்கள், 'மீடியம்' சக்தியுடையவர்கள் மூலமே, மற்றவர்களிடம் பேச முடியும். ஆகவே, இயேசுவானவர் மரித்தபின்பு கட்டளையிட்டதும், தரிசனம் கொடுத்ததும், ஆவி உடலிலேயே என்பது தெளிவாகும்.

## 82. இயேசுவானவர் ஆவி உலகத்தவர் பூலோகத்தாருடன் அவரவர் பாஷைகளில் பேச முடியுமென்று சொன்னதற்குரிய மேற்கோள்.

இயேசுவானவர், அவர்களைப் பார்த்து "நீங்கள் சில நாளுக்குள்ளே பரிசுத்த ஆவியினாலே ஞானஸ்நானம் பெறுவீர்கள்" (1–4) "பரிசுத்த ஆவி உங்களிடத்தில் வரும்பொழுது, பூமியின் கடைசி பரியந்தமும் எனக்குச் சாட்சிகளாயிருப்பீர்கள்" (1–8).

"அவர்களெல்லோரும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு, வெவ்வேறு பாஷைகளிலே பேசத் தொடங்கினார்கள்" (2–4). "கடைசி நாட்களில், நான் தூல உடலிலிருக்கிற யாவர்மேலும் என் ஆவியைச் செலுத்துவேன்; அப்பொழுது குமாரர்களும் குமாரத்திகளும் தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்; வாலிபர் தரிசனங்களை அடைவார்கள்; மூப்படைந்தோர் சொப்பனங்களைக் காண்பார்கள்" என்னுடைய ஊழியக்காரர் மேலும், ஊழியக்காரிகள் மேலும் என் ஆவியைச் செலுத்துவேன்; அப்பொழுது அவர்கள் தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள் (2–17); என்று கூறியிருக்கிற வசனங்களில், அவர், தனது பரிசுத்த ஆவியைச் செலுத்தி, வெவ்வேறு பாஷைகளில் பேசும்படி செய்தார் என்ற நிகழ்ச்சி, இன்று ஆவி உலகத்திலுள்ளவர்கள், யார்

எந்த பாஷையில் பேசினாலும், அது மீடியமாக இருக்கப்பட்டவர்களுக்குத் தெரிந்த பாஷையாக இருந்தாலும், அவர்களுக்கு அறவே தெரியாத பாஷையாக இருந்தாலும், அந்த அந்த பாஷையில் பேசுவது போன்ற நிகழ்ச்சியே தவிர, ஆச்சரியப்படுவதற்குரிய காரியம் ஒன்றும் இல்லை.

மேலான நிலையிலுள்ள ஆவிகள் மூலம் பின்னால் நடக்கக்கூடியதை அறியமுடியும் என்பதையே தீர்க்கதரிசனஞ் சொல்லுதல் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆங்கிலத்தில் 'பிராபசி' (Prophecy) என்றால் பின்னால் நடக்கப்போவதையும், கடவுளைப் பற்றியும் முன்னால் தீர்க்கதரிசனத்தால் சொல்லுதல் என்பதாகும். Prophet என்றால் தீர்க்கதரிசனத்தினால் பின்னால் நடக்கக்கூடியவற்றையும், கடவுளைப் பற்றியும் ஆவிகளின் பிரவேசத்தால் (ஆவேசத்தால்) வெளிப்படுத்துகிறவர் என்பதாகும்.

குமாரர் என்ற பருவமும், குமாரத்தி என்ற பருவமும் கடந்தபின், வாலிபமான நிலையில் உள்ள ஆண்களிடமும், பெண்களிடமும், ஆவிகள் ஆவேசிக்கின்ற தன்மை குறைந்துவிடுவதால், வாலிபப் பருவத்தைவிட குமாரப் பருவத்திலுள்ளவர்கள், நல்ல திறமையான 'மீடியம்' சக்தி வாய்ந்தவர்களாகக் காணப்படுகிறார்கள். வாலிபர்களில் 'மீடியம்' சக்தி வாய்ந்தவர்கள், ஆவிகளின் தோற்றங்களைக் காணமுடியும். ஆவிகளின் தோற்றங்களையும், தேவதூதர்களின் தோற்றங்களையும் காணுதல் ஆங்கிலத்தில் 'விஷன்' (Vision) என்று கூறப்பெறும்.

ஆனால் 'மீடியம்' சக்தி நிரம்பப் பெற்றவர்கள், குமாரப் பருவம் கடந்த வாலிபப்பருவத்திலும், ஆவேசத்தினால் தீர்க்க தரிசனஞ் சொல்லுகின்றவர்களாகவும், தோற்றங்களைக் காணக்கூடியவர்களாகவும், அவர்களுடன் பேசும் ஆற்றலுடையவர்களாகவும் இருக்கிறார்கள். இங்கிலாந்தில் (F.W. H. Myers) 'மயர்ஸ்', (D. D. Home) 'டி. டி.

ஹோம்' (Rev. Stainton Moses) 'பாதிரி ஸ்டெயின் டன் மோசஸ்' போன்றவர்களும், அமெரிக்காவில் (Margery the medium-Mrs. Crandon) Dr. கிரேன் டனுடைய மனைவியான 'மார்கரி' போன்றவளும், குமாரப் பருவத்திலும், வாலிபப்பருவத்திலும், நல்ல 'மீடியம்' சக்தி வாய்ந்தவர்களாக இருந்திருக்கிறார்கள். மூப்படைந்தபொழு தும் இருந்து வந்திருக்கிறார்கள்.

அதனாலேயே இயேசுநாதர், "உங்கள் வாலிபர்கள் பரி சுத்த ஆவியினால் தரிசனங்களை அடைவார்கள்" என்று கூறியிருக்கிறார். மூப்படைந்தவர்களுக்கு அந்த சக்தி மேலும் குறைந்துவிடுவதால், அவர்களிடம் ஆவிகளும் தேவதூதர்களும் அதிகமாக சொப்பனத்தில் வந்து அறி விக்க முடிகின்றதே தவிர, தரிசனங்கள் காட்டவோ, ஆவேசித்துப் பேசவோ சாதாரணமாக முடியாமலிருக்கி றது. அதனாலேயே இயேசுநாதர் "உங்களில் மூப்படைந் தோர் பரிசுத்த ஆவிகளைப்பற்றி, சொப்பனங்கள் காணு வார்கள்" என்று கூறியிருக்கிறார்.

அல்லாமலும், அப்போஸ்தலனாகிய யோவான் எழு தின முதலாவது நிருபம், அதிகாரம் 4-வசனம் 1ம் 6ம் உலகத்திலே அநேகம் ஆவிகள், கள்ளத்தீர்க்கதரிசிகளாகத் தோன்றியிருப்பதினால், எல்லா ஆவிகளையும் நம்பாமல், நீங்கள் அந்த ஆவிகள் தேவனால் உண்டானவைகளோ என்று சோதித்தறியுங்கள். சத்திய (உண்மை பேசுகிற) ஆவி இன்னதென்றும், வஞ்சக (பொய் பேசுகிற) ஆவி இன்னதென்றும் அறிந்திருக்கவேண்டும் என்றும் சொல்லி யிருப்பது கருத்தூன்றிக் கவனிக்கத்தக்கது. ஆவியர்களில் உண்மை பேசுகின்றவர்களும், பொய் பேசுகின்றவர்களும் இருக்கிறார்கள். அதனாலேயே அவர்கள் மேலான நிலையி லுள்ளவர்களாகவும், கீழான நிலையிலுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். உலகத்தில் பொய் பேசுகின்றவர்கள், அங்கு சென்றபின்னரும் அதே தன்மையுடையர்களாகவும்

மெய் பேசுகின்றவர்கள் அந்தத் தன்மையுடையவர்களாக வும், இருக்கிறார்கள் என்று நாம் முன்னரே அறிவித்திருப் பதின் உண்மை இதன் மூலம் உறுதிப்படுத்தப்படுகிறது அல்லவா?

83. மரித்த சாமுவேலை (Samuel), அவரது மகன் சீவுல் (Saul) அழைத்துப்பேசின விபரமும், மரித்த இயேசுநாதர், தாமாகவே வந்து (Paul) பவுல் என்பவரைச் சந்தித்துப்பேசிய விபரமும்:–

பழைய ஏற்பாட்டில் சாமுவேலின் முதலாம் புத்தகம் அதிகாரம் 28:– இறந்துபோன சாமுவேலை (Samuel) அவரது குமாரர் சவுல் (Saul) அழைத்துப்பேசின விபரம் கீழ்வருமாறு கூறப்பெற்றிருக்கிறது.

28–4: பெலிஸ்தர் கூடிவந்து 'சூநேம்' என்ற இடத்தில் பாளையம் இறங்கினார்கள்.

28–5: சவுல் பெலிஸ்தரின் பாளையத்தினைக் கண்டபோது பயந்தான். அவன் இருதயம் மிகவும் தத்தளித்துக் கொண்டிருந்தது.

28–7: அப்பொழுது சவுல் தன் ஊழியக்காரரை நோக்கி, "அஞ்சனம் பார்க்கிற ஒரு ஸ்திரீயைத் தேடுங்கள்; நான் அவளிடத்தில் போய் விசாரிப்பேன்" என்றான். அதற்கு அவர்கள் இதோ 'எந்தோர்' என்ற ஊரில் அஞ்சனம் பார்க்கிற ஒரு ஸ்திரி இருக்கிறாள் என்றார்கள்.

28–8: அப்பொழுது சவுல், வேஷம் மாறி, வேறு வஸ்த்திரம் தரித்துக்கொண்டு, இரண்டு பேருடன் ராத்திரியிலே அந்த ஸ்திரீயினிடத்தில் போய்ச் சேர்ந்தான். அவளை

அவன் நோக்கி "நீ அஞ்சனம் பார்த்து எனக்குக் குறி சொல்; நான் உன்னிடத்தில் சொல்லுகிறவனை எழும்பி வரச் செய்" என்றான்.

28–9: அதற்கு அந்த ஸ்திரி "சவுல் அஞ்சனம் பார்க்கிறவர்களையும், குறி சொல்லுகிறவர்களையும், தேசத்தில் இராதபடிக்கு நிர்மூலமாக்கின செய்தியை நீர் அறிவீரே; என்னைக் கொன்றுபோடும்படி நீர் என் பிராணனுக்குக் கண்ணி வைக்கிறது என்ன?" என்றாள்.

28–10 அப்பொழுது சவுல் இந்தக் காரியத்திற்காக, உனக்குப் பொல்லாப்பு வராது என்பதைக் கர்த்தருடைய ஜீவனைக் கொண்டு சொல்லுகிறேன் என்று, அவளுக்குக் கர்த்தர் மேல் ஆணையிட்டான்.

28–11: அப்பொழுது அந்த ஸ்திரி "உமக்கு நான் யாரை எழுப்பிவரப் பண்ணவேண்டும்" என்றதற்கு, அவன் "சாமுவேலை எழுப்பிவரப் பண்ணவேண்டும்" என்றான்.

28–12: அந்த ஸ்திரி சாமுவேலைக் கண்ட மாத்திரத்தில், மகாசத்தமாய்க் கூப்பிட்டு, சவுலை நோக்கி "ஏன் என்னை மோசம் போக்கினீர்? நீர்தான் சவுலாச்சுதே" என்றாள்.

28–13; ராஜா அவளைப் பார்த்து "நீ கவலைப் படாதே; நீ காண்கிறது என்ன என்று கேட்டான். அதற்கு அந்த ஸ்திரி "தேவர்கள் பூமிக்குள்ளிருந்து ஏறிவருகிறதைக் காண்கிறேன்" என்று சவுலுக்குச் சொன்னாள்.

28–14: அவருடைய ரூபம் என்ன என்று அவளைக் கேட்டான். அதற்கு அவள், "சால்வையைப் போர்த்துக் கொண்டிருக்கிற ஒரு முதிர்ந்த வயதான மனுஷன் எழும்பி

வருகிறான்'' என்றாள். அதினாலே சவுல் அவன் சாமுவேல் என்று அறிந்துகொண்டு, தரைமட்டும் முகங்குனிந்து வணங்கினான்.

28-15: சாமுவேல் சவுலை நோக்கி, ''நீ என்னை எழும்பிவரப் பண்ணி, என்னைக் கலைத்தது என்ன?'' என்று கேட்டான். அதற்குச் சவுல், ''நான் மிகவும் நெருக்கப்பட்டிருக்கிறேன்; பெலிஸ்தர் எனக்கு விரோதமாய் யுத்தம் பண்ணுகிறார்கள்; தேவனும் என்னைக் கைவிட்டார்; அவர் தீர்க்கதரிசிகளினாலாவது, சொப்பனங்களினாலாவது எனக்கு மறு உத்தரவு அருளுகிறதில்லை; ஆகையால் நான் செய்யவேண்டியதை நீர் எனக்கு அறிவிக்கும்படிக்கு உம்மை அழைப்பித்தேன்' என்றான்.

28-16; அதற்குச் சாமுவேல் கர்த்தர் உன்னைவிட்டு விலகி, உனக்குச் சத்துருவாய் இருக்கும்போது, நீ என்னிடத்தில் கேட்பானேன்?

28-17: கர்த்தர் என்னைக்கொண்டு சொன்னபடியே செய்து முடித்து, ராஜ்யத்தை உன் கையிலிருந்து பறித்து, அதை உன் தோழனாகிய தாவீதுக்குக் கொடுத்துவிட்டார்

28-18: நீ கர்த்தருடைய சொற்கேளாமலும், அமலேக்கின்மேல் அவருக்கு இருந்த கோபத்தின் உக்கிரத்தைத் தீர்க்காமலும் போனபடியினால், கர்த்தர் இன்றையதினம் உனக்கு இந்தப் பிரகாரமாகச் செய்தார்.

28-19; கர்த்தர் உன்னுடைய ஜனங்களோடேகூட இஸ்ரவேலரையும் பெலிஸ்தர் கையில் ஒப்புக்கொடுப்பார், நாளைக்கு நீயும் உன் குமாரரும் என்னோடிருப்பீர்கள்; இஸ்ரவேலின் பாளையத்தையும் கர்த்தர் பெலிஸ்த்தர் கையில் ஒப்புக்கொடுப்பார் என்றான்.

கிறிஸ்தவ வேதப்புத்தகத்தின் பழைய ஏற்பாட்டிலி ருந்து கொடுக்கப் பட்டிருக்கும் மேற்கண்ட நிகழ்ச்சி, இறந்தவர்களை நாம் அழைத்துப் பேசலாம் என்பதனையும், இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே, பண்டைகாலத்து மக்கள், இறந்தவர்களுடன் தொடர்பு கொண்டு பேசிவந் திருக்கிறார்கள் என்பதையும், உறுதிப் படுத்துவதாகும். புதிய ஏற்பாட்டிலிருந்து கொடுக்கப் பட்டிருக்கும் கீழ் கண்ட நிகழ்ச்சி, இறந்தவர்களை நாம் அழையாதிருக்க, அவர்களாகவே வலியவந்து, நம்மிடம் பேசலாம் என்ப தனை உறுதிப் படுத்துவதாகும்.

புதிய ஏற்பாட்டின்படி (1040 Acts 22–6 to 21) 'பவுல்' (Paul) என்பவர் மரித்த இயேசுநாதரைச் சந்தித் துப் பேசிய விபரம் சொல்லியிருக்கின்றது. அதில் 'பவுல்' என்பவர் பிரயாணம் செய்துகொண்டு, "டமாஸ்கஸ்" (Damascus) என்னும் ஊரின் அருகே, ஒரு நாள் மதியத் தில் வந்துகொண்டிருந்த பொழுது, திடீரென்று ஆகாயத் தில் ஒரு பெரிய ஒளி, என்னைச் சுற்றிலும் பிரகாசித்துத் தோன்றியது. அதனால் நான் பூமியில் விழுந்துவிடவே, ஒரு சப்தம் "சால்! சால்! ஏன் எனக்கு விரோதமாகப் பேசி துன்புறுத்துகிறாய்" என்று கேட்டது. நான் "பேசுகின்ற நீர் யார்" என்று கேட்டேன். "நான் தான் நாசரத்திலுள்ள இயேசு; (I am Jesus of Nazareth) ஏன் என்னை அவ தூறாகப் பேசி துன்புறுத்துகிறாய்" என்றார் அவர்.

என்னுடன் இருந்தவர்களும், அந்த ஒளியைப் பார்த் துப் பயந்தார்கள். ஆனால் மற்றவர்கள், அவர் என்னுடன் பேசியதைக் கேட்கவில்லை. மேற்கொண்டும் அவர் சொன் னதைக்கேட்டு, டமாஸ்கஸ் என்ற இடத்திற்குச் சென்று, அங்கிருந்து 'ஜெருசலம்' (Jerusalem) என்ற இடத்திற்கு வந்து, கோயிலில் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கும் பொழுது, ஒருவித (trance) மயக்கம் ஏற்பட்டது. அப் பொழுது முன்பு என்னுடன் பேசிய அவர், (இயேசு)

**1 சீக்கிரமாக ஜெருசலத்தைவிட்டு வெளியே போய்விடு. ஏனென்றால் இங்குள்ளவர்கள், என்னைப்பற்றிச் சொல்லு கின்ற உன் வார்த்தைகளைக் கேட்கமாட்டார்கள்'' என்றார். அதற்கு ''பவுல்'' சொன்ன மறுமொழி யெல்லாம் கூறப்பெற்றிருக்கிறது.**

**84. கிறிஸ்தவர்கள் இறந்தவர்களோடு தொடர்பு கொள்ளுவதை மறுத்தல் முற்றிலும் தவறு என்று ஆங்கிலப் பாதிரிமார்களும் பிறரும் கூறுவதின் உண்மை.**

கிறிஸ்தவ வேதப்புஸ்தகத்தில் பழைய புதிய ஏற்பாடு களிலிருந்து ஆவி உலகத் தொடர்பு சம்பந்தமாக, ஆயிரக் கணக்கான சான்றுகள் கொடுத்திருக்கிறார் (Rev. G. Maurice Elliot of England) இங்கிலாந்திலுள்ள G. மாரிஸ் எலியட் என்ற பாதிரியார். மேலும் ''இயேசுநாத ரின் மனோதரும சக்திகள்'' (Psychic powers of Jesus Christ) என்ற புத்தகத்தின் முகவுரையில், அவர் கீழ்வரு மாறு எழுதியிருக்கிறார்.

இயேசுநாதர் ''எவனொருவன் நான் சொல்லுவதை நம்பி நடக்கின்றானோ, அவனும் நான் செய்கிற காரியங் களைச் செய்வான். இவற்றைவிட இன்னும் கூடுதலாகவும் செய்வான்; அப்படி நம்பி நடக்கின்றவர்களிடத்தில், வியாதியஸ்தரைக் குணப்படுத்தக்கூடிய குறிகள் ஏற்படும்'' என்று சொல்லியிருப்பதாக அறிவிக்கப்படுகிறது.

''இயேசுநாதர், மனிதர்கள் மாத்திரம், தாம் நினைத்தது போல் நினைத்து, தாம் விசுவாசித்ததுபோல் விசுவாசித்து, தாம் பிரார்த்தனை செய்ததுபோல் பிரார்த்தனை செய்து வரு வார்களேயானால், அவர்கள் தம்மைப் போலவே வாழவும், தாம் செய்த காரியங்களைச் செய்யவும் கூடும்'' என்று கூறியிருக்கிறார்.

“இயேசுநாதர் செய்த அற்புதச் செயல்கள், அவருடைய தெய்வத்தன்மையினுலேயே நடைபெற முடிந்தன வென்று, காரணம் கூறியதால், வேதக்கோயில் (Catholic Church) பெரியதோர் தவறு விளைவித்து விட்டது. இயேசுவானவர், ஏனைய மனித சமுதாயத்தைச் சாராத ஒருவர் என்பதாக ஒதுக்கிவிட்டது. அவர் செய்த அற்புதங்கள் எல்லாம், அவருடைய தூய்மையான மனிதத் தன்மையினுல் செய்யமுடிந்தவை என்று கூறியிருக்குமேயாகில், அவர் செய்தவற்றில் சிலவற்றையாவது, ஏனைய மனிதர்களும் செய்திருக்கக் கூடுமென்று கருதுவதற்காவது இடமுண்டு” என்கிருர்.

இந்த நூலாசிரியர், இயேசுநாதர் செய்த அற்புதச் செயல்களெல்லாம், ஏனைய ‘மீடியம்’ சக்திவாய்ந்த மனிதர்கள் செய்ததுபோலவும், செய்துவருகின்றது போலவும், செய்தார் என்றும், இயேசுவானவர், எல்லோரையும் போன்ற மனிதரே என்றும், அவரைப் போல தூய்மையாக நினைத்து, தீவிரமாக விசுவாசித்து தீவிரமாகப் பிரார்த்தனை செய்தால், மற்றவர்களும் அவர் செய்தவற்றையும், அவற்றிற்கு மேலானவற்றையும், செய்யமுடியுமென்று பல ஏதுக்களாலும், மேற்கோள்களாலும் 168 பக்கங்களில் நிருபித்திருக்கிருர்.

(Rev. E. J. Payne, Durham England) இங்கிலாந்தில் ‘டர்ஹேம்’ ஊரிலுள்ள E. J. பெயின் என்ற பாதிரியார்(Orthodox religion and Spiritualism) “வைதீக கிறிஸ்து மதமும், ஆவி உலக ஆராய்ச்சியும்” என்று ஒரு சிறு புத்தகம் எழுதியிருக்கிருர். அவர் தனது முகவுரையின் முதல் தொகுதியில், கீழ்வருமாறு குறிப்பிட்டிருக்கிருர்:—

"This little booklet has been written because the writer believes that either "The Church" must come to terms with Spiritualism, or else go under. Modern men and women are so bewildered and confused by the multiplicity of beliefs both inside and outside. "The Church" that a new revelation is essential, if they are to have any belief in Christianity at all. I believe that Spiritualism may be the very way and means of the new revelation."

''வேதக்கோயில், ஒன்று ஆவி உலக ஆராய்ச்சியோடு இணங்கிப்போக ஒத்துக்கொள்ள வேண்டும், அல்லாவிட்டால் கீழே போய்விடும் என்று நான் கருதுவதாலேயே, இந்தச் சிறு புத்தகத்தை எழுதலானேன். கிறிஸ்துவ மதத்தைச் சார்ந்த கத்தோலிக்கர் ஆனாலும், மற்றவர்கள் ஆனாலும், தற்காலத்திய ஆண்களும் பெண்களும் வேதக் கோயிலி லுள்ள பலவிதக் கோட்பாடுகளைக்குறித்து, மிகவும் குழப்பமும் திகைப்பும் உள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆனதால் அவர்களுக்கு கிறிஸ்துமதத்தில் ஏதாவது நம்பிக்கை இருக்கவேண்டுமானால், ஏதாவது ஒரு புதிய அறிவிப்பு இன்றியமையாததாகும். ஆவி உலக ஆராய்ச்சியே, அந்தப் புதிய அறிவிப்பிற்குரிய வழியும், மார்க்கமும் ஆகுமென்று நான் நம்புகிறேன்'' என்று சொல்லி அதற்குரிய காரணங்களைக் காட்டியிருக்கிறார்.

இதை வலியுறுத்தியே (Sir Arthur Conandoyle) 'சர் ஆர்தர் கொனன்டாயில்' என்பவர், தன்னுடைய "The new revelation page 70" "புதிய அறிவிப்பு" என்ற ஆவி உலக ஆராய்ச்சிப் புத்தகத்தின் 70-ம் பக்கத்தில், மனம் நொந்து, (Christianity must change or

must perish) என்று குறிப்பிடுகிறார். அதாவது கிறிஸ்து மதக் கொள்கை ஒன்று மாறுதல் அடைய வேண்டும், அல்லது அழிந்துபட வேண்டும் என்கிறார்.

இதே கருத்தை (Rev. Stainton Moses) ஸ்டெயின்டன்மோசஸ் என்ற பாதிரியார் போன்ற, பல ஆவி உலக ஆராய்ச்சியாளர்களும், சோதனை செய்து பார்த்த விஞ்ஞானிகளும், வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றின் விபரங்களை விரிவஞ்சி விடுக்கின்றோம்.

85. முகம்மதிய மதத்தின் 'திருக்குரானிலிருந்து' மரணத்தின் பின்னுள்ள வாழ்க்கையைப் பற்றிய முக்கிய குறிப்புக்கள்.

இறுதியாக, முகம்மதியமதத்தின் திருக்குரானிலிருந்து, ஆவி உலக ஆராய்ச்சி சம்பந்தமாக லாகூர் "ஹைஸ்ரத் பிர்ஸாகுலாம் அஹமத் காதியானி" அவர்களால் எழுதப் பெற்ற "இஸ்லாம் மத சித்தாந்தம்" என்னும் புத்தகத்திலிருந்து, சில சான்றுகள் கொடுத்து, மேல் செல்ல விரும்புகிறோம்.

பரிசுத்த குர்ஆன், மரணத்தின் பின்னுள்ள வாழ்க்கை, ஓர் நவமான நிலைமையல்லவென்றும், அது இவ்வுலக வாழ்க்கையின் ஒருவகைப் பிரதிபிம்பமே என்றும். மிகு ஊர்ஜிதமாக உரைக்கின்றது. அத்திரு முறை (சூ-17. ரு2) பகர்வதாவது:- இவ்வுலகில், நாம் ஒவ்வொரு மனிதனுடையவும் செய்கைகளின் பலாபலன்களை, அவனது கழுத்துடன் பிணைத்து, இறுதித் தீர்ப்பு நாளன்று, மறைமுகமாயிருக்கும் அந்தப் பலன்களை ஓர் கிரந்த ரூபத்திலே வெளிப்படுத்துவோம்.

இரண்டாவது உலகம் "பர்ஸக்" என்று சொல்லப்படும் ஸ்தானமாயிருக்கிறது. அரபு பாஷையில் 'பர்ஸக்'

என்பது இரண்டு பொருள்களுள், மத்திமமாயிருக்கும் ஒன்றைக் குறிப்பிடுவதற்கு வழங்கப்படுகிறது. ஆகையால் தான், இவ்வுலக வாழ்க்கைக்கும், புனருத்தாரணத்துக்கும், இடையிலுள்ள நிலைமைக்கு 'பர்ஸக்' என்று கூறப்பட்டிருக்கிறது. அன்றியும் பண்டைக்காலம் தொட்டே, இடைநிலையாகிய ஓர் துறையைக் குறிப்பிடுவதற்காகவே, இப்பதம் பிரயோகிக்கப்பட்டு வந்திருக்கிறது.

ஆத்மாவுக்கு அதன் கருமபலன்களைப் பருகுவதற்காக, மத்திமத்துறையாகிய "பர்ஸக்கில்", ஓர் தற்காலிகமான சரீரம் நல்கப்படுகின்றது. அந்தச் சரீரமோ பௌதிகப் பூதவுடம்பைப் போன்றதல்ல. ஆயினும், அது செய்கைகளின் தன்மைகளுக்கு ஏற்றவாறு, உருவகப்படும் பிரகாசமான, அல்லது இருண்டதோர் உடம்பாயிருக்கும். இவ்வாறு மனிதனுடைய தருமங்கள்தான், இத்துறையிலே ஆத்மாவுக்குச் சரீரமாய்ச் சமைகின்றன.

கர்மகதிகளின் பயனாக விளையும், இச்சரீரம்தான், 'பர்ஸக்' துறையில் நன்மை தீமைகளுடைய, பிரதிபலனைப் பெறுவதற்குப் பாத்திரமாகின்றது.

சர்வக்ஞனை ஆண்டவன் அருளியவாறு, மரணத்துக்குப்பின் ஒவ்வொரு ஆத்மாவுக்கும், பிரகாச பூரணமான, அல்லது காரிருள் மயமான, ஒவ்வோர் சரீரம் கொடுக்கப்படுகிறது என்னும் உண்மையை, மிக உரமா யூன்றி உரைக்கின்றேன்.

மறு உலகத்தில், நம்முடைய செய்கைகளும் அவற்றின் பலாபலன்களும், வெளிப்படையான உருவத்தை மேற்கொண்டு நிற்பதாயிருக்கும். நாம் இவ்வுலகத்திலிருந்து, ஏதொன்றை, மறைவான விதத்தில் உடன்கொண்டு செல்லுகிறோமோ, அது பரலோகத்திலே நம்முன் பகிரங்கமாய்த் தோன்றும். சொப்பனத்தில் காணப்படுகின்ற பாவனை

ரூபங்களை, நாம் அந்நிலைமையில், உண்மையான பொருட்களாய்க் கருதி, சுகிப்பதுபோன்றே, பரலோகத்திய ஆத்மார்த்த காரியங்களனைத்தும், உருவகமாய்ச் சமைவது நிமித்தம். மெய்யான பொருட்களாகவே அனுபோகப்படும்.

மூன்றாவது உலகம், 'புனருத்தானலோகம்' என்று அழைக்கப்படும் ஸ்தானமாயிருக்கிறது. இத்துறையில், பரிசுத்தமாயும், அசுத்தமாயும், நல்லொழுக்கமாயும், தீயொழுக்கமாயுமுள்ள ஒவ்வொரு ஆத்மாவிற்கும், ஸ்பரிசகோசமான சரீரம் அளிக்கப்படுகின்றது. கடவுள் மான்மியத்தின் பூரண வெளிப்படுதலுக்கு நியமிக்கப்பட்ட துறையிதுவே. இப்புனருத்தான நாளில்தான், ஒவ்வொரு மனிதனும், கடவுள் இருப்பைப்பற்றிப் பூரணத்தன்மையிலே அறிந்து, அவனவன் செய்கைகளுக்குரிய பூர்த்தியான பிரதிபலனைப் பிரத்தியக்ஷ நிலையிலே அடைகின்றான்.

துலக்கி உரைக்கில், துர்க்கருமம் செய்வோர், மரணமடைந்த உடனே நரகத்தில் நுழைகின்றனர்; நற்கருமம் செய்வோர், மரணத்துக்குப்பின் சுவர்க்கத்திலே, சுகானந்தம் கொள்கின்றனர். இவ்வாறு, ஒவ்வொரு மனிதனும் மரணத்துக்குப்பின், தம் தமக்குரிய கருமபலாபலனை அனுபவிக்க ஆரம்பிக்கிறானென்று, அறைகின்ற திருவாக்கியங்கள், பரிசுத்த குரானில் மலிந்து கிடக்கின்றன. சுவர்க்கவாசியான ஒரு சுகிர்தனை நோக்கி, இறைவன் சூ-36. ரு2-ல் கூறுவதாவது: "நீ சுவர்க்கத்திற் பிரவேசிப்பாயாக என்று அவனுக்குக் கற்பிக்கப்பட்டது." இவ்வாறே நியகவாசியைக் குறித்து சூ-37. ரு2-ல் சொல்கிறான்.

சுவர்க்கவாசியான ஓர் நல்லடியானுக்கு, நரகவுரித்தாளியான ஒரு நண்பன் இருந்தான். இருவரும் இறந்துவிட்டபின், சுவர்க்கவாசியான சுகிர்தனுக்கு, தன் சிநேகிதன் இருக்கும் இடத்தைக் காண்பதற்குரிய விருப்பம் ஏற்

பட்டு, பார்க்கும்பொழுது ''சுவர்க்கவாசியான அப்புண்ணிய சீலன், தன் நண்பனை நரகத்தின் மத்தியிலே கண்டான்'' என்று பகர்கின்றது. இரண்டும் செய்தவர்கள் 'பர்ஸக்' என்ற மத்திய பகுதிக்குச் செல்கின்றனர்.

பரலோகத்தில் அநுபோகப்படும் அபிவிருத்திகள் அனைத்தும், எல்லையில்லாமலிருக்கும் என்பது இஸ்லாமிய சித்தாந்தமாகும். இதைப் பற்றிப் பரிசுத்த குரான் புகல்வதாவது:—

''இவ்வுலகத்திலே வைத்து, நன்னம்பிக்கையின் பிரகாசம் கிடைக்கப்பெற்றவர்களுடைய திவ்யஜோதியானது, நியாயத்தீர்ப்பு நாளன்று, அவர்கள் முன்னுகவும் வலப்புறமாகவும் ஓடிக்கொண்டிருக்கும். அப்போது அவர்கள், 'ஏ' எங்கள் ரக்ஷகனே! நீ எங்களுடைய பிரகாசத்தைப் பரிபூரணமாக்கி, எங்களை நினது 'மக்பிரத்'தில் அல்லது சம்ரக்ஷிப்பில் ஸ்வீகரிப்பாயாக; நீயாகிறவன் எல்லா வஸ்துக்களின் மீதிலும், ஆண்மை மிக்க வல்லவனுயிருக்கின்ருய்! என்று பிரார்த்தித்துக் கொண்டிருப்பார்கள்'' என்று எடுத்துக்காட்டியிருக்கிருர்.

இவற்றிலிருந்து தீமை செய்கின்றவர்களுக்கு நரகமும், நன்மை செய்கின்றவர்களுக்கு புனருத்தானம் என்கிற சுவர்க்கமும், இரண்டும் சமமானவர்களுக்கு 'பர்ஸக்' என்ற மத்திய நிலையும் உண்டு என்று திருக்குரான் வலியுறுத்துகின்றது என்பதை அறிந்துகொள்ளலாம். இறந்த பிற்பாடு, நமக்கு ஒருவரை ஒருவர் பார்க்கக்கூடிய, சரீரம் உண்டு என்பதையும் அறிந்துகொள்ளலாம். சுவர்க்கவாசியான ஒருவன், தன்னுடைய சிநேகிதனை நரகத்தில் கண்டான் என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து, அவ்விரண்டு பகுதியிலும் உள்ளவர்களுக்கு, சரீரம் உண்டு என்பது

தெளிவாகும். அந்த சரீரம், அங்கு சென்றபின் கொடுக்கப் படுவதாக, திருக்குரான் சொல்லவில்லை. வியாக்கியானம் செய்திருக்கிறவர். அங்கு சரீரத்துடன் இருந்தாலன்றி, ஒருவரை ஒருவர் காணமுடியாதாகையாலும், உள்ளே இருந்த ஆவி உடலே அங்கு சென்று வாழ்கின்றது என்ற அனுபவம் இல்லாமையாலும், அங்கு வேறு சரீரம் கொடுக்கப் பெறக் கொண்டும் என்று யூகித்து எழுதியிருக்கிறார்.

ஆனால் இவ்வுலகத்தில் வாழும்பொழுது, சொப்பனத்தில் வெளிச்செல்கின்ற ஆவி உடலோடேயே, அவரவருடைய செய்கைகளுக்குத் தகுந்த பகுதிகளுக்கு, அவரவர் கொண்டு செல்லப்படுகிறார் என்பதே, ஆவி உலக ஆராய்ச்சியினால், தெரியப்படும் உண்மையாகும். மேலும் பரலோகத்தில், பரமானந்த ஆரண வாசிகள், (சுவர்க்கவாசிகள்) ஆண்டவனை தரிசனத்தோடு மகிழ்வார்கள் என்றும், பிரார்த்திப்பார்கள் என்றும் சொல்லியிருப்பதால், ஆண்டவன், அங்கு அவரது திருவுளப்படி, எங்கும் பிரகாசமாக, ஊரும் பேரும் உருவமும், இல்லாத இயல்பினனாகை இருந்தாலும், அவன் அன்பு அடியார்களுக்காகவும், பக்தர்களுக்காகவும், அவரவர்கள் காணக்கூடிய வகையிலும், அவரவர்கள் பேசக்கூடிய வகையிலும், பரலோகத்தில் காட்சி கொடுக்கும் தன்மையன். என்பது யாவருக்கும் தெளிவாகும்.

86. தேவதூதர்கள் வேறு, ஆவி உலகத்தவர் வேறு என்பதற்குப் பிரமாணம்.

திருக்குரானில் உள்ள முதல் பதினைந்து அத்தியாயங்களும், இப்பூலோக வாழ்க்கையைப்பற்றிக் கூறி, அதன் பின்னுள்ள பதினைந்து அத்தியாயங்களும், மரணத்தின் பின்

னுள்ள வாழ்க்கையையும், நியாயத் தீர்ப்பையும், ஆண்டவனுடைய மகிமையையும், பற்றிக் கூறுகின்றன. நபி நாயகம் அவர்கள் படிக்கத் தெரியாதவர்களாக இருந்தும். அவர்கள் நல்ல 'மீடியம்' சக்தி வாய்ந்தவர்களாகயிருந்ததால், ஜிப்ரீல் (Gabriel) என்ற தேவதூதரே, ஆண்டவனின் கட்டளைப்படி, நபிகள் வாயிலாக மண்ணுலக வாழ்க்கையையும், விண்ணுலக வாழ்க்கையையும் பற்றிய விவரங்கள் கூறியிருக்கிறார் என்பதை யாவரும் அறிந்து கொள்ளல்வேண்டும்.

கிறிஸ்தவ வேதப் புத்தகத்தில் (St. Luke) லூக்கா எழுதின சுவிசேஷத்தின் முதலாவது அதிகாரத்தில். வசனம் 11 முதல் 20 வரை, 'சகரியா' (Zachariah) என்ற பெயர்கொண்ட பூசாரிக்கு, மேலே சொன்ன (Gabriel) ஜிப்ரீல் என்ற தேவதூதர், தரிசனம் கொடுத்து. அந்த சகரியா என்பவருக்கு கிழ வயது ஆகிவிட்டபோதிலும், அவருக்கும் அவருடைய மனைவி 'எலிசபெத்' (Elisabeth) என்பவளுக்கும், ஒரு ஆண் குழந்தை பிறக்குமென்று அறிவித்து, அக்குழந்தைக்கு (John) யோவான் என்ற பெயரிட வேண்டுமென்று கட்டளையிட்டு, பின்னை அதன்படியே காரியம் நடந்தேறிய விபரம் கூறப்பெற்றிருக்கிறது.

அதே தேவதூதர் ஆறு மாதங்கள் கழித்து, கன்னிமரியாளிடம் சென்று, தரிசனம் கொடுத்து, அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்குமென்று அறிவித்து, அந்தக் குழந்தைக்கு, (Jesus) இயேசு என்ற பெயரிடவேண்டுமென்று கட்டளையிட்ட விபரம், அதே அதிகாரத்தில், வசனம் 26 முதல் 38 வரை கூறுகின்றது. அதன்படி பின்னர் காரியங்

கள் நிகழ்ந்தே, இயேசுநாதர் 1960 வருஷங்களுக்கு முன் பிறந்தார் என்பதை அறிகிறோம்.

ஆங்கிலத்தில் (Gabriel) 'கேப்ரீல்' என்ற பதத்தை, அரபிய பாஷையில் 'ஜிப்ரீல்' என்று அழைக்கிறார்கள். அதே ஆங்கிலப் பதத்தை, தமிழில் 'காபிரியேல்' என்று நேராக மொழி பெயர்த்திருக்கிறார்கள். ஆனாலும் அப்பெயருடைய தேவதூதர், ஒருவரே என்பதில் சந்தேகப்படுவதற்கில்லை. யோவானும், (John the Babtist) இயேசு நாதரும், பிறந்த வருஷத்தில் தரிசனம் கொடுத்த தேவதூதரே, பின்னர் 580 வருஷங்கள் கழித்து கி. பி. 580-ல், முகம்மது நபி நாயகம் அவர்களுக்கும், தரிசனம் கொடுத்திருக்கிறார் என்பது தெரிகின்றது. அந்தத் தேவதூதர், தான் ஆண்டவனுடைய சந்நிதானத்தில் நிற்கின்றவர் என்பதாகவும், சகரியாவுடன் பேசவும், அவருக்கு அந்த நற்செய்தியை அறிவிக்கவும் ஆண்டவனால் அனுப்பப் பட்டதாகவும், வசனம் 19 கூறுகின்றது.

இதிலிருந்து, தேவலோகத்திலுள்ளவர்களுக்குள்ள வயதும் ஆற்றலும் வேறு, ஆவி உலகத்திலுள்ள மனிதருடைய வயதும் ஆற்றலும் வேறு, என்பதைத் தெரிந்து கொள்ளல்வேண்டும். தேவலோகம் வேறு, ஆவி உலகம் வேறு, என்பதையும் தெரிந்துகொள்ளல்வேண்டும்.

**87. தேவலோகத்திலிருந்து பூலோகத்திற்கு அறிவிக்கப்பெற்ற இறுதியான தமிழ் திருமறையே "சிவஞானபோதம்" என்பது.**

தேவலோகத்திலிருந்து, இப்பூலோகத்திற்கு வந்த பரஞ்சோதி முனிவர் என்பவர், 738 வருஷங்களுக்குமுன்,

கி. பி. 1222ல், திருவெண்ணைநல்லூரிலிருந்த மெய்கண்ட தேவநாயனார் மூலம் தனித் தமிழில் அருளிய சித்தாந்த சாஸ்திரமே, மெய்கண்ட சாஸ்திரங்களில் தலைசிறந்த முதல் நூலாகிய, சிவஞானபோதமாகும். அதனுடைய வழி நூலும், விரிந்த விளக்கநூலும், சிவஞான சித்தியாராகும். கடவுளைப் பற்றியும், உயிர்களைப் பற்றியும், அஞ்ஞானத்தின் காரணத்தைப் பற்றியும், முன் பிறவி, மறுபிறப்பு, அவற்றிற்குரிய காரண காரியங்கள், நரகசுவர்க்க வாழ்வு, உயிர்களுக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பு, இவ்வுலகில் காணும் இன்ப துன்பத்திற்குக் காரணம், துன்பமில்லாத இன்பமடைய நாம் செய்யவேண்டிய சாதனம், அதனால் வரும் பயன் முதலியவற்றைப் பற்றியும் சிவஞான போதத்தைப்போல், மிகச்சுருக்கமாக 40 வரிகளிலும், சிவஞான சித்தியாரைப் போல், மிக விரிவாக 629 பாடல்களிலும், எவருடைய சந்தேகமும் தீரும்படி, தெளிவாகக் கூறுகின்ற வேறு நூல்கள், நாம் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை.

ஆகவே, மேலே காட்டியிருக்கும் பல்வேறு வகையான சான்றுகளால், மேலுலக விஷயங்கள், அங்குள்ளவர்களால், இப்பூலோகத்திற்கு இங்குள்ளவர்கள் மூலமாக, பண்டைக்காலம் தொட்டு இன்றுவரை, அறிவிக்கப்பட்டு வந்திருக்கிறது என்பதும், எக்காலத்திலும் விண்ணுலகத்திற்கும், மண்ணுலகத்திற்கும் சம்பந்தம் இருந்து தீரும் என்பதும், அந்தசம்பந்தம், உண்மையை உணர்த்துவதற்கு இன்றியமையாததென்றும், எம்மதத்தவரும், எத்தேசத்தவரும் ஒப்புக்கொள்ளத் தயங்கமாட்டார்களென்று நம்புகிறோம்.



இந்தப் படம் ஸ்தூல உடலிலிருந்து ஆவி உடல் பிரிகின்ற விதத்தைக் காட்டுகிறது. அதில் (தரையில்) அடியில் கிடக்கின்ற ஸ்தூல உடலிலிருந்து ஆவி உடலானது, தலை முதல் உள்ளங்கால் வரை வெளியேறியிருக்கும் நிலையும், அது, முன்னர் தங்கியிருந்த, தன் சடலத்தின்மேல், ஆதார அந்தரத்தில் காட்டப்பெற்றிருக்கின்றன. அது தரையோடு தரையாய் கிடக்கும் ஸ்தூல உடலின், கால்பாகத்திலிருந்து எடுத்த படமாதலால், ஸ்தூல உடல் குட்டையாய் இருப்பது போலவும், ஆவி உடல் அந்தரத்தில், செங்குத்தாய் நிற்கின்ற காரணத்தால் நெட்டைபோலவும் தோற்றமளிக்கிறது.

ஆவி உடல் எல்லா அவயவங்களையும் உடையதென்பதற்குரிய விளக்கம் 149-ம்

பக்கம் முதல் 157-ம் பக்கம் வரை விரிவாகக் கொடுத்திருக்கிறோம்.

ஆவி உடலின் உள்ளங்கால்முதல் உச்சி மண்டை வரை உள்ள அங்கங்கள், ஸ்தூல உடலிலுள்ள அந்தந்த அங்கங்களை, தற்பாதுகாப்பிற்காக உண்டாக்கிக்கொள்ளும்படி ஆண்டவன் செய்திருப்பதால், தலைப்பாகத்திலிருந்து அது வெளியேறும்போது, தலை முதலாவது மேலெழுந்த வாரியாக வெளியேறுகிறது. அது வெளியேறின அளவு உள்ளங்காலிலும், உள்ளங்கையிலுமுள்ள ஆவி உடம்பிலுள்ள அந்தந்தபாகம் மேலேறி விடும் அல்லவா? நம்முடைய உடம்பினது 98.4° சூடானது ஆவி உடம்பிலே இருக்கிறதென்று 109-ம் பக்கத்தில் விவரித்திருக்கிறோம். ஆதலால் ஆவி உடல் ஸ்தூல உடலைவிட்டு எந்த அளவு பிரிந்து வெளியேறி இருக்கிறதோ, அந்த அளவு ஸ்தூல உடம்பின் கால்களும் கைகளும் சூடு யாதொன்றும் இன்றி குளிர்ந்து விடுகின்றன. அதேபோல ஆவி உடல் முழுவதும் பிரிந்த சற்று நேரத்திற்கெல்லாம் உடல் முழுவதும் குளிர்ந்துவிடுகிறது. சுட்டுக்கொண்டிருந்த சட்டியோ, பானையோ, நெருப்பிலிருந்து பிரிக்கப்பட்டுவிட்டாலும், அதனுடைய சூடு ஆறுவதற்குக் கொஞ்சம் நேரம் செல்லும் அல்லவா? அதுபோல ஆவி பிரிந்த பின்னரும் கொஞ்ச நேரத்திற்கு, பூதபாண்டமாகிய சடலத்திலும் சூடு இருந்து பின்னர் குளிர்ந்து விடுகிறது.

இப்புத்தகத்தில் 94-ம் பக்கத்தில், 1918-ம் வருஷத்தில் வெளியான "The Undiscovered Country" "கண்டு பிடியாத பிரதேசம்" என்ற புத்தகம் ஆவி உலகம் பற்றித் தரும் சான்றுகள்பற்றி விவரித்திருக்கிறோம். அப்புத்தகத்தில் ஆவி உடல் ஸ்தூல உடம்பிலிருந்து பிரிவதின் விளக்கம் கீழ்வருமாறு குறிப்பிட்டிருப்பதை உற்று நோக்குக.

"First the Spirit form commences to rise from the top of the head and slowly ascends head first and in a perpendicular position, until the whole form stands, as it were in the Earthly body. Then those spirits who are then to receive the Spirit body hold out their arms and receive it."

இதன் பொருள்;- முதலாவதாக ஆவி ரூபமான உடம்பு உச்சி மண்டையின் வழியாக வெளியேற ஆரம்பிக்கிறது. அது மெதுவாக தனது தலையை செங்குத்தாக மேல்நோக்கி உருவி, அதன் முழு உருவமும், தான் முன்னிருந்த ஸ்தூல சடலத்தின்மேல், அந்தரத்தில் நிற்கும்வரை வெளியேறிவிடுகிறது.

அதன் பின் ஆவி உலகத்திலிருந்து அந்த ஆவியை வரவேற்க வந்த ஆவியர்கள் தங்கள் கைகளை விரித்து அதனை வரவேற்கின்றனர் என்பதாகும்.

இது தவிர சர். ஆர்தர் பின்லே (Sir. Arthur Findlay) என்பவர் 1946-ம் வருஷத்தில் 42-வது பதிப்பாகப் பதிப்பித்து "வான விளிம்பில் அல்லது விஞ்ஞான முறையில் விளக்கப் பெற்ற மரணத்தின் பின்னுள்ள வாழ்க்கை" (On the Edge of the Etheric or Survival after Death Scientifically explained) என்ற புத்தகத்தின் 129-ம் பக்கத்தில் கீழ்கண்டவாறு இறந்தவரிடம் கேட்ட கேள்விக்கு வந்த பதிலை ஆங்கிலத்தில் குறிப்பிட்டிருக்கின்றார்.

Question:- I cannot see you, but, if I could what would you look like?

**Answer:**- "I have a body, which is a duplicate of what I had on earth, the same hands,

legs and feet and they move the same, as yours do. This etheric body I had on earth interpenetrated the physical body. The Etheric is the real body and an exact duplicate of our earth body. At death we just emerge from our flesh covering and continue our life in the etheric world"

இதன் மொழிபெயர்ப்பு:—

**கேள்வி:**— நான் தங்களைப் பார்க்க முடியவில்லை. நான் பார்க்க முடியுமானால் தாங்கள் என்ன விதம் தோன்றுவீர்கள்?

பதில்:— எனக்கு ஒருஉடம்பு இருக்கிறது. அது பூவுலகத்தில் எனக்கு இருந்த உடம்பைப் போன்ற இன்னொரு உடம்பே. அதே கைகள், கால்கள், பாதங்கள், அந்த அவயவங்கள் உங்களுடைய அவயவங்கள் தொழிற்படுவது போலவே தொழிற்படுகின்றன. பூலோகத்தில் நான்வாழும் பொழுது இந்த வானுடம்பு (ஆவி உடம்பு) எனது ஸ்தூல உடலை ஊடுருவியிருந்தது. இந்த வானுடம்புதான் (ஆவி உடம்பு தான்) உண்மையான உடம்பு. ஸ்தூல உடம்பே போன்ற தோற்றமுடையது. மரண சமயத்தில் நாங்கள் ஊனுடம்பிலிருந்து எழும்பி, வானுலகில் (ஆவி உலகில்) தொடர்ந்து வாழ்க்கை நடத்துகிறோம் —"என்பதாகும்.

இதுவரை கூறியிருக்கும் விளக்கங்களிலிருந்து,ஸ்தூல உடலைவிட்டு பிரிந்துபோன ஆவி உடம்பு, முந்தின பெயருடனும், சகல அவயவங்களுடனும், ஆண்கள் ஆண்களாகவும், பெண்கள் பெண்களாகவும், ஆவி உலகத்தில் தொடர்ந்து வாழ்ந்துவருகிறார்கள் என்பது தெளிவாகும். ஆகவே, அவர்களது ஆவி உடம்பு அங்கு அழிக்கப்பெறும் காலம் வரை நாம் அவர்களோடு முந்தின உறவு

முறைகளோடு சம்பாஷித்து, அவர்களுடைய அபிப்பிராயங்களைத் தெரிந்துகொள்ளலாமென்பதில் யாருக்கும் எள்ளளவும் சந்தேகம் இருக்கமுடியாது என்று நம்புகிறோம்.

**88. இறந்தவர்கள் பூலோகத்தாருடன் தொடர்பு வைக்கின்ற 9 விதமான முறைகளும் மீடியமாக இருக்கப்பட்டவர்களின் தன்மைகளும்.**

இனி இறந்தவர்கள் நம்முடன் பேசும் முறையையும், நாம் கையாளவேண்டிய முறைகளையும் ஒவ்வொன்றாக ஆராய்வோம்:—

(1) இறந்தவர்களையும், தேவதூதர்களையும், மேலுலக அதிபதிகளின் ஆவி ரூபத் தோற்றங்களையும், தொலைகளில் நடக்கும் காரியங்களையும், சாதாரணமாக யாரும் காணமுடியாதிருக்க, சிற்சிலருடைய கண்களால் மட்டும் அவ்வுருவத் தோற்றங்களைக் காணும் தன்மையையும், தூரதிருஷ்டியையும், ஆண்டவன் கொடுத்திருக்கிறான். அப்படிக் காணும் தன்மை பெற்றவர்களை (Clair-voyant Medium) திர்க்கதரிசிகள் என்றும், ஆவிரூபத் தோற்றங்களைக் காண்கின்ற மீடியம் என்றும் சொல்லுவர். சாதாரணமானவர்கள் கனவில் உள்ளுடல் கொண்டு, இறந்தவர்களையும், தூரா தொலைகளில் நடப்பவற்றையும் பார்ப்பது போல, விழித்தும் விழியாதிருக்கும் இடைநிலையில் அல்லது ஒருவித மயக்கநிலையில், உள்ளுடல்கொண்டு பார்க்கின்ற தன்மையினாலே அது சாத்தியமாகின்றது. யோகதிருஷ்டியும் உள்ளுடல்கொண்டு காணும் தன்மையேயாகும்.

ஆவி உலகத்திலுள்ளவர்களும், அவர்கள் உயிரோடு அங்கு வாழ்ந்துகொண்டிருப்பதையும், நம்மோடு அன்பு கொண்டிருப்பதையும் அறிவிக்க மிகுந்த ஆவலுடையவர்களாக, அதற்கேற்ற சந்தர்ப்பம் எப்பொழுது கிடைக்கும் என்றும், அதற்கேற்ற மீடியம் எங்கேயிருக்கிறது என்

றும், ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். எப்பொழுதும் எங்கும் உலாவிக்கொண்டும் இருக்கிறார்கள். அவர்களுடைய ஆவி உடல், சூரிய ஒளியில் நன்றாகத் தோன்றக்கூடியதாக இல்லை. நல்ல இருட்டு வேளையிலும் தோன்றக்கூடியதாக இல்லை. அந்திசந்தி நேரங்களில், அதிக இருட்டும் அதிக வெளிச்சமும் இல்லாதபோது, சுலபமாகக் காணக்கூடியதாக இருக்கிறது. அதனாலேயே, மேல்நாடுகளில், ஆவிகளோடு தொடர்புகொள்ளுகிற இடங்களில், அந்தி சந்தி நேரம்போல், மின்சார விளக்குகள் கொண்டு, ஏற்பாடு செய்துகொள்ளுகிறார்கள். ஆவி உலகத்திலிருந்து வந்து பேசுகின்றவர்களின், உருவ அடையாளங்களை 'மீடியம்' விளக்கிச் சொல்லக்கூடியதாக இருந்தால் விளக்கிச் சொல்லவும் கூடும். பிறர் பார்க்கும்படியாகச் செய்யவும் கூடும். அப்படிச் செய்வதற்கு ஆங்கிலத்தில் "(Manifestation)" அல்லது "தோன்றச் செய்தல்" என்பர்.

(2) அப்படிப்பட்ட ஆவி ரூபத்திலுள்ளவர்கள் சொல்லுவதைக் கேட்டலும், அவர்களுடன் உரையாடுதலும், ஆகிய ஆற்றல் பெற்றவர்களை, ஆங்கிலத்தில் "(clair audient Medium)" அல்லது 'தீர்க்க கேள்வியர்' என்றும், ஆவி ரூபத்திலுள்ளவர்களோடு பேசும் மீடியம் என்றும் சொல்லுவர். பேசும் ஆற்றல் உள்ளவர்கள் எல்லோரும், காணும் ஆற்றலும் பெற்றவர்களாகவே இருக்கிறார்கள். ஆனால் சிலர் காணும் ஆற்றல் மாத்திரமே பெற்று, இறந்தவர்களுடன் பேசும் ஆற்றலும், அவர்கள் சொல்லுவதைக் கேட்கும் ஆற்றலும், இல்லாதவர்களாயுமிருக்கிறார்கள்.

மீடியம், மயக்க நிலையில் பேச்சு நிகழ்த்தும்பொழுது, அதை "Trance-Medium" "டிரேன்ஸ்மீடியம்" அல்லது "தன்னை மறந்த நிலையிலுள்ள மீடியம்" என்று சொல்லுவர். தன்னை மறந்த நிலை ஏற்பட்டபொழுது, மீடியமாக இருக்கப்பட்டவர்களின் உள்ளுடம்பு தொழிற்படுவதில்லை. அதற்குப் பதிலாக எந்த ஆவி பேசுகின்றதோ, அது அந்த

மீடியத்தின் தூல உடலை உபயோகப்படுத்திக்கொள்ளு கிறது.

நாம் டெலிபோன் மூலமாகப் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, நம்மைப் பேசவிடாமல் டெலிபோனைப் பறித்து இன்னொருவர் பேசினால், கேட்டுக்கொண்டிருக்கப்பட்டவருக்கு, முன்னிருந்தவருடைய பேச்சுக்கும், இப்பொழுது பேசுகின்றவருடைய பேச்சுக்கும் வேற்றுமை தெரியுமல்லவா? அதுபோலவே, பேசுகின்ற ஆற்றல் உள்ளுடம்பிலிருப்பதால், புகுந்துகொண்ட ஆவி, மற்றவரின் தூல உடலை, டெலிபோன் கருவிபோல் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறது.

அந்த நிலையிலே தான் இறந்தவர்களின் இயற்கையான தொனியிலும், தாய்மொழியிலும் பேச்சு நிகழும். மீடியத்திற்கு முன்பின் தெரியாத மொழிகளில் பேச்சு நிகழும் பொழுதுதான், அது அந்த மீடியத்தினுடைய செயலில் நிகழவில்லை என்பதும் அதனுடைய தூல உடலில் ஆவேசித்து, பிரவேசித்திருக்கிற வேறொருவர் ஆவி உடல் கொண்டு பேசுகிறார் என்பதும் தெளிவாகும்.

(3) ஒரு மேசையின் நான்கு கால்களில், ஒருகாலைக் கொஞ்சம் கட்டையாக அமைத்து, மீடியமாக இருக்கப்பட்டவர்களின் இரு உள்ளங்கைகளையும், மேசையின் மேலே வைத்து, அந்தக் கைகளின் மூலமாக இறந்தவர்கள், மேசையைப் பலவிதமாகத் தரையிலே தட்டும்படியாக, அதன் கட்டையான காலைப் பயன்படுத்தி, தந்தியடிப்பது போல,. இன்ன இன்ன சொல்லுக்கு இன்ன இன்ன தட்டு என்று அறிவித்து, அந்தப்படிப்பேசுவது. இது மீடியம் தன்னுணர்வோடு இருந்து பேசக்கூடியது. ஆனால் இது அவ்வளவு இலகுவாகப் பேசக்கூடிய சாதனமல்ல. பெரிய வாக்கியங்கள் வருவதற்கு வசதிகொடுக்கக் கூடியதுமல்ல. இவ்விதம் பேசுவதை, ஆங்கிலத்தில் "Table Tilting" என்பரர்கள்.

(4) பூவரசு இலைபோன்ற அல்லது இருதயவடிவமான, ஒரு பலகையின் அகன்ற பாகத்தின் அடிப்புறத்தில், இருபக்கங்களிலும் இரண்டு ரோதைகளை, எந்தப் பக்கமும் திரும்பும்படி அமைத்து, சுருங்கிய பாகத்தின் மத்தியில் ஒரு பென்சிலைப் புகுத்தக்கூடிய துவாரம் அமைத்து, ரோதைகளின் உயரத்திற்குச் சீவிய பென்சிலைச் செலுத்தி, அந்தப் பென்சில்கொண்டு எழுதக் கூடிய முறையில், ஒரு காகிதத்தைக் கீழேவைத்து, பலகையின்மேலே மீடியமாக இருக்கப் பட்டவர்கள், நீட்டிய விரல்களோடு இரண்டுகைகளையும் வைக்க, அவர்கள் மூலம் இறந்தவர்கள், அந்தப் பலகையை எழுத்துக்களுக்குத் தக்கவாறு நகரும்படி செய்து. எழுதிப் பேசுதல். இதுவும் மீடியம் தன்னுணர்வோடு இருந்து பேசக் கூடியது. ரோதைகளின் உதவியால் எழுத்துக்கள் வரையவேண்டியதிருப்பதால், எழுத்துக்கள் பெரிதாக அமைந்து, பெரிய வாக்கியங்கள் வருவதற்கும், தொடர்ச்சியாகப் பேசுவதற்கும், இது அவ்வளவு வசதி கொடுக்கக்கூடியதாக இல்லை. இவ்விதம் பேச உபயோகிக்கும் கருவியை ஆங்கிலத்தில் "Planchette" "பிலாஞ்செட்" என்பார்கள்.

(5) மீடியமாக இருக்கின்றவர்கள், தங்கள் கைவிரல்களில் எழுதுகோலைப் பிடித்து, ஒரு காகிதத்தின்மேல் எழுதும் பாவனையில் வைத்திருக்க, இறந்தவர்களின் ஆவி அவரவர்களுடைய சொந்தக் கையெழுத்தை ஒத்த எழுத்துக்களால் எழுதிப்பதில் சொல்லுதல். இதுவும் மீடியம் தன்னுணர்வோடு இருந்துகொண்டே பேசக் கூடியது. துணை மீடியமின்றி, தனியாக இருந்து பேசக்கூடியது. இந்த முறையை ஆங்கிலத்தில் "Automatic writing" "ஆட்டோமேடிக் ரைட்டிங்" என்பர்.

இந்த முறையில், இறந்தவர்களின் கையெழுத்திற்கும், மீடியமாக இருக்கின்றவர்களின் சொந்தக்கையெழுத்திற்கும் உள்ள வேற்றுமையை நன்ருகக் கண்டுகொள்ள

லாம். இந்தவிதமாகப் பேசியதின் பலனாக எழுதப்பட்ட நூல் தான், இதில் 94ஆவது பக்கத்தில் குறிப்பிட்டிருக்கிற "கண்டுபிடியாத பிரதேசம்" (The Undiscovered Country) ஆகும்.

(6) சுமார் 15 அங்குல சதுரத்தில், சமதளமாக உள்ள ஒரு பலகையை, அல்லது கண்ணாடியை எடுத்து, நான்கு ஓரங்களிலும் சட்டம் (Frame) அமைத்து, அந்தச் சட்டத்தின்மேல் ஆங்கில எழுத்துக்கள் 26-ம், அல்லது தமிழ் எழுத்துக்களில் உயிர் எழுத்து 12ம் மெய் எழுத்து 18ம் ஆக 30ம், அல்லது பிறமொழி எழுத்துக்கள், (ஒரு எழுத்திற்கும் மற்ற எழுத்திற்கும் இடைவெளி கூடியவாறு ஒன்றுபோல் அமையுமாறு) எழுதி, அல்லது காகிதத்தில் எழுதி ஒட்டி, மத்தியில், ஒரு சிறு கிண்ணத்தை, அல்லது ஏதாவது குவிந்த சிறு மூடியைக் கவிழ்த்திவைத்து, சதுரமான பலகையின் தென்புறம் ஒரு ஆணோ, பெண்ணோ உட்கார்ந்துகொண்டு, மத்தியில் கவிழ்த்திய கிண்ணியின் மேல், இருவரும் கைவிரல்களை வைத்துக்கொண்டிருக்க, அந்தக் கிண்ணியோ, மூடியோ, தானாகவே நகர்ந்து. ஓரத்திலுண்டான சட்டங்களிலுள்ள எழுத்துக்களைத்தொட்டுத் தொட்டு, வார்த்தைகளாகவும், வாக்கியங்களாகவும் அமையும்படி காட்டும். வாக்கியம் முடிந்தவுடன் மத்தியில்வந்து கிண்ணி நின்றுவிடும். இந்த விதம் பேச உபயோகிக்கும் கருவியை ஆங்கிலத்தில் "OUIJA BOARD" "உய்ஜா போர்டு" என்பர்.

இதுவே இறந்தவர்களோடு பேசுவதற்கு, மற்ற எல்லா முறைகளிலும், மிகவும் சுலபமானது. சாதாரணமாகக் கையாளும் தன்மையது. சிலாக்கியமானது. மீடியமாக இருக்கப்பட்டவர்கள், தன்னுணர்வுடன் இருந்து, தாங்களே கேள்விகள் கேட்டு, விடைபெற்று மகிழ்ந்துகொள்ளக்கூடியது.

(7) மேலே சொல்லிய ஆறுமுறைகளில், ஆவி உல கத்தவர் தூல உடம்போடிருக்கும் மக்களை ஆவேசித்து, நம்முடன் பேசுகின்றனர். அவர்கள் இறந்த பிற்பாடும். முன்போலவே ஒரு உடம்போடு வாழ்ந்து வருவதாகவும், முன்போலவே அறிவுடையவர்களாகவும், அன்புடைய வர்களாகவும், பற்று உடைய வர்களாகவும், இருப்பதாக நமக்கு நிரூபிப்பதல்லாமல், சாமன்களைத் தூக்கக்கூடிய சக்தி, அவர்களுக்கு இருப்பதாகவும் நிரூபிக்கிறார்கள்.

அவ்வாறு நிரூபிப்பதில் இரண்டு முறைகள் உண்டு. ஒன்று, ஒரு அறையிலுள்ளே ஒரு ஓரத்தில் இருக்கிற சாமானை, யாருடைய உதவியுமின்றி, ஆவி உடலிலுள்ள வர்கள், இன்னொரு இடத்தில் தூக்கி வைத்துவிடுவது. இதை ஆங்கிலத்தில் "Telekinesis" 'டெலிகினசிஸ்' என்று சொல்லுவர். மற்றொன்று தூரத்திலிருக்கிற சிறிய சாமான்களை, அல்லது வேறு அறையில் இருக்கின்ற சிறிய சாமான்களை. நாம் இருக்கிற அறைக்குள், யாருடைய உதவியுமின்றிப் போட்டுவிடுவது. இதை ஆங்கிலத்தில் "Apports" 'அப்போர்ட்ஸ்' என்று சொல்லுவர்.

(8) இவை தவிர ஆவி உலகத்தவர், மீடியத்தின் மூலமாகப் பேசாமல், மீடியத்தின் சக்தியை தாங்களாகவே உபயோகப்படுத்தி, நேரடியாக தங்கள் தங்கள் சுய குர லோடு 'மெகபோன்' (Megaphone) என்ற கருவி மூலம், பிறர் கேட்கும்படிப் பேசுகின்றனர். இவ்வித முறையில் நமக்கு பேசுகின்றவருடைய குரலும், பேசுகின்ற பாணி யும், நாமே கேட்டு அறிந்து கொள்ளக்கூடியதாகையால், மீடியம் ஏதும் தன்னுடைய கருத்தை, இறந்தவர்களுடைய கருத்தாகச் சொல்லியிருக்குமோ, என்ற சந்தேகம் உண் டாகமுடியாது. மீடியத்தின் உடம்பிலுள்ள "எக்டோபி ளாசம்" (Ectoplasm) என்ற சக்தியைப் பயன்படுத்தியே, ஆவிகள் இவ்விதம் பேசமுடிகிறதென்று சொல்லுகின்ற னர். இவ்வித முறையை ஆங்கிலத்தில் "Direct or

Independent Voice" "டைரெக்ட் ஆர் இன்டிபென் டென்ட் வாய்ஸ்" 'நேரடியான அல்லது சுயேச்சையான குரல்' என்று கூறுவர்.

(9) இந்த எட்டுவிதங்கள் தவிர, இறந்தவர்கள் இந் நில உலகத்திலுள்ள மக்களோடு, எல்லாத் தேசங்களிலும், மக்கள் தோன்றிய காலமுதல், எல்லாக் காலங்களிலும், எவ்வித மதக்கோட்பாடுடையவராயிருப்பினும், எல்லாப் பாஷைகளிலும், அவரவருடைய சொப்பனங்களில் தொழிற்படுகின்ற, அவரவருடைய ஆவி உடலோடு, நேருக்கு நேராக, சர்வசாதாரணமாகப் பேசுவதும், உறவு கொண்டாடுவதும், பலவிதமாக விளையாடுவதும், சிலருக் குப் பின்னால் நடக்கப்போவதை முன்னால் அறிவிப்பதும், தெரியாத விஷயங்களைத் தெரியும்படி அறிவுறுத்துவதும், தெரியாத இடங்களைத் தெரியும்படி தெரிசிக்கச்செய்வதும், அவரவர்களது நித்திய அனுபவத்தில் உள்ளனவே. எல்லோ ருடைய சரித்திரங்களும், சமயசாத்திரங்களும், தோத்திரங் களும் இவ்வித நிகழ்ச்சிகளைப் பெரிதும் வலியுறுத்துகின் றன.

ஆக இவ்விதமாக ஒன்பது வகைகளில், இறந்தவர்கள் நம்மோடு தொடர்புகொண்டு, அங்குள்ள நிலைகளையும், இங்கு நாம் செய்யவேண்டியவைகளையும் நமக்கு அறி வித்து, நம்மை மேல்நிலையடைய உதவிசெய்ய, எப்பொழு தும் தயாராகவே இருக்கிறார்கள். நாம் விரும்பாதிருந்தா லும், நாம் அங்குள்ள வாழ்க்கையை நம்பாதிருந்தாலும், அவர்கள் நம்மை விடுவதாக இல்லை. எப்பொழுதெல்லாம் அவர்களுக்கு வாய்ப்புக் கிடைக்கிறதோ, அப்பொழுதெல் லாம் அவர்கள் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளு கிறார்கள்.

இந்த உண்மையை அறிந்து, நாம் அவர்களுக்கு நம்மோடு தொடர்புகொள்வதற்குரிய சந்தர்ப்பம் சிறிது அளிப்போமானால், அது அவர்களுக்கு மிக்க மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடியதாகவும், நமக்கு அரிய பெரிய உண்மைகளை, சந்தேக விபரீதமின்றி உணர்ந்துகொள்ளக்கூடிய வாய்ப்பாகவும் அமையும். அவ்வித நன்மையை நாங்கள் பெற்றிருப்பதுபோல், உலகமக்கள் அனைவரும் பெற்று, நற்பயனை அடையவேண்டுமென்ற ஒரே நோக்கத்தோடு, நாங்கள் வெற்றிகரமாகக் கையாண்ட, ஆறுவது முறையின் முழுவிபரத்தையும் இங்கு விளக்குகின்றோம்:—

**89. அவற்றில் சுலபமாக யாவரும் கையாளக்கூடிய 6வது முறையான "உய்ஜா" போர்டு மூலம் பேசுவதன் முழு விபரம்.**

உய்ஜா போர்டு (OUIJA BOARD) மூலம் பேசும் முறையின் முழு விபரம்:-

இதன்மூலம் பேசும் முறையை, யாரும் தனது வீட்டில், பிரார்த்தனை செய்வதற்குரிய தூய இடத்தில் வைத்துக் கையாளலாம். இதற்கு ஆங்கிலத்தில் "மீடியம்' தன்மைபெற்ற, இரண்டு கன்னிப்பருவமுள்ள பெண்களோ, ஆண்களோ, அல்லது ஒரு ஆணும் ஒரு பெண்ணுமோ தான் தேவை. 'மீடியமாக இருப்பதற்கு, விசேஷத் தகுதிகள் ஒன்றும் தேவையில்லை. 'மீடியமாக' இருப்பவர்கள் உட்காருமுன், குளித்துத் தூய உடை அணிந்து, பக்தி நிறைந்த உள்ளத்தோடு, கைவைத்துப் பழகவேண்டும். இறந்தவர்களைப் பற்றிக் கனவுகாணும் பிள்ளைகள், ஆணுலும், பெண்ணுலும், நல்ல மீடியமாகக் காணப்படுகிறார்கள். ஒருவருக்குக் கன்னிப்பருவத்தில் இருக்கின்ற 'மீடியம்' சக்தியானது வயது செல்லச் செல்லக் குறைந்து விடுகிறது. அதனாலேயே வயது வந்தவர்கள், மீடியமாக சாதாரணமாக இருப்பதில்லை. தொடர்பு வைத்துக்

கொண்டே இருந்தால், வயதானவர்களும் நல்ல மீடியமாகக் காணப்படுகிறார்கள்.

ஏறக்குறைய 15 அங்குலமுள்ள, கூடியவாறு சச்சதுக்கமான "கேரம்போர்டு" போன்ற பலகை, அல்லது கண்ணாடிப்படம் ஒன்று தேவை. அது வட்டமாகவும் இருக்கலாம். அதன் ஓரங்களில் உள்ள சட்டங்களில் ஆங்கில எழுத்துக்களையோ, தமிழ் எழுத்துக்களையோ, அல்லது வேறு எந்த மொழி எழுத்துக்களையோ, ஒரு எழுத்துக்கும் மற்ற எழுத்துக்கும் இடையே, சரிசமமான இடம் விட்டு எழுதிக்கொள்ளவேண்டும்.

பேச்சு நிகழ்த்துவதற்குத் தேவையானவை;–

1. மேற்கூறியவாறு தயாரித்த 15 அங்குலமுள்ள பலகை அல்லது கண்ணாடி.

2. அதன்மேல் தட்டுத் தடையில்லாமல் நகரக்கூடிய சிறிய கிண்ணி, செப்பு அல்லது மூடி.

3 ஆவி உடலுடன் உள்ளவர், அடிக்கடித்துப் 'பேசப்" பயன்படுத்தப்படும் "மீடியம்", (Medium) குளித்துத் தூய ஆடை அணிந்து, வடக்குநோக்கி இருந்து கிண்ணியைத் தொடுதல்.

4. துணை "மீடியம்" தெற்குநோக்கி இருந்து, மற்றவரோடு சேர்ந்து கிண்ணியைத் தொடுதல்.

5. தூய்மையான இடம்.

6. கேலி, நையாண்டி யாரும் செய்யாதிருத்தல்.

7 உண்மையை உணர ஆர்வமுள்ளவர்களாக இருத்தல்.

வடக்கு. + 4 துணைமீடியம்.




தெற்கு. + 3 மீடியம்.

வடக்கு முகமாக உட்கார வேண்டும்.

மீடியமாக இருப்பவர்கள், வடக்கு நோக்கி, தென்பக்கத்தில் உட்கார்ந்து இருக்கவேண்டும். துணை மீடியமாக இருப்பவர்கள், தெற்கு நோக்கி வடபக்கத்தில் உட்கார்ந்து இருக்கவேண்டும். பலகையின் மத்தியில், அங்குமிங்கும் தட்டுத் தடையில்லாமல், நகரக்கூடிய வகையிலுள்ள ஒரு கிண்ணியை, குப்புறக் கவிழ்த்தி வைக்கவேண்டும். அந்தக் கிண்ணியின்மேல், 'மீடியம்' துணை மீடியம் ஆகிய இரண்டு பேரும், தங்களுடைய வலதுகை, ஆள்காட்டி விரல்களையும் நடு விரல்களையும், தனித்தோ அல்லது சேர்த்தோ வைக்க

ட்டும் தொடாததுமாக வைக்கவும் கூடாது. கிண்ணி தானாகவே நகரும்பொழுது, அதை விரல்களால் அழுத்தி நிறுத்தி விடாமலும், விரல்கள் கிண்ணியைவிட்டு விலகி விடாதவண்ணமும் வைத்தல்வேண்டும்.

அதன்மேல், இறந்தவர்களை வணக்கத்தோடு மனதில் நினைத்து, வழக்கம்போல் கூப்பிடும் முறையில் கூப்பிட்டு, நமஸ்காரம் என்றோ அல்லது வேறு முறைகளிலோ, வணக்கம் சொல்லவேண்டும். சில நிமிஷங்கள் எதிர்நோக்கிப் பொறுத்திருக்கவேண்டும். கிண்ணம் தானாகவே நகர்ந்து, ஒவ்வொரு எழுத்தையும் தொட்டு, மத்தியில் வந்து நிற்கிறதைக் கவனிக்கவேண்டும். மீடியம் சக்தி நன்றாக அமைந்திருக்குமேயானால், எழுத்துக்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கும்பொழுது, N-A-M-A-S-K-A-R-A-M நமஸ்காரம் என்றோ அல்லது "எல்லோருக்கும் நமஸ்காரம்" E-L-L-O-R-U-K-K-U-M-N-A-M-A-S-K-A-R-A-M என்றோ, ஒவ்வொரு எழுத்தையும் தொட்டு, பதில் குறிக்கும். தமிழில் எழுதப்பட்டிருந்தால் (ந்+அ) ந (ம்+அ) ம-ஸ் (க்+ஆ) கா (ர்+அ) ர-ம்—நமஸ்காரம் என்று ஆங்கிலம் போலவே, மெய்யெழுத்தும் உயிர் எழுத்துமாக வரும். நாம் சேர்த்து வாசித்துக்கொள்ளவேண்டும்.

ஆவிகள் பேசத் தொடங்கியதும், பலகையின் மத்தியில் வைத்திருக்கும் விரல்களும். அவற்றின் அடியிலுள்ள சிறிய கிண்ணியும் நகர்ந்து, பலகையின் ஓரங்களிலுள்ள எழுத்துக்களைத் தொட்டுத் தொட்டு, ஒரு சொல்லோ அல்லது வாக்கியமோ முடிவடைந்ததும், பலகையின் மத்திய இடத்துக்கு வந்து நின்றுவிடும்.

அந்தக்கிண்ணி தொடுகின்ற எழுத்து ஒவ்வொன்றையும்,' கவனித்து ஒரு தாளில் உடனுக்குடன் குறித்துக் கொண்டு, கிண்ணி நின்றவுடன் எழுதியதைக் கவனமாய்ப்

தெற்கு முகமாக உட்கார வேண்டும்.

வடக்கு. + "4 துணைமீடியம்.




தெற்கு. + 3 மீடியம்.

வடக்கு முகமாக உட்கார வேண்டும்.

மீடியமாக இருப்பவர்கள், வடக்கு நோக்கி, தென்பக்கத்தில் உட்கார்ந்து இருக்கவேண்டும். துணை மீடியமாக இருப்பவர்கள், தெற்கு நோக்கி வடபக்கத்தில் உட்கார்ந்து இருக்கவேண்டும். பலகையின் மத்தியில், அங்குமிங்கும் தட்டுத் தடையில்லாமல், நகரக்கூடிய வகையிலுள்ள ஒரு கிண்ணியை, குப்புறக் கவிழ்த்தி வைக்கவேண்டும். அந்தக் கிண்ணியின்மேல், 'மீடியம்' துணை மீடியம் ஆகிய இரண்டு பேரும், தங்களுடைய வலதுகை, ஆள்காட்டி விரல்களையும் நடு விரல்களையும், தனித்தோ அல்லது சேர்த்தோ வைக்க

வேண்டும். அதிகமாக அழுத்தி வைக்கவும் கூடாது; தொட்டும் தொடாததுமாக வைக்கவும் கூடாது. கிண்ணி தானகவே நகரும்பொழுது, அதை விரல்களால் அழுத்தி நிறுத்தி விடாமலும், விரல்கள் கிண்ணியைவிட்டு விலகி விடாதவண்ணமும் வைத்தல்வேண்டும்.

அதன்மேல், இறந்தவர்களை வணக்கத்தோடு மனதில் நினைத்து, வழக்கம்போல் கூப்பிடும் முறையில் கூப்பிட்டு, நமஸ்காரம் என்ருே அல்லது வேறு முறைகளிலோ, வணக்கம் சொல்லவேண்டும். சில நிமிஷங்கள் எதிர்நோக்கிப் பொறுத்திருக்கவேண்டும். கிண்ணம் தானகவே நகர்ந்து, ஒவ்வொரு எழுத்தையும் தொட்டு, மத்தியில் வந்து நிற்கிறதைக் கவனிக்கவேண்டும். மீடியம் சக்தி நன்ருக அமைந்திருக்குமேயானல், எழுத்துக்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கும்பொழுது, N-A-M-A-S-K-A-R-A-M நமஸ்காரம் என்ருே அல்லது "எல்லோருக்கும் நமஸ்காரம்" E-L-L-O-R-U-K-K-U-M-N-A-M-A-S-K-A-R-A-M என்ருே, ஒவ்வொரு எழுத்தையும் தொட்டு, பதில் குறிக்கும். தமிழில் எழுதப்பட்டிருந்தால் (ந்+அ) ந (ம்+அ) ம-ஸ் (க்+ஆ) கா (ர்+அ) ர-ம்—நமஸ்காரம் என்று ஆங்கிலம் போலவே, மெய்யெழுத்தும் உயிர் எழுத்துமாக வரும். நாம் சேர்த்து வாசித்துக்கொள்ளவேண்டும்.

ஆவிகள் பேசத் தொடங்கியதும், பலகையின் மத்தியில் வைத்திருக்கும் விரல்களும். அவற்றின் அடியிலுள்ள சிறிய கிண்ணியும் நகர்ந்து, பலகையின் ஓரங்களிலுள்ள எழுத்துக்களைத் தொட்டுத் தொட்டு, ஒரு சொல்லோ அல்லது வாக்கியமோ முடிவடைந்ததும், பலகையின் மத்திய இடத்துக்கு வந்து நின்றுவிடும்.

அந்தக்கிண்ணி தொடுகின்ற எழுத்து ஒவ்வொன்றையும்,' கவனித்து ஒரு தாளில் உடனுக்குடன் குறித்துக் கொண்டு, கிண்ணி நின்றவுடன் எழுதியதைக் கவனமாய்ப்

படிக்கவேண்டும். "VANTHAN" என்ற எழுத்துக்கள் வந்தான் என்றுமிருக்கலாம்; வந்தேன் என்றுமிருக்கலாம். ஆகையால் இடம்நோக்கிப் பொருள் கொள்ளல்வேண்டும்.

ஆரம்பத்தில் கிண்ணி நகர்ந்து, வட்டமாகச் சுற்றி வந்தாலும், தொடர்பில்லாத எழுத்துக்களைத் தொட்டு, பொருளில்லாத சொற்கள் கிடைத்தாலும், "மீடியமாக" இருப்பவர்களுக்கு, பயிற்சி நடக்கிறதென்று அறியவேண்டும் தொடர்ந்து, ஒவ்வொரு நாளும் கொஞ்சம் கொஞ்சம் பழகிவந்தால், தொடர்பு ஏற்பட்டுவிடும். கிண்ணி நகரவேயில்லையானால், "மீடியம்" சரியானதில்லை என்று தெரிந்து, வேறொருவரைக்கொண்டு முயலவேண்டும்.

சிய்யமான கேள்விகள் கேட்கக்கூடாது. இறந்தவர்களும் நம்மைப் போன்ற அறிவுடையவர்களே. அவர்களுக்குத் தோன்றுகின்ற யோசனைகளைக் கூறுவார்கள். அவர்கள் எப்பொழுதும், நம் நலத்தில் கண்ணுங் கருத்துக்கொண்டவர்களாகவே இருக்கிறார்கள். மேல்நிலையில் உள்ளவர்கள், நம் வீட்டில் நிகழும் நிகழ்ச்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நம்மைப் போன்ற கனமான சரீரம் இல்லையாதலால், அவர்கள் நினைத்த இடத்திற்கு எவ்வித ஊர்திகளும், (வாகனுதிகள்) இன்றிச் செல்லமுடிகிறதென்கிறார்கள். பெண்கள், வீடுதொடாமல் விலகி இருக்கும்பொழுது, மீடியமாக இருக்கக்கூடாது.

இறந்தபின் மனிதர்கள் தங்குகிற உலகம், ஆவி உலகம் என்று அழைக்கப்படுகிறது. அங்கே பலபிரிவுகள் உண்டு. பாவம் செய்தவர்கள் தங்கும் இருட்பகுதியும், புண்ணியம் செய்தவர்கள் தங்கும் ஒளிப்பகுதியும். அவற்றுள் உட்பிரிவுகளும் இருக்கின்றன என்று சொல்லுகிறார்கள். ஒளிப்பகுதியில் உள்ளவர்களை மேல் நிலையில் உள்ளவர்கள் அல்லது புண்ணியப்பகுதியில் உள்ளவர்கள் என்று

சொல்லுகிறார்கள். அவர்கள் மட்டுமே, யாதொரு கட்டுப்பாடுமின்றி, இருட்பகுதியாகிய பாவப்பகுதிகளுக்குச் சென்று, அங்குள்ளவர்களுடன் பேசவும், இவ்வுலகில் நினைத்த இடங்களுக்குச்சென்று, அங்குநடக்கின்றவற்றைப் பார்க்கவும், மேலேயுள்ள உலகங்களுக்குச் செல்லவும், சக்தியுடையவர்களாக இருக்கிறார்கள்.

ஒரு மனிதன் செய்த நன்மை கூடுதலாக இருப்பதற்குத் தக்கபடி. இறந்தபின் புண்ணியப் பகுதிக்கும், தீமைகூடுதலாக இருப்பதற்குத் தக்கபடி, பாவப் பகுதிகளுக்கும் அனுப்பப்படுகிறான். புண்ணியப் பகுதியில் உள்ளவர்கள் மட்டும், நாம் நினைத்தமாத்திரத்தில், உடனே வந்து பேசக்கூடிய நிலையில் இருக்கிறார்கள். மற்றப் பாவப் பகுதிகளில் உள்ளவர்கள், இருளில் மூழ்கியிருக்கிறார்கள்; அவர்கள் நம்மோடு நினைத்தவுடனே பேசவர முடிகிறதில்லை ஆனால் புண்ணியப் பகுதியிலுள்ள ஆவிகள், இவ்வுலகத்திற்கு எப்பொழுதும் வந்து போகவும், இதர பகுதிகளுக்குப் போகவும், புண்ணியப்பகுதியில் இல்லாதவர்கள், மற்ற இருள் பகுதிகளில் இருக்கிறார்களா என்று தேடவும், தகுதி உடையவர்களாக அமைந்திருக்கிறார்கள்.

புண்ணியப் பகுதியில் உள்ளவர்களுக்குத் தெரியாத செய்திகள் இருந்தால், அவர்கள் இன்னும் மேலுள்ள பகுதிகளுக்குச் சென்று, அங்குள்ள அநுபவமுதிர்ந்த மற்ற ஆவிகளோடு பேசிக்கலந்து, நமக்குவேண்டிய யோசனைகள் சொல்லக் கூடியவர்களாக இருக்கிறார்கள்.

முதலில், ''புண்ணியப்பகுதியில் உள்ள ஆவிகளுக்கு நமஸ்காரம்'' என்று சொல்ல வேண்டும். பதிலுக்கு ''நமஸ்காரம்'' என்று வந்தபிறகு, ''பேசுகிறதுயார்'' என்று விசாரித்து, அதற்குமேல் நமது குடும்பத்தில் இறந்தவர்களைப்பற்றி, விசாரிக்கவேண்டும்.

விசாரிப்பதற்குக் கொடுக்கவேண்டிய விபரம்:—

1. இறந்தவரின் பெயர்.
2. இறக்கும்போது வயது.
3. இறந்த இடம்.
4. இறந்த வருஷம் மாதம் முதலியன.

இறந்தவர்களுடைய (Photo) புகைப்படமிருந்தால், அந்தப்படத்தை முன்னால் வைத்து அடையாளங் காட்டினால், ஆவி உலகில் அந்த நபரைத் தேட மிகவும் எளிதாக இருக்கும். இவ்வளவு விபரங்களும் கொடுத்த பிறகு, நம்மோடு பேசிக்கொண்டிருக்கும் ஆவி உலகவாசி, "S-A-R-E" "சரி" என்றாவது, (N-A-L-L-A-T-H-U) "நல்லது" என்றாவது, சொல்லிவிட்டுத் தேடப்போவார். தேடிவந்து எந்தப் பகுதியில் இருக்கிறார்கள் என்ற விபரத்தை, அந்த ஆவியார் சொல்லுவார். நம்முடைய சொந்தக்காரர், புண்ணியப் பகுதியில் இருக்கிறார்கள் என்ற விபரத்தை அறிந்தபின், அவர்களை நாம் கூப்பிட்டால், உடனே வந்து பேசுவார்கள். இருட் பகுதியில் இருப்பவர்களைக் கூப்பிடுவதற்கு, புண்ணியப் பகுதியிலுள்ள ஆவியார்களை அனுப்பி, அழைத்துவரச் செய்து, பேசவேண்டும். இருட் பகுதியிலுள்ளவர்களுக்கு நினைவு மங்கலாக இருக்கிறது. அவர்கள் மேற்பகுதிக்கு வருவதற்கு, நாம் அவர்களை நினைத்து, வழிபாடு செய்யவேண்டுமென்று மட்டுந்தான், நம்மை அவர்கள் கேட்டுக்கொள்கிறார்கள்.

இறந்தபின், இந்தஉலகில் வாழ்ந்த வயதுக்குத்தக்கபடி, சிறியவர் பெரியவர் என்று ஆவியார்களைக் கருதிக்கொள்ளக்கூடாது; இந்த உலகில் சிலநாட்கள் தங்கியிருந்த சிறு குழந்தைகள், இவ்வுலகில் பல ஆண்டுகள் வாழ்ந்த மனிதர்களைவிட, அறிவு வாய்ந்த ஆவி உலகவாசிகளாக ஆவி உலகத்தில் காணப்படுகின்றன; ஆகையால் இப்பூவு

லகில் சிலநாள் தங்கிய குழந்தையானது ஆவி உலகில் புண்ணிய முள்ளதாகவும், பலஆண்டுகள் வாழ்ந்தவர்கள் ஆவி உலகில் பாவமுள்ளவர்களாகவும் இருக்கக்கூடும் என்று, தெரிந்துகொள்ளவேண்டும்; சிலநாள் வசித்திருந்த கைக்குழந்தையானாலும், பிறந்ததும் இறந்துபோன குழந்தையானாலும், வயதுமுதிர்ந்த கிழவரானாலும், எல்லோரும், படித்திருந்தாலும், படியாதிருந்தாலும், பேசக்கூடியவர்களாக இருக்கிறார்கள் என்பது நினைவிலிருக்க வேண்டும்.

எந்த நேரத்திலும் இறந்தவர்களின் ஆவிகளோடு பேசலாம். ஆனால் காலையிலும் மாலையிலும் 5 மணி முதல் 3 மணிவரை, ஆவி உலகத்தில் பிரார்த்தனைநேரம். அந்த நேரங்களில், ஆவி உலகத்தவர் பேசுவதற்குப் பெரும் பாலும் விரும்புவதில்லை. எந்தப் பாஷையிலும் பேசலாம். பாஷை ஒரு தடையாகாது. கேட்கும் கேள்விகள் மட்டும், தெளிவாக இருக்கவேண்டும்.

ஒவ்வொரு நேரமும் பேச்சு முடிந்தவுடன் "இன்று நீங்கள் வந்து எங்களோடு பேசியதற்கு நன்றி. இது போல் நாங்கள் விரும்பும்போதெல்லாம் நீங்கள் வந்து பேச வேண்டுகிறோம்; நமஸ்காரம்" என்று சொல்லி முடிக்க வேண்டும். பதிலுக்கு அவர்கள் "எல்லோருக்கும் நமஸ்காரம்" அல்லது "எல்லோருக்கும் எங்கள் அன்பான ஆசீர்வாதம்," அல்லது "நமஸ்காரம்" என்று பதில் சொல்லுவார்கள். அதோடு நிறுத்திக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு பேசுதல், அந்த ஆவிகளுக்கு இடையூறாக இருக்கலாமோ? என்று பலர் நினைத்துக் கேட்கிறார்கள். அப்படி அல்ல, நம்மோடு பேசவேண்டுமென்று, அவர்கள் ஆவலோடு எதிர்பார்த்து இருக்கிறார்கள்.

## 90. முடிவுரை.

ஆவி உலகவாசிகள், தூல உட்லோடு இந்த உலகில் இருக்கும்போது பேசிவந்த முறையில், வருகின்ற விடைகளைக் கொண்டு, பேசுகிறவர்கள், தங்களுடைய சொந்தக்காரரில் இன்னார் தான் என்று, சந்தேக விபரீதமில்லாமல் அறிந்துகொள்ளலாம். பலதடவைகள் பேசும்பொழுது தான், புதுப்புது அனுபவம் பெறமுடியும். இறந்தவர்கள் நம்மைவிட்டுப் பிரிந்துபோய்விட்டார்களே என்ற நினைப்பும், அவர்களுக்கும் நமக்கும், இனிஒருதொடர்புமே இல்லை என்றநிலையும், முற்றிலும் மாறிவிடும். இறந்துபோன நமது உற்றார், உறவினர், நண்பர் முதலியவர்களைக் கூப்பிட்டு, அன்பாக அளவளாவிபேசிப் பார்த்து, மனஆறுதல் பெற்று, இன்பம் அடைவோமாக.

மேலான நிலையிலுள்ள ஆவிகளைக் கொண்டும், அதிகாரமூர்த்திகளான அதிதெய்வங்களைக் கொண்டும், எல்லோருக்கும் மேலான ஆண்டவனைக் கொண்டும், மருந்து கொடாமல், வியாதிகளைக் குணப்படுத்தக் கூடுமாவென்ற சந்தேகங்களை ஒழித்துக்கட்டி, கண்ணுக்குப்புலப்படாதவர்களின் துணைகொண்டு, அற்புதங்கள் பல செய்விக்கலாம் என்ற உறுதிபெற்று, தீவிரபக்தியோடு வழிபாடுகள் செய்து உய்வோமாக

அவரவர் செய்கின்ற நல்வினை, தீவினைகளுக்குத் தக்க, புண்ணியமும் பாவமும் உண்டு என்றும், அவைகளுக்குத் தக்க, இன்பமும் துன்பமும் உண்டு என்றும், இறந்தபின்னும் எல்லோருக்கும் ஒரு வாழ்க்கை உண்டு என்றும், உறுதியாக நாம் உணர்ந்து, அதற்குத் தகுந்தபடி நம்முடைய வாழ்க்கையைத் திருத்தி அமைத்து, நாம் நடக்க வேண்டும் என்ற அவசியத்தை. இறந்தவர்கள் பல விதத்திலும் உறுதிப்படுத்திவிடுவார்கள்.

அவ்வித அனுபவங்களைப் பெற்றுவது, சமயபோதனை களின் உண்மைகளை உணர்ந்து, எல்லோரும் சீரியமுறை யில் வாழ்க்கையை நடத்தி, கடைத்தேற வேண்டும் என்பதே நமது பேரவாவும், பிரார்த்தனையும், ஆசீர்வாத மும் ஆகும்.

முடிவாக, இறந்தவர்களோடு பேசும் ஆற்றல் பெற்று 'மீடியம்' ஆக இருக்கின்றவர்களும், இறந்தவர்களோடு பேச விரும்புகின்ற பிறரும், முக்கியமாகக் கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டிய சிலவற்றை நினைவுறுத்துகி ரோம்.

1. இறந்தவர்களில் மேலான நிலையில் உள்ளவர் களும், கீழானநிலையில் உள்ளவர்களுமாக, பலதரப்பட்ட வர்கள் இருப்பதால், கூடியவாறு அவரவரது உற்றார் உற வினரோடு மாத்திரம், தொடர்புவைத்துப் பேசிக்கொள்ளு தல் நலமுடையதாகும். உற்றார் உறவினர் நமது நலனைக் கருதுவதுபோல், பிறர் கருதமுடியாதாகையால், அவர்களு டன் பேசிக்கொண்டிருத்தல் பயனுடையதாகாது.

2. இறந்தவர்கள், நம்மைப்போல் மனிதத் தன்மை' யுடையவர்களாகவும், சிற்றறிவும், சிறுதொழிலும் உடைய வர்களாகவும் இருப்பதால், அவர்கள் சொல்லுகின்ற விஷ யங்களை, அவர்களுடைய அபிப்பிராயமென்று கருதிக் கொள்ளவேண்டுமே தவிர, அவற்றைத் தெய்வ வாக்கு என்றும், அவர்கள் தெய்வநிலையில் நின்று பேசுவதாகவும் கருதிவிடக்கூடாது.

3. மேல் நிலையிலுள்ள சில ஆவி உலகவாசிகளைத் தவிர, மற்றவர்கள், பின்னால் நடக்கக்கூடிய காரியங்களை யும், மேல் உலக சில இரகசியங்களையும், தெரிந்துகொள்ளக் கூடியவர்களாக இல்லை என்பதை அறிந்து, நம்முடைய வயதின் முடிவைப் பற்றியும், பின்னால் நடக்கப்போகும்

இப்பூலோக வாழ்க்கை வரலாற்றைப் பற்றியும் ஜோசியம் கேட்டு, காலத்தை வீணுக்கிக் கொள்ளாமல், நாம் செய்ய வேண்டிய அரிய பெரிய காரியங்களைப் பற்றியும், நம்முடைய வாழ்க்கையை எப்படித் திருத்தியமைத்தால், நாம் நம்மை மேல்நிலைக்குத் தகுதியாக்கிக் கொள்ளலாமென்பது பற்றியும், கேட்டுத் தெரிந்துகொள்வது பயனுடையதாகும்.

4. இறந்தவர்களோடுபேசிக்கொண்டிருந்தாலே,நாம் மேல்நிலை அடைந்துவிடுவோம் என்று கருதிவிடக்கூடாது. அவர்கள் சொல்லுவதைக்கேட்டு, அதன்படி நடைமுறையில் ஒழுகுவதே, நமக்கு நன்மை பயப்பதாகும்.

5. ‘மீடியம்’ சக்திவாய்ந்தவர்கள், பணத்திற்காகச் சதாவும் பேசிக்கொண்டிருக்கச் சம்மதித்தல் கூடாது. ஆண்டவன் அருளியிருக்கும் சக்தியை, சுயநலம் கருதாது, பிறர்நலத்திற்காகப் பயன் படுத்திஞல், மேன்மேலும் ஆண்டவனுடைய அருளுக்குப் பாத்தியமுடையவர்களாவார்கள்.

6. வாரம் ஒருமுறை, இறந்தவர்களோடு உரையாடல் வைத்துக்கொள்ளுவது உசிதமாகும்.

7. சைவ உணவு சாப்பிடுகிற நாட்களில் மட்டுமே, தூய்மையான இடங்களில் வைத்து, இறந்தவர்களோடு உரையாடல் நிகழ்த்துவது, மிகுந்த பயன் தருவதாகும் இவ்வுலகத்தைவிட்டுப் பிரிந்தவர்கள், தங்களுடைய வீட்டிலிருந்து, ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இறந்திருந்தாலும், ஆகாயத்தில் எங்கு இறந்திருந்தாலும், சமுத்திரத்தின் எந்தப்பாகத்தில் இறந்திருந்தாலும், நம்மிடம்வந்து பேச விரும்புகிருர்கள். இறந்தவர்கள் இராணுவத்திலிருந்திருந்தாலும், ஆகாயப்படையிலிருந்திருந்தாலும், சாமானியர்களாக இருந்திருந்தாலும், நம்மிடம் வந்து பேசவிரும்புகிருர்கள். அவர்கள் நீரினலோ, நெருப்பினலோ, அணுக்

குண்டினுலோ, துப்பாக்கியினுலோ, கத்தியினுலோ, விபத்துக்களாலோ, சண்டை நடக்கும் நாட்களிலோ, சமாதானமான நாட்களிலோ இறந்திருந்தாலும், இயல்பாகவே வியாதிகளாலும், யாதொரு வியாதியுமின்றி இறந்திருந்தாலும், இறந்தவர்கள் எல்லோரும், தாங்கள் இவ்வுலகில் வாழும்பொழுது, யாரிடத்தில் அன்புடையவர்களாக இருந்திருந்தார்களோ, அவர்களிடத்தில் வந்து, தாங்கள் உயிரோடிருப்பதையும். தங்களுடைய அன்பு என்றும் அழியாதிருக்கிறது என்பதையும், நிரூபிப்பதற்கும், அறிவிப்பதற்கும் மிகவும் ஆவலுடன் இருக்கிருர்கள்.

ஜீவராசிகள் சகலவற்றிற்கும், மண்ணுலகத்தில் வாழ்வதற்குத் தூல உடல் ஒன்றும், ஆவி உலகத்தில் வாழ்வதற்கு ஆவி உடல் ஒன்றுமாக, ஆண்டவனுல் இரண்டு உடல்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தூலஉடலை உயிர் நேராக இயக்குவதில்லை. ஆவி உடலையே உயிர் நேராக இயக்கி, அதன் மூலம் தூல உடலை இயக்குகின்றது. உடலில் உள்ள சகல அவயவங்களின் உட்கருவிகளும், நாடி, நரம்பு, எலும்பு முதலியவற்றின் ஆதாரங்களும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களும், இரேகத்திலுள்ள 98.4° சூடும், ஆவி உடலிலேயே இருக்கின்றன. இன்பமும், துன்பமும், விருப்பும், வெறுப்பும், தூல உடலால் அனுபவிக்கிற சகல அனுபவமும், ஆவியுடல் மூலமாகவே ஜீவான்மா அனுபவிக்கின்றது. ஆகவே, தூல உடல் ஆவி உடலுக்கு ஒரு கனமான

சட்டைபோல் ஆகின்றதே தவிர, தூல உடல் அழிவதால் மனிதர்களோ, மிருகங்களோ அழிவதில்லை என்ற உண்மை, மறுக்கமுடியாத முறையில் நிலைநாட்டப்பெறுகின்றது. தூல உடலுக்குச் செய்யப்பெறுகின்ற ஈமக்கிரியைகளும் சமாதிகளும், அவற்றில் எழுப்பப்படும் கட்டடங்களும், நம்முடைய தூலமான மேல் சடலத்திற்குரிய இறுதிச் சடங்குகளே தவிர, நம்முடைய சூக்குமமான உள்சடல மாகிய, ஆவிவுடலுக்குரிய இறுதிச் சடங்குகள் இல்லை என்பதும், உறுதிப்படுத்தப்படுகிறது.

ஆகவே, இந்த ஆராய்ச்சியால், ஒருவரை ஒருவர் கொலைசெய்து, அல்லது ஒரு தேசத்தோடு ஒரு தேசம் சண்டையிட்டு, அல்லது தன்னைத்தானே தற்கொலைசெய்து, அழித்துவிடலாமென்று கருதுவது, முடியாத காரியம் என்பதும், அது அறிவின்மையிலும்-அறிவின்மை என்பதும், சந்தேகத்திற்கு இடமின்றித் தெளிவாக்கப்பெறுகின்றன.

இவ்வுண்மைகள், உலகத்தில் எவ்வளவுக்கெவ்வளவு, விரைவில் உணர்த்தப் பெறுகின்றனவோ, எவ்வளவுக் கெவ்வளவு, விரைவாகப் பரப்பப் பெறுகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு, இவ்வுலகிலுள்ள கொலைகளும், சண்டைகளும் நின்று, உலகம் சமாதானமும், சாந்தியும் அடையும்.

மரணபயம் அறவே நீங்கிவிடும். மரணத்தினால் மக்கள் படும் துயரமும் அறவே மாறிவிடும். மரணம் யாவரும் வர

வேற்கத் தக்கதொரு மகிழ்ச்சிகரமான சம்பவம் என்ற உணர்ச்சியும், அது தரும் மன ஆறுதலும் திண்ணமாக வந்துவிடும். தீய காரியங்கள் செய்வதில் மிகுந்த அச்சத்தையும், நல்ல காரியங்கள் செய்வதில் மிகுந்த ஆர்வத்தையும் வேரூன்றச் செய்துவிடும். மேலும், கடவுளும் இல்லை; பூதமும் இல்லை; கண்ணுக்குத் தெரியாத ஆளும் இல்லை; உலகமும் இல்லை; புண்ணியமும் இல்லை; பாவமும் இல்லை; நாம் செய்கின்ற காரியங்களைப் பார்ப்பாரும் இல்லை; நாம் செய்கின்ற பிரார்த்தனைகளைக் கேட்பாரும் இல்லை; பலன் தருவாரும் இல்லை; என்றெல்லாம் வாய்க்கு வந்தவாறு பிதற்றுகின்றவர்களின் சிந்தனையைத் தூண்டிவிட்டு, அவர்களது அனுபவமின்மையையும், அறியாமையையும், அவர்களாகவே உணருமாறும், திருந்துமாறும், அவர்களது உள்ளங்களைப் பண்படுத்தி விடும்.

அவ்வுயர் பண்பாடு விரைவில் உலகெங்கணும் நிலவும் வண்ணம், எல்லாம் வல்ல எம்பெருமான் திருவருள் பாலித்து அருளுமாறு, பிரார்த்தித்து, ஆசீர்வதிக்கின்றோம்.

